**With best Compliments from**




வெளியீடு

**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**

89044 58276. Haridasa.vijayam@gmail.com
Jagannathakesava.blogspot.com

# முனிகுலோத்தமரான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்



**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**
**பெங்களூரு**

முனிகுலோத்தமரான

# ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்

**கன்னடத்தில்:**

**டாக்டர். குருராஜ க்ரு. நிப்பாணி அவர்கள்**

தமிழில்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
8904458276. Haridasa.vijayam@gmail.com
**Jagannathakesava.blogspot.com**

# முனிகுலோத்தமரான
# ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீவாதிராஜ தீர்த்தரின் ஆராதனை நாளான - 21-03-2022
அன்று வெளியிடப்பட்டது.

**தொடர்புக்கு:**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
**8904458276. Haridasa.vijayam@gmail.com**
**Jagannathakesava.blogspot.com**

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**நன்றி! நன்றி!!**

’ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர்’ புத்தகத்தை வெளியிட பொருளுதவி புரிந்தவர்கள்.

**1. Sri. Sugunendran, Coimbatore**
**2. Sri. Ramachandra S/o. Sri. Bhramanni Rao, Singanallur, Coimbatore**
**3. Sri. Balu Bhat, Raaj Bhaavan Chain of Hotels, Chennai**

ஸ்ரீஹரிவாயுகுருகளின் அருள் இவர்கள் அனைவருக்கும் நிரந்தரமாக இருக்கட்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.

# ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தரின் சரித்திரம் மற்றும் மஹிமைகள்

## முன்னுரை

ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர் உடுப்பியின் அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் 35வது பீடாதீஸராக அலங்கரித்த மகனீயர். 64 வருடங்கள் பீடத்தில் அமர்ந்து ஸ்ரீ பூவராஹர், ஸ்ரீ ஹயக்ரீவர் முதலான ஸம்ஸ்தான விக்ரஹங்களின் பூஜை, ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர், ஸ்ரீ பூதராஜருக்கு ஸேவை, பழமை வாய்ந்த கிரந்தங்களை சேகரித்து, ஆராய்ந்து புத்தகங்களாக வெளியிடுதல், ஸிஷ்யர்களுக்கு பாடம், பகவத் தியானம், ஆச்சாரம் நியமம் போன்றவற்றைக் கடைபிடித்தல் என்றே தன்னுடைய ஜீவனத்தை நடத்தியவர். இவருடைய ஆஸ்ரம குரு ஸ்ரீ விஸ்வேந்திர தீர்த்தர் மற்றும் ஆஸ்ரம ஸிஷ்யர் ஸ்ரீ விஸ்வ வல்லப தீர்த்தர் ஆவர். இவருடைய ஆராதனை ஸ்ராவண ஸூத்த பஞ்சமி. நான்கு முறை பரியாய பீடத்தில் அமர்ந்து உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணனை பூஜிக்கும் பாக்கியத்தை பெற்றவர். தம்முடைய ஜப தப அனுஷ்டான மந்திர ஸித்தியினால் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு அனுக்ரஹம் புரிந்து அவர்களின் கஷ்டங்களை பரிகாரம் செய்தவர். மத்வ மதப்பரம்பரையில் உள்ள பல்வேறு ஞானிகளின் மூல பிருந்தாவனம், தாஸர்களின் புண்ணிய ஸ்தலங்களுக்கு விஜயம் செய்து தம்முடைய கவுரவத்தை செலுத்தியவர். பழம்பெரும் கிரந்தங்களை சேகரித்து ஆராய்ந்து வெளியிட்டு பெரும் தொண்டாற்றியவர். ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் மேல் கொண்ட பக்தியினால், ராஜரின் பல்வேறு கிரந்தங்களை புத்தகங்களாக வெளிக் கொணர்ந்தவர். கிருஷ்ணாபுரம் மடத்தின் ஸ்ரீ வித்யாஸாகர தீர்த்தர் முதலானவர்களுக்கு பாடங்களை கற்பித்தவர். கோசாலை, குருகுலம் போன்றவற்றை நிர்மாணம் செய்ததுடன், ஸோதே, உடுப்பி போன்ற பல்வேறு பகுதிகளிலும் முன்னேற்றங்களை ஏற்படுத்தியவர். ஸோதேவில் பிருந்தாவனஸ்தராகி இன்றும் வேண்டும் பக்தர்களுக்கு அருள்புரிபவர்.

ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர் 1934ம் ஆண்டு ஸ்ரீமுக நாம ஸம்வத்ஸரம், புஷ்ய மாதம் கிருஷ்ண பக்ஷ த்ரயோதசி அன்று உடுப்பி அருகில் உள்ள உத்யாவர் என்ற இடத்தில் ஸ்ரீ கிருஷ்ணாச்சார்யா மற்றும் ஸ்ரீ கிருஷ்ணவேணி தம்பதிகளுக்கு மகனாக அவதரித்தார். பூர்வாஸ்ரமத்தில் இவருடைய பெயர் மாதவா என்பதாகும். ஜாதகர்மம், நாமகரணம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்கள் சரியான காலத்தில் மிகச்சிறப்பாக நடந்தது. குருமஹனீயர் சிறுவயதிலேயே விளையாட்டில் ஆர்வம் காட்டியதில்லை. பெரும்பாலும் பக்தி மார்க்கத்திலேயே செலவழித்தார். இவருடைய தகுதியை அறிந்து ஸோதே மடத்தின் ஸ்ரீ விஸ்வேந்திர தீர்த்தர் இவருக்கு ஸந்யாஸ ஆஸ்ரமம் அளிக்க சங்கல்பித்தார். இவருடைய பூர்வாஸ்ரம பெற்றோர்களுக்கும் ஸ்ரீ ஹரி ஸ்வப்னத்திலே ஸுசனை செய்ய, அவர்களும் இதுவே பகவத் சங்கல்பம் என மகிழ்ந்து ஒப்புதல் அளித்தனர். 1963ஆம் ஆண்டு ஸ்வபானு நாம ஸம்வத்ஸரம் பாத்ரபத மாத ஸுக்லபக்ஷ சதுர்த்தி அன்று ஸ்ரீ விஸ்வேந்திர தீர்த்தர், குருமஹனீயரின் ஒன்பதாவது வயதில் அவருக்கு ஸன்யாஸ தீக்ஷையளித்து 'ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர்' என்று நாமகரணம் செய்தார். குரு ஸ்ரீ விஸ்வேந்திர தீர்த்தர் ஸன்யாஸ ஆஸ்ரமம் அளித்த ஒரு மாதம் ஐந்து நாட்களிலேயே பிருந்தாவனஸ்தராக சிறுவயதிலேயே மடத்தை நிர்வகிக்கும் பெரும் பொறுப்பை ஏற்றார் ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர். அதன் பிறகு கனியூர் மடத்தின் ஸ்ரீ வித்யா ஸமுத்திர தீர்த்தரிடம் ஸாஸ்திர பாடங்களைப் பயின்றார்.

ஜபம், அனுஷ்டானம், ஸதாசாரம் மற்றும் ஸன்யாஸ ஆஸ்ரம நியமங்களைத் தவறாது கடைபிடித்தவர் ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர். எல்லாவற்றைக் காட்டிலும் ஞானத்தின் பாலும், கிரந்த பிரச்சாரத்திலும் கொண்ட ஈடுபாட்டினால் பழம்பெரும் கிரந்தங்களை (பனை ஓலைகளை) சேகரித்து, ஆராய்ச்சி செய்து புத்தகங்களாக பதிப்பித்து வெளியிட்டு சேவை புரிந்துள்ளார். பெரும்பாலும் ஸோதேவிலேயே தங்கியிருந்து, கிரந்தங்களை ஆராய்வதிலும் ஜபம், தியானம், பூஜை மற்றும் பாட பிரவசனங்களிலே காலத்தைக் கழித்தவர். பண்டிதர்களை கௌரவிப்பதிலும் முன்னோடியாக விளங்கியவர். அடக்கத்தின் அடையாளமாக திகழ்ந்த குருமஹனீயரிடத்தில் கோபத்தையோ கடின வார்த்தைகளை பார்க்கவே இயலாது. ஆதலால் அவர் அனைவரிடமும் நட்புறவுடன் பழகி, மடத்தின் நிர்வாகத்தை மிகச் சிறந்த வகையில் நடத்தி வந்துள்ளார். மிகச்சிறந்த தபஸூ மற்றும் மந்திர ஸித்தியினால் ஆயிரக்கணக்கான பக்தர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றுவதிலும்,

கஷ்டங்களை பரிஹாரம் செய்வதிலும் ஸித்த புருஷராக இருந்து அனுக்கிரகம் புரிந்தவர். இருப்பினும் கூட அவை அனைத்தையும் ஸ்ரீ வாதிராஜர் மற்றும் ஸ்ரீ பூதராஜரின் அனுகிரகத்தால் மட்டுமே நடந்தது என்று நினைவில் கொண்டு ஸ்மரணை செய்தவர்.

ஸ்ரீ வாதிராஜ தீர்த்தரின் மேல் கொண்ட அபரிமிதமான பக்தியினால் ராஜரின் பல்வேறு கிரந்தங்களை புத்தகங்களாக வெளிக்கொணர்ந்து சேவை புரிந்துள்ளார். ஸ்ரீ வாதிராஜர் தீர்த்தரின் மகாபாரத லக்ஷாலங்காரத்தை முழுவதுமாக வெளியிட்டவர். ஸ்வப்ன ஸூசனையாகி பஞ்ச பிருந்தாவன ஸன்னிதானத்தின் முன்னால் ஸ்ரீ வாதிராஜர் தீர்த்தரின் ஸ்வப்ன பிருந்தாவனாக்யானத்தை முழுவதுமாக வடித்து 'ஆக்யான மந்திரம்' ஒன்றையே ஸோதேவில் உருவாக்கியுள்ளார் குருமகனீயர். ஸோதேவில் 2006ம் ஆண்டு, 'பாவி ஸமீர' குருகுலத்தையும் நிர்மாணித்து அதன் மூலமாக மத்வ ஸித்தாந்தங்களின் பிரச்சாரத்திற்கு வித்திட்டவர். ஸமஸ்கிருதத்திலும் மத்வ ஸித்தாந்தத்திலும் அவருக்கிருந்த மிகச்சிறந்த ஞானத்தினால், அவருடைய பாடம் எடுக்கும் முறை தனித்தன்மை வாய்ந்ததாக அமைந்தது. உடுப்பி கிருஷ்ணாபுரம் மடத்தின் ஸ்ரீ வித்யாஸாகர தீர்த்தர் மற்றும் பல்வேறு சிஷ்யர்களுக்கு ஸாஸ்திர பாடத்தை எடுத்து அவர்களை மிகச்சிறந்த வகையில் தயார் செய்தவர் ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர்.

1948-49, 1964-65, 1980-81 மற்றும் 1996-97 காலகட்டங்களில் நான்கு முறை உடுப்பியில் பர்யாய பீடத்தில் அமர்ந்து ஸ்ரீ கிருஷ்ணனின் பூஜையை மேற்கொண்டவர். அக்காலகட்டத்தில் 'யதிகுல திலக' என்ற விருதை இவருக்கு வழங்கி கவுரவித்து உள்ளனர். மூன்றாவது பரியாய காலத்தில் ஸ்ரீ வாதிராஜர் தீர்த்தரின் 500வது வருட வைபவத்தை மிகச்சிறப்பாக கொண்டாடி உள்ளார். அதே நேரத்தில் பாரத தேசம் முழுவதும் ஹரிகதா போட்டியை நடத்தி தத்வ பிரச்சாரம் செய்தார். ஸோதேயில் பக்தர்கள் வசதிக்காக 'த்ரிவிக்ரம தாம' என்னும் விடுதியையும், உடுப்பியில் 'ஸ்ரீ பூவராஹ' விடுதியையும் கட்டி பெரும் உதவி புரிந்துள்ளார். நான்காவது பரியாய காலத்தில் ஸ்ரீ கிருஷ்ண மடத்திலே வாதிராஜ மந்திரத்தையும் கட்டியுள்ளார்.

கன்னியாகுமரி முதல் வஸுதாரா வரை யாத்திரை மேற்கொண்டு கங்கை முதலான புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, நவ பிருந்தாவனம், மந்த்ராலயம், உத்தனூர், வேணிஸோமபுரம், சிப்பகிரி, மானவி, சீக்லபர்வி, கெஞ்சனகுட்டா, ஹம்பி, திருக்கோவிலூர், ஸவனூர், கும்பகோணம், ராஜமகேந்திரி, ஸங்கிலி, ஹொலெஹொன்னூர், மாதனூர், பீமனகட்டே போன்ற பகுதிகளுக்குச் சென்று மத்வ மத பீடாதிபதிகளின் மூல பிருந்தாவனங்கள் மற்றும் தாஸர்களின் புண்ணிய ஸ்தலங்களில் தமது கவுரவத்தை செலுத்தியவர். கும்பாஸி, ஹுவினகரே, நாரலா, மத்யவாட, கெஞ்சகாரு, நட்டெந்தாடி போன்ற பல்வேறு பகுதிகளில் ஸ்ரீ மடத்தின் கட்டிடங்களை புதுப்பித்து விரிவாக்கம் செய்துள்ளார். சென்னையில் உள்ள ஸ்ரீ மடத்திலும் ஸ்ரீ முக்ய பிராணரை பிரதிஷ்டை செய்து உள்ளார். ஹுவின கரெயில் இவர் ஆரம்பித்த கோசாலையில் இன்றும் நூற்றுக்கணக்கான பசுக்கள் பராமரிக்கப்படுகின்றன. குறிப்பாக ஸோதேயில் தங்கும் அறைகள், பூஜை மந்திரம், சமையல் அறை, போஜன சாலை போன்றவற்றைக் கட்டி ஸ்ரீ வாதிராஜர் தீர்த்தருக்கு சமர்ப்பணம் செய்து உள்ளார்.

அறுபத்தி நான்கு ஆண்டுகள் ஜபம், பூஜை தத்வ பிரச்சார சேவைகள் புரிந்த மஹனீயர், 18-8-2007 ஸ்ராவண ஸூத்த பஞ்சமி (நாக பஞ்சமி, கருட பஞ்சமி) அன்று தினப்படியாக செய்யக்கூடிய ஜபம் அனுஷ்டானம் மற்றும் பூஜைகளை முடித்துக் கொண்டு, ஹரிதாஸ வைபவத்தில் கலந்துகொண்டு, அனுக்ரஹ ஸந்தேஸம் அருளி, பிக்ஷைக்கு பிறகு பக்தர்களுக்கு பல மந்த்ராக்ஷதை அளித்த பிறகு மதியம் 2 மணி அளவில் "ராமா ராமா ராமா" என்று ஸ்மரித்துக் கொண்டே தம்முடைய தேகத்தை தியாகம் செய்து, ஹரி பாதம் அடைந்து பிருந்தாவனஸ்தரானார் குரு மஹனீயர். ஸ்ரீ ஹரி வாயு வாதிராஜரின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்கு பாத்திரரான ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தர் இன்றும் பிருந்தாவனத்தில் இருந்து கொண்டு அவரை வேண்டும் பக்தர்களுக்கு அருள்புரிந்து வருகிறார்.

இத்தகைய மகிமைகள் பல பொருந்திய ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தரின் சரித்திரம் மற்றும் மஹிமைகளைக் கன்னடத்தில் தொகுத்து வழங்கிய பண்டிதர் குருராஜ நிப்பானி அவர்களின் படைப்புகளை, 'ஜகன்னாதகேஸவ' திரு.சத்தியநாராயணன் அவர்கள் மிக அழகாக தமிழில்

மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவர் ஏற்கனவே வெளியிட்டுள்ள 'ஸ்ரீ ஸத்ய போத தீர்த்தர்', 'ஸ்ரீ ஸத்ய வீர தீர்த்தர்', 'ஸ்ரீ ஸத்ய த்யான தீர்த்தர்', 'ஸ்ரீ ரகூத்தம தீர்த்தர்', 'ஸ்ரீ விஜய தாஸர்' போன்ற மஹனீயர்களின் சரித்திரங்கள் மற்றும் மஹிமைகள் பற்றியதான புத்தகங்களின் வரிசையில் இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீ பூவராஹ ஸ்வாமி ஆயுள், ஆரோக்கியம், மன அமைதி போன்றவற்றை அருளி, இதுபோல இன்னும் பல நூல்களை வெளியிட பிரார்த்தனை செய்கிறேன்.

ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !!

மேடவாக்கம், சென்னை 'பிரஸங்க பூஷணம்', 'பிரவசன பூஷணம்','மத்வரத்னா'
27th Feb 2022 S. லக்ஷ்மிபதிராஜா

# ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்

|| ஸ்ரீபதிர்மானதோ நः ||
| ஸ்ரீராமகிருஷ்ண வேதவ்யாஸ ஹயவதன பூவராஹ |
| நரஸிம்மாபின்ன ஸ்ரீரமா த்ரிவிக்ரமாய நமः |
| ஸ்ரீமத்வ வாதிராஜௌ விஜயதே |
| நௌமி ஸத்வேத வேத்யம் |
| ஸ்ரீபூதராஜாய நமः |
| பாதி ஸ்ரீஜயதீர்த்தவாக் | வந்தே வ்ருந்தாவனாசார்யான் |
| ஹயக்ரீவமுனீன் பஜே |
| ஸ்ரீபுரந்தராதி தாஸ வர்யேப்யோ நமோ நமः |
| ஸ்ரீராகவேந்திரः ஸகலப்ரதாதா |
ஸத்யபோதோऽஸ்து மே முதே |
| .. ரகுப்ரேம தீர்த்தம் வந்தே ஹ்யபீஷ்டதம் |
| ஸ்ரீவிஷ்வோத்தம யோகீந்த்ரம் வந்தேऽஹம் வாதிராட்ப்ரியம் |
| ஸந்தः ஸந்து க்ருபாவந்தோ குருராஜ பதாஸ்ரயாः |

## முனிகுலோத்தமர் ஸ்ரீவிஷ்வோத்தமர்

### 1. பரம்பரை, ஜனனம், அத்யயனம் முதலியன

ஸ்ரீமன் மத்வாசார்யர் மற்றும் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தாசார்யரின் பரம்பரை

யுக யுகாந்தரங்களிலிருந்தும், பாரதமே தர்மத்தின் இருப்பிடமாக இருக்கிறது. சில சமயங்களில், அசுர ஸ்வபாவ சக்திகளால், தர்மம் குறைவதும் உண்டு. அந்த சமயங்களில், தர்மத்தை காப்பதற்காகவும், துஷ்டர்களை அழிப்பதற்காகவும், பகவந்தன் அவதரிக்கிறான். தேவதைகள், ஸாத்விக ஷக்தியின் ரூபம். அந்த பகவந்தனின் ஆணைப்படி அவர்களும் பூமிக்கு இறங்குகின்றனர். அதர்மத்தின் ஆர்ப்பாட்டத்தை அடக்குகின்றனர். துஷ்ட சிக்ஷண – சிஷ்ட ரக்ஷண – இது ஒரு நிரந்தரமான செயல் ஆகும். துஷ்ட ஷக்தியை அழிப்பது பல விதமாக நடைபெறுகிறது. முக்கியமாக தைஹிக மற்றும் வைசாரிக. பல முறை பகவந்தன் தானே அவதரித்து, இத்தகைய செயல்களை செய்தாலும், வாயுதேவரும் சில முறை அவதரித்ததுண்டு. அவர் ஞான பல பூர்ணர். மற்ற தேவதை, ரிஷி, முனிவர்களும் ஸ்வோத்தமரின் ஆவேசத்திற்கேற்ப, துஷ்ட நிக்ரகத்தினை செய்கின்றனர்.

க்ருத, த்ரேதா, த்வாபர யுகங்களில் பகவந்தன் தானே அவதரித்தான். அவனுடைய ஆணையினால், ஸ்ரீவாயுதேவர் மற்றும் மற்ற தேவதைகளும் அவதரித்தனர். ஸ்ரீஹரியின் துஷ்ட சிக்ஷண, சிஷ்ட ரக்ஷண காரியத்தில், அற்புத சேவை செய்து தன்யர் ஆயினர். இதில் ஸ்ரீவாயுதேவர், முக்கியமானவர். ஹனும ரூபத்தினால் ஸ்ரீராமனையும், பீம ரூபத்தினால் ஸ்ரீகிருஷ்ணனையும் வணங்கி, தம் சேவையினை செய்தார். கலியுகம் துவங்கியது. அசுரர்கள் பல்வேறு ரூபங்களைக் கொண்டு பிறந்து வந்தனர். ஸனாதன மற்றும் வேதாதி சாஸ்திர சம்மதமான விஷயங்களை மறைத்து, களங்கம் ஏற்படுத்தினர். ஸித்தாந்தம் மறையத் தொடங்கியது. யதார்த்த ஞானம் மறைந்தது. விவேகிகளின் சந்தேகங்களுக்கு தீர்வு கிடைக்காமல் போனது. உபாசனை குறைந்தது. அறிவு அஸ்தமனம் ஆயிற்று. சிந்தனை நின்றது. முமுக்ஷுகள் நிலை தடுமாறினர். ஆனாலும், அவர்களுடைய ஸ்ரீஹரி குரு பிரார்த்தனை குறையவில்லை. அவர்களுடைய பிரார்த்தனை சுய நலத்திற்காக அல்ல, லௌகிகமான லாபத்திற்கும் அல்ல, நிர்துஷ்ட ஞானத்திற்காக, ஞானபூர்ணனான ஸ்ரீஹரியின் கருணைக்காக. ஸ்ரீஹரி 'த்ரியுகஹுதி' என்னும் அறிவு அவர்களுக்கு இருந்தது. ஆனாலும், ஸ்ரீஹரியிடம் சென்று முறையிட்டனர்.

ஸ்ரீஹரி கருணையைக் காட்டினான். வாயுதேவருக்கு ஆணையிட்டான். வாயுதேவர், பரசுராம க்ஷேத்திரத்தின் பாஜக'வில் அவதரித்தார். இந்த மூன்றாம் ரூபம், ஞானபலத்தை வெளிப்படுத்துவதற்காக ஏற்பட்டது. வாசுதேவனாக பாலலீலையைக் காட்டினார். ஸன்யாசம் ஏற்றுக்கொண்டு, கிருதி ரசனைக்கு ஆணையைப் பெற்றார். சர்வோத்தம தேவனின் ஆணையை ஜீவோத்தம தேவன் நிறைவேற்றினார். ஸூத்ரபாஷ்ய முதலான கிருதிகளை இயற்றினார். அனைத்து இடங்களிலும் சஞ்சரித்து வேதாதி சாஸ்திரத்தை ஒப்புக் கொள்ளாத மதங்களை புறக்கணித்தார். முக்தி, முகுந்தனின் பிரசாதமே என்று நிர்ணயித்தார். அதனைப் பெறும் விதத்தைக் கூறியவர் ஆசார்ய மத்வர். ஆகையால், 'ஆனந்ததீர்த்த' என்னும் பெயர் பொருத்தமாக ஆனது. மத்வரின் தத்வ விசாரங்கள், கிரந்தங்கள் ஆகியவை வைதிக மதத்தின் ஸாரம் ஆகும். அவருடைய ஸதாசாரம், மக்கள் தேவதா ஆராதனை செய்வதற்கு கொடுத்த வரம்.

ஆசார்ய மத்வர், ருக்மிணிலோல ஸ்ரீகிருஷ்ணனை உடுப்பியில் நிறுவினார். ஸாதகர்களின் சாதனைக்கும், காரிய ஸித்திக்கும் காரிய க்ஷேத்ரமாக உடுப்பி ஆகியது. அதிகாரிக தேவதைகளே பூமிக்கு இறங்கி, பவமான குருகளிடமிருந்து பாவன உபதேசம் பெற்றனர். (தம் மத்வம் மாருதம் ஸர்வே பரிவாரதயா ஸதா | ஸம்ஸேவிதும் ஸுரா பூமௌ அவதேருரிதி ஸ்புடம்). இப்படியாக குரு மத்வரின் பரம்பரை முன்னே வளர்ந்தது. தத்வ பிரசாரத்துடன், பகவத் ஆராதனா பத்ததியும் விதிப்படி நடந்து வந்தது. இந்த இரு செயல்களும் நடக்கும் இடங்களே மடங்கள். அனைத்து மாத்வ மடங்களும், தத்வ பிரசார செயல்களை செய்யத் துவங்கின. சிஷ்யர்களை பெறுவதுடன், சன்யாஸ ஆசிரமத்தைப் பெறுபவர்களும் தேவைப்பட்டனர். பரம்பரை திடமாக வளர்ந்தது. ஹரி குரு அருளுடன் அனுஷ்டானம் சாதனையாயிற்று. பக்தர்களின் துக்கம் விலகியது. பரம்பரையின் பீடாதிபதிகளின் சஞ்சாரம், தத்வ ஸ்தாபனைக்கு காரணம் ஆயிற்று. அங்கங்கு இருக்கும் சஜ்ஜனர்கள், தக்க உபதேசம் பெற்று, தன்யர் ஆயினர். அது வரை பெற்றிருந்த கெட்ட உபதேசத்தினால் வந்த கெட்ட சிந்தனைகள் விலகின. முமுக்ஷுகள் முக்தி பிரஸாதத்தைப் பெற்றனர். இது உலகிற்கு மத்வர் கொடுத்த சிறப்பு பரிசு, மகிமை ஆகும்.

ஆசார்ய மத்வரின் சிஷ்ய சமூகத்தில், அவருடைய சகோதரர் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர் மிக முக்கியமானவர். எதேஷ்டமான பக்தி, ஞான, வைராக்கியம் ஆகியவற்றைக் கொண்டவர். இன்றைக்கும் குமார பர்வதத்தில் தவம் செய்து கொண்டிருக்கிறார். கலிகால பலத்தினால் அடுத்து சித்தாந்தம் குறைந்து அழியும்போது, அதனை மறுபடி நிலை நிறுத்தப்போகிறவர் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர். இவருக்கு இரு சிஷ்யர்கள். ஸ்ரீவியாஸ தீர்த்தர் மற்றும் ஸ்ரீ அனிருத்த தீர்த்தர்.

* ஸ்ரீவியாஸ தீர்த்தர், ஆசார்ய மத்வருக்கு மிகவும் பிடித்தமானவராக இருந்தார். அனைத்தையும் கற்றறிந்த சாஸ்திர ஞான சம்பன்னர். அன்றைய பரம்பரையின் (கும்பாஸி மட – இன்றைய ஸோதே ஸ்ரீவாதிராஜ மடம்) அதிபதியாக இருந்தார். ஸ்ரீ அனிருத்த தீர்த்தரிடமிருந்து சுப்ரமண்ய மட பரம்பரை துவங்கியது.
* ஸ்ரீவியாஸ தீர்த்தரின் சிஷ்யரான ஸ்ரீவேத்ய தீர்த்தர், எப்போதும் பாட பிரவசனங்களில் ஈடுபட்டிருந்தார்.
* அவருடைய சிஷ்யர், மந்திர ரகசியங்களை அறிந்தவரான ஸ்ரீவேதகர்ப்ப தீர்த்தர்.
* பிறகு பீடத்திற்கு வந்த ஸ்ரீவரேஷ தீர்த்தர், சர்வமூலாதி அனேக கிரந்தங்களை அறிந்த வல்லவராக இருந்தார்.
* அவருக்குப் பிறகு வந்த ஸ்ரீவாமன தீர்த்தர் நிரந்தரமாக ஸ்ரீமத் பாகவத பிரவசனத்தில் ஈடுபட்டிருந்தார்.
* அவருடைய உத்தராதிகாரிகளான ஸ்ரீவாசுதேவ தீர்த்தர் ஆசார்ய மத்வரின் பிரதீகமாக இருக்கும் பிரம்மஸூத்ர பாஷ்ய பாட பிரவசத்தில் ஈடுபட்டிருந்தார்.
* அவருடைய சிஷ்யரான ஸ்ரீவேதவியாஸ தீர்த்தர் வாக்யார்த்த கோவிதராக, பிரதிவாதி பயங்கரராக இருந்தார்.
* இவருக்குப் பிறகு வந்த ஸ்ரீவராஹ தீர்த்தர் ஏகாந்த பிரியராக, யோகிகுல திலகராக இருந்தார். * இவருடைய சிஷ்யரான ஸ்ரீவேதாத்ம தீர்த்தர், வேதவேதாந்த பாரங்கதராகவும், கவிகளாகவும் இருந்தார்.

* இவருடைய உத்தராதிகாரிகளான ஸ்ரீவிஷ்வவந்த்ய தீர்த்தர்-1, அபாரமான ஆளுமை உள்ளவராக அனைத்து கலைகளிலும் வல்லவராக இருந்தார்.
* இவருடைய வர குமாரரான ஸ்ரீரத்ன கர்ப்ப தீர்த்தர், அணிமாதி ஸித்தி ஸம்பன்னராக இருந்தார்.
* பிறகு வந்த, ஸ்ரீவேதாங்க தீர்த்தர், வேதாந்தாதி அனைத்து சாஸ்திரங்களிலும் சிறந்தவராக இருந்தார். டீகா, டிப்பண்யாதி ஸ்ரேஷ்ட கிரந்த கர்த்ருகளாக இருந்தார்.
* இவருடைய உத்தராதிகாரிகளான ஸ்ரீவித்யாபதி தீர்த்தர், ஸ்ரீகிருஷ்ணனின் விசேஷ சேவையை செய்து, சிறந்த சாஸ்திர பண்டிதராக இருந்தார்.
* பிறகு பீடம் ஏறிய ஸ்ரீவிஷ்வ வந்த்ய தீர்த்தர்-2, தம்முடைய நிரந்தர தவ ஸித்தியினால் தத்வ விரோதிகளை வென்றவர் ஆனார்.
* இவருடைய வர குமாரரான ஸ்ரீவிஷ்வ தீர்த்தர், ஸித்தாந்த பிரசார தீக்ஷையைக் கொண்டிருந்தார்.
* பிறகு வந்த, ஸ்ரீவிட்டல தீர்த்தர், ஸ்ரீவேதவியாஸரை விசேஷமாக ஆராதனை செய்து, அருள் பெற்றவராக இருந்தார்.
* இவருடைய கரகஞ்ஜ சஞ்சாதரான ஸ்ரீவரதராஜ தீர்த்தர்-1, ஸித்தாந்த பிரசாரத்திற்காக சஞ்சாரம் செய்து, கும்பாஸி மடத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து, அங்கேயே வ்ருந்தாவனஸ்தர் ஆனார்.

* பிறகு உத்தராதிகாரிகளாக வந்த ஸ்ரீவாகீஷ தீர்த்தர், வாதிராஜ குருகளின் ஆசிரம குருகள் ஆவார். இவருடைய பிரார்த்தனைக்கு செவி சாய்த்த ஸ்ரீபூவராக தேவர், ஸ்ரீலாதவ்ய ருஜுதேவதையின் அவதாரத்திற்கு ஆணையைக் கொடுத்து ஸ்ரீராமாசார்ய தம்பதிகளுக்கு அருளினார். அவர்களுக்குப் பிறந்த குழந்தையை, அப்போதே கண்டு ‘பாவீவாயோ நமஸ்துப்யம் ருஜுவர்ய ப்ரஸீத ந:’ என்று கூறி, ஸ்ரீராஜரின் ஸ்வரூபத்தை அப்போதே கண்டுகொண்ட குரூத்தமர் அவர். ஸ்ரீவாகீஷ தீர்த்தர், முக்காலும் உணர்ந்தவர். பாட பிரவசனத்தில் நிரந்தரமாக ஈடுபட்டவர். திவ்ய தவ ஸித்தியைக் கொண்டவராகவும் இருந்தார்.
* ஸ்ரீவாகீஷ தீர்த்தரின் கரகமல சஞ்சாதரே லாதவ்ய ருஜுதேவதையான பாவிஸமீர ஸ்ரீமத் வாதிராஜ குருஸார்வபௌமர். இந்த பரம்பரையின் முகுடமணி. பூமி ஸ்பர்ஷம் இல்லாத ஜனனம். ஊர்த்வ பத்ரிக்குச் சென்றது. பர்யாய காலத்தை நீட்டியது. அரச குடும்பத்தின் பிரச்னைகளை விலக்குதல். அபம்ருத்யு பரிகரித்தல். ஸ்ரீஸோதா க்ஷேத்ர நிர்மாணம். நூற்றுக்கும் மேற்பட்ட கிரந்தங்களை இயற்றுதல். ஸ்ரீவாயுதேவரைப் போல பிராணாதி பஞ்சரூப ஸ்வீகரணம். பஞ்ச தேஜோரூபங்களால் பஞ்ச வ்ருந்தாவனத்தில் பிரவேசம். 120 ஆண்டுகள் காலம் வாழ்தல். 113 ஆண்டுகள் சன்யாச ஆசிரமத்தில். 83 ஆண்டில் வேதாந்த சாம்ராஜ்யாதிபதியாக திகழ்தல். வ்ருந்தாவன பிரவேசத்திற்குப் பிறகு, ஸ்வப்ன மூலமாக, பராபர தத்வ, ஸ்வரூப மஹிமா, வ்ருந்தாவன மஹிமாதி போதனை செய்தல். இன்றைக்கும் சேவைக்காக வரும் பக்தர்களுக்கு அருள்தல் என இந்த அனைத்திற்கும் காரணமானவர் ஸ்ரீராஜர்.
* பிறகு பீடத்திற்கு வந்தவர், ஸ்ரீவேதவேத்ய தீர்த்தர். இவர் சாஸ்திர சம்பன்னர். கவ்ய பத ருஜு தேவதை இவரே. ஸமபூஜாதி சம்பிரதாயத்தை துவக்கி வைத்தவர். ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ பராகு சொல்லும் வழக்கம், ஸ்ரீவேதவேத்யராலேயே துவக்கப்பட்டது. ஸ்ரீராஜரின் கருணை வேண்டுமெனில், இவருடைய அருள் வேண்டும் என்று ஆக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.
* ராஜரிடமிருந்தே சாஸ்திர சிரவணம் செய்தவரான ஸ்ரீவித்யாநிதி தீர்த்தரே இவருடைய வரகுமாரர்.
* பிறகு உத்தராதிகாரிகளான ஸ்ரீவேதநிதி தீர்த்தர் சம்பிரதாய கோவிதர், கிரந்தங்களை இயற்றியவர் மற்றும் ஏடமூகனாக இருந்த ஒரு பிராமணன் மூலமாக வ்ருந்தாவனாக்யான சிரவணம் செய்து, அதனை எழுத வைத்தவர். ஸ்ரீராஜரின் ஆணைப்படி, அணுவ்ருந்தாவனாக்யானத்தை சிலையில் வடித்த மகான். ஸோதெயின் ஸ்ரீத்ரிவிக்ரம தேவாலயத்தின் எதிரில், ஒரு அற்புத த்வஜஸ்தம்பத்தை நிறுவியவர்.
* இவருக்குப் பிறகு, பீடத்திற்கு வந்தவர் ஸ்ரீவரதராஜ தீர்த்தர்-2. ஸ்ரீராஜரின் கருணையால் ஸ்ரீகிருஷ்ண பர்யாய பூஜையை சிறப்பாக நிறைவேற்றியவர்.
* இவருடைய வர குமாரரான ஸ்ரீவிஷ்வாதிராஜ தீர்த்தர், ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்திலேயே அதிக காலம் இருந்து, எப்போதும் ஸ்ரீஸுதாதி கிரந்தங்களின் பாட பிரவசனஷீலராக இருந்தார்.

* பிறகு வந்த வித்வத் சக்ரவர்த்திகளான ஸ்ரீவாதிவந்த்ய தீர்த்தர் பாட பிரவசனங்களிலும், வாத பிரதிவாதங்களிலும், க்ருதி இயற்றுவதிலும் சிறந்தவராக இருந்தார்.

* இவருக்குப் பிறகு வந்தவரான, ஸ்ரீவிஷ்வ வந்த்ய தீர்த்தர்-3, பல கிரந்தங்களை இயற்றியதுடன், ஸ்ரீராஜரின் சன்னிதானத்தில், அவருடைய ஸ்ரீயுக்திமல்லிகா கிரந்தத்தை பல முறை பாட பிரவசனம் செய்த தன்யர்.

* அடுத்து பீடத்திற்கு வந்த, ஸ்ரீவிபுதவர்ய தீர்த்தர், ஸ்ரீமத்வ - வாதிராஜரின் சேவையை நிரந்தரமாக செய்து, சாஸ்திர பாட, பிரவசனங்களில் ஈடுபட்டிருந்தார். விஷ்ணு சஹஸ்ர நாமத்திற்கு வியாக்யானம், ஸுபத்ரா ஹரண காவியங்களை இயற்றிய மகான். ஸோதேயில் இருந்த மடத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தார்.

* பிறகு பீடத்தில் ஏறிய ஸ்ரீ விஷ்வநிதி தீர்த்தர், தத்வ பிரசாரத்திற்காக விசேஷ சஞ்சாரம் செய்தார். ஸ்ரீமத் பாகவத மற்றும் ஸ்ரீமன் நியாய ஸுதாதி கிரந்தங்களில் உத்தம ஆளுமையைப் பெற்றிருந்தார்.

* இவருடைய சிஷ்யர் ஸ்ரீவிஷ்வாதீஷ்வர தீர்த்தர். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் பரமகுருகளான இவர், ஆக்யானத்தில் குறிப்பிடப்பட்டவர். விப்ரபரமகுருகள் என்று அறியப்பட்டவர். பவ்ய வியக்தித்வம் கொண்ட மகா மேதாவி. இவருடைய ஆளுமைக்கு அனைவரும் ஈர்க்கப்பட்டிருந்தனர். ஸ்ரீகளவருக்கு ஸ்ரீமத் பாகவதம் மனப்பாடமாக இருந்தது. வ்ருந்தாவனாக்யானத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீராஜரின் ஆணையை பின்பற்றிய பெருமை இவருடையது.

* பிறகு பீடத்திற்கு வந்தவர் ஸ்ரீவிஷ்வேஷ தீர்த்தர். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யருக்கு குருகளாக இருந்ததால் 'விப்ரகுரு' என்று அழைக்கப்பட்டவர். ஸ்ரீகுருராஜரின் அருளைப் பெற்றவரான ஸ்ரீகளவரின் தேஜஸ், பாண்டித்யம், ஸித்தி ஆகியவை அவருடைய சிறிய வயதிலேயே அனைத்து இடங்களிலும் பரவியிருந்தது. இவருடைய ஏகாந்த தவத்திற்கு மெச்சி, வாக்தேவி இவருடைய நாக்கின் மேல் ஸ்ரீகாரம் எழுதி, அருளினார். கொச்சி மகாராஜா இவருடைய ஸித்தி பிரபாவத்திற்கு மயங்கி, இவரிடமிருந்து மத்வ தீக்ஷையைப் பெற்று, சிஷ்யத்வம் பெற்று, மத்வ சாஸ்திரங்களைப் படித்து, தன்யர் ஆனார். குருகள் இருக்கும்போதே, அவருடைய ஆணைப்படி, சிஷ்யர்களை சேர்த்துக் கொண்டார். அவரே, ஸ்ரீவிஷ்வப்ரிய தீர்த்தர் (ஸ்ரீவிருந்தாவனாசார்யர்). ஸ்ரீகளவரின் காலத்தில் உடுப்பியின் ஸ்ரீகிருஷ்ண மடத்திற்கு மற்றும் ஸோதெ ஸ்ரீவாதிராஜ மடத்திற்கு எதேஷ்டமான தான, சன்மானங்கள் வந்ததாக தெரிகிறது. ஸ்ரீவிஷ்வேஷ தீர்த்தர், வாக்யார்த்த விஷாரதராக இருந்தார். தாம் சஞ்சரித்த அனைத்து இடங்களிலும், பிரதிவாதிகளுடன் வாக்யார்த்தம் செய்து, ஜயபத்திரம் பெற்றார். இவர் குருகள் இருக்கையிலேயே, ஹொன்னாவர அருகில் இருக்கும் கெஞ்சகாரியில் வ்ருந்தாவனஸ்தர் ஆனார் (1794).

* ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் இந்த பரம்பரையின் விலைமதிப்பற்ற ரத்னம். 10ம் வயதின் துவக்கத்தில் சன்யாஸ ஆசிரமம் ஏற்று, 12 ஆண்டு காலம் அன்னமில்லா உபவாசம் இருந்தார். நிரந்தர சாஸ்திர பாடம், பிரவசனத்தில் இருந்த இவருக்கு, சர்வமூலாதி அனைத்து கிரந்தங்களிலும் மிகச்சிறந்த ஆளுமை இருந்தது. நூற்றுக்கணக்கான சிஷ்யர்களுக்கு பாடம் கூறிய மகான். நான்கு முறை பர்யாய வைபவத்தை நிறைவேற்றியவர். ஒரு பர்யாயத்தில் வெறும் கௌபீனம் அணிந்து, கடும் வைராக்யசாலியாக இருந்தார். இவர் ஸ்ரீராஜரின் காலத்தில், லட்சுமிபதி நாமக பிராமணராக இருந்தார். ஸ்வப்னத்தில் ஸ்ரீவாதிராஜரிடமிருந்து வ்ருந்தாவனாக்யானத்தைக் கேட்ட மஹிமர். அதனுடைய பிரசாரத்திற்காகவே ஸ்ரீமடத்தின் பரம்பரையில் வந்தவர்.

ஸ்ரீவாதிராஜரின் பிருந்தாவனத்தின் முன்பாகத்தில் அமர்ந்து, வ்ருந்தாவனத்தில் இருந்த ஸ்ரீராஜரிடமிருந்தே எவ்வித சந்தேகங்களும் இன்றி, சாஸ்திர விதிகளை முழுக்க கேட்டு அறிந்தவர். அதற்காகவே, ஸ்ரீவிருந்தாவனாசார்யர் என்றே பெயர் பெற்றார். சிஷ்யர் மூலமாக ஆக்யானத்திற்கு வியாக்யானம் மற்றும் பிராமாண்யத்தை விளக்குவதற்காக கிருதிகளை இயற்றச் செய்தவர். ஆக்யானத்தின் ஆணைப்படி மத்யவாட மடத்திலிருந்து வியாஸமுஷ்டிகளைக் கொண்டு வந்து ஸ்ரீகிருஷ்ண ஸன்னிதியில் மற்றும் பரம்பரையின் பீடத்தில் சமானாதிகரண கிரமத்தினால், மிகச்சிறப்பான பூஜைகளை செய்து, ஸ்ரீமத்வ, ஸ்ரீவாதிராஜரின் அருளைப் பெற்றவர்.

* இவருடைய உத்தராதிகாரிகளான ஸ்ரீவிஷ்வாதீஷ தீர்த்தர், அப்ரதிம பண்டிதர், வாக்யார்த்த விற்பன்னர். மிகச்சிறந்த ஆளுமை கொண்டவர். இவர் கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாதீஷரின் வித்யா சிஷ்யர். 1884ம் ஆண்டில், ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வத்திற்கு எதிராக வந்த கருத்தினை எதிர்த்து, அந்த துர்வாதத்தை நிர்வாதம் செய்தார். அன்றைய அஷ்ட மடத்தின் அனேக யதிகளுக்கு சாஸ்திர பாடம் கூறியவர். இவருடைய பாண்டித்யத்திற்கு, விக்டோரியா மகாராணியிடமிருந்து பரிசுகள் கிடைத்தன.

* இவருடைய உத்தராதிகாரிகளே ஸ்ரீவிஷ்வேந்த்ர தீர்த்தர், 1881ம் ஆண்டில் பிறப்பு. 1897ம் ஆண்டில் ஆசிரமம். குருகளுக்கு தேக ஆலஸ்யம். ஆகையால், பர்யாய பூஜை இவரிடம் வந்தது. அத்யயனம், குரு ஸ்ரீவிஷ்வாதீஷரிடம் மற்றும் அதமாரு மடத்தின் ஸ்ரீ விபுதப்ரியரிடம் நடந்தது. ஸ்ரீமத்வ ஸித்தாந்த போதினி என்னும் அமைப்பினை உருவாக்கி 'யுக்திமல்லிகா' என்னும் பெயரில் உபன்யாச மாலிகையை நடத்தி வந்தார். அதற்காக அனேக வித்வாம்சர்களை நியமித்து அவர்களுக்கும் மரியாதை செய்தவர்.

ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் ஸோதே மற்றும் பல மடங்களில் ஜீர்ணோத்தாரணம் செய்தவர். கொச்சி, அனந்தஷயன மற்றும் மைசூர் மகாராஜாகளிடமிருந்து சன்மானம் பெற்றவர். ஆயுர்வேத பத்ததியிலும் நிபுணர். 'ஹயக்ரீவ' நோய் தீர்க்கும் தைலம் மிகவும் பிரபலமாக இருந்தது. அது ஸ்ரீகளவரின் பரிசு. சுமார் 1939ம் ஆண்டில் நஞ்சன்கூட்டில் சாதுர்மாத விரதம் செய்தார். 'ஸ்ரீகண்டேஷ்வர அத்வைத மஹாசபை'க்கு எதிராக, 'ஸ்ரீகிருஷ்ண மாத்வ ஸபை'யை அங்கு நிறுவி, அதற்காக நிதியை பெற்றுத் தந்தார். ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி ஹயவதன ஸ்வாமி ஹை ஸ்கூல் என்னும், குருகுல முறையில் சொல்லிக் கொடுக்கும் பள்ளி ஒன்றினை சுமார் 1943ம் ஆண்டில் ஏற்படுத்தி, ஏழை எளிய மக்களுக்கு பயன்படுமாறு செய்தார். இன்று அது வளர்ந்து, மகாவித்யாலயாவாக நிற்கிறது. ஸ்ரீகளவர், 1943ம் ஆண்டு, வினாயக சதுர்த்தியன்று, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு ஆசிரமம் கொடுத்து, அதே ஆண்டில் ஆஷ்வீன சுக்ல நவமியன்று ஹரிபாதம் சேர்ந்தார். 'ஸ்ரீவாதிராஜ மங்களாஷ்டக' மற்றும் 'ராஜேஷ– ஹயாஸ்ய' அங்கிதத்தினால் ஸ்ரீஹரி வாயு குரு ஸ்தோத்திரங்கள், பல பத பத்யங்களை ஸ்ரீகளவர் இயற்றியிருக்கிறார்.

## உத்யாவரத்தில் உத்தமரின் உதயம்

கர்னாடகத்தின் கராவளி – பரசுராமர் நிர்மாணித்த பாவனமான இடம். வைஷ்ணவ சைவ தர்மங்கள் ஒன்றாக இருக்கும் இடம். வளமையான, செழிப்பான இடம். தேங்காய், பனை, பாக்கு, வாழை, நெல் ஆகியவை விளையும் பூமி. மக்களிடம் தார்மிக சிந்தனை நிறைந்திருந்தது. சோர்வு இல்லாமல், இலக்கை நோக்கிப் பயணம் செய்யும் மக்கள். விவசாயம், வேலை, கல்வி என அனைத்திலும் இந்த பிரதேசம் முன்னணியில் இருந்தது. இந்த பிரதேசத்தில் இருக்கும் உடுப்பி – ஒரு மிகச்சிறந்த க்ஷேத்திரம். கிருஷ்ண க்ஷேத்திரம் என்றே பெயர் பெற்றது. த்வைத மதத்தை நிறுவிய ஆசார்ய மத்வரின் – பாவிஸமீர ஸ்ரீவாதிராஜரே முதலான மஹனீயரின் ஸாதன க்ஷேத்திரமே ஆகும்.

உடுப்பியிலிருந்து மங்களூருக்குப் போகும் வழியில் நான்கு கிமி தூரத்தில் இருப்பது – உத்யாவர என்னும் சிறிய கிராமம். நெடுஞ்சாலையில் இரு பக்கமும் இந்த கிராமம் பரந்து விரிந்திருக்கிறது. இன்றைய உத்யாவர, முன்னர் உதயபுர என்று அழைக்கப்பட்டு வந்தது. அந்த பிரதேசத்தின் முக்கிய நகரமாகவும் இது இருந்தது. கிராமத்தின் அருகில் பாபநாஷினி நதி ஓடிக்கொண்டிருந்தது. ஸோதே மடத்திற்கும், உத்யாவரத்திற்கும் சிறப்பான சம்பந்தம் இருக்கிறது.

ஸ்ரீவிருந்தாவனாசார்யரின் காலத்தில் அங்கு ஷாகா மடம் ஒன்று நிர்மாணம் ஆகியிருந்தது. அதுமட்டுமல்லாமல், ஸ்ரீவிருந்தாவனாசார்யரின் சிஷ்யராக இருந்த ஸ்ரீவராஹ தீர்த்தருக்கும் குருகள், அங்கு ஒரு மடத்தை நிர்மாணம் செய்தார். இது ஸ்ரீவராஹ தீர்த்தரின் பூர்வாசிரம உறவினர்களுக்கு சேர்ந்ததாகும். இங்கு மத்ய கரார்ச்சித குஞ்சிகிருஷ்ண, பூபதி தேவர் மற்றும்

ஸ்ரீவ்ருந்தாவனாசார்ய கரார்ச்சித ஸ்ரீவாதிராஜரின் தங்க பஞ்சவ்ருந்தாவனம், ஸ்ரீபூதராஜரின் யந்த்ரம் ஆகியவை – நித்யமும், விதிப்படி பூஜை பெற்று வருகின்றன.

உத்யாவர ஷாகா மடத்தில் ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரின் மூல வ்ருந்தாவனம் இருக்கிறது. மடத்தின் அருகில் ஒரு சிறிய புஷ்கரிணி இருக்கிறது. கடந்த நூற்றாண்டின் துவக்கத்தில் ஸாத்விக குடும்பம் ஒன்று உத்யாவரத்தில் வசித்து வந்தது. அவர்களின் பெயர் – ஸ்ரீகிருஷ்ணாசார்ய மற்றும் ஸ்ரீமதி கிருஷ்ணவேணியம்மா. தம்பதிகள் ஸதாசார ஷீலர்களாக இருந்தனர். விவசாயத்திலிருந்து வரும் பணத்தில் வாழ்க்கை நடந்தது. பசு, பிராமண, அதிதி ஆகியோரின் சேவா நிரதராக இருந்தனர், அந்த ஸாது ஸ்வபாவம் கொண்ட தம்பதிகள். ஸ்ரீகிருஷ்ணாசார்யர், அன்றைய ஸோதெ மடத்தின் ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரின் பூர்வாசிரம தம்பி. இதனால், ஸ்ரீமடத்திற்கும் அந்த குடும்பத்திற்கும் நல்ல சம்பந்தம் இருந்தது. அது லௌகிக செயல்களுக்கான சம்பந்தம் இல்லை. சிஷ்யானுக்ரஹ பாவ சம்பந்தம். இந்த ஸாத்விக தம்பதிகளுக்கு ஸ்ரீமுக ஸம்வத்ஸரம் புஷ்ய கிருஷ்ண திரயோதசி சனிக்கிழமையன்று (13-01-1934) ஒரு ஆண் குழந்தை பிறந்தது.

இதனை அறிந்த ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர், மடத்தின் முன்னர் வெடி வெடிக்கச் செய்து மகிழ்ந்தார். இது எதிர்காலத்தை அறிந்த குறிப்பாகவும் இருக்கலாம். அழகான குழந்தை. முகத்தில் தெய்வ களை. அனைவரையும் ஈர்க்கும் ஒளி. தக்க நேரத்தில் ஜாதகர்மாதி சம்ஸ்காரங்கள் நடைபெற்றன. அந்த அழகான குழந்தைக்கு ‘மாதவ’ என்று நாமகரணம் செய்தனர். மாதவனைப் பார்த்து, குரு ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் மகிழ்ந்தார். முகத்தில் இருக்கும் அசாதாரண தேஜஸ்ஸினைக் கண்டு வியந்தார். ஜோதிடர்களிடமிருந்து ஜாதகம் எழுதச் செய்து, பலன்களை பார்த்தார். அப்போதே அவருடைய கணக்கு துவங்கிவிட்டது. ஆனால், கிருஷ்ணாசார்ய தம்பதிகளிடம் அவர் அப்போது எதையும் கூறவில்லை.

சிறுவன் மாதவ, சுக்ல பட்ச சந்திரனைப் போல வளர்ந்தான். எப்போதும் புன்னகையுடன், அழாமலேயே இருந்தான். யாரைப் பார்த்தாலும் மனதை மயக்கும்படியான சிரிப்பு. அனைவருக்கும் அவனை தூக்கிக் கொஞ்ச வேண்டும் என்று விருப்பம். தன் சின்னஞ்சிறு கால்களை வைத்து தவழ்ந்து, நடந்து அனைவரையும் மகிழ்வித்தான். தெய்வ பிரேரணையினால், தத்வாபிமானி தேவதைகளின் கருணை அபாரமாக இருந்தது. ஆகையால், தக்க வயதில், தக்க காலத்தில் செய்த முயற்சிகள் அனைத்திலும் வெற்றி. அக்ஷராப்யாஸம் குரு சன்னிதியில் நடந்தது. சீக்கிரத்தில் ஞானம் பெற்று, ஹரி குருகளின் பெயர் எழுதுவது துவங்கியது. அனைவரும் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டனர்.

தந்தையான கிருஷ்ணாசார்யர் தொடர்ச்சியாக ஸ்துதி ஸ்லோகங்களை சொல்லிக் கொடுத்தார். மாதவன், ஏகஸந்திக்ராஹி (ஒரே முறை சொல்லிக் கொடுத்தால் புரிந்து கொள்பவர்). மனனஷீல (நல்ல நினைவுத்திறன் ஆகையால் மனப்பாடம் செய்யும் திறன்). மாதவனுக்கு ஆட்டம் பாட்டங்களில் விருப்பம் இல்லை. வீட்டில் தந்தை செய்யும் ஜப, தப, பூஜாதிகளையே தொடர்ச்சியாக பார்த்திருந்தான். அதைப் போலவே மடத்திற்குச் செல்லும்போதெல்லாம், குருகளின் அனுஷ்டானங்களை பார்த்து கவனித்து வந்தான். அவற்றையெல்லாம், வீட்டில் தன் சக்திக்கேற்ப செய்வதற்கு முற்பட்டான். அப்போதே லௌகிக சூழ்நிலைகளிடமிருந்து விலகி இருந்தான்.

‘... ஸம்ஸ்காரேண த்விஜ உச்யதே |’ என்று சொல்வதைப் போல மாதவனுக்கு கர்ப்பாஷ்டமத்தில் உபநயம் செய்வதற்கு தந்தையான ஸ்ரீகிருஷ்ணாசார்யர் சங்கல்பம் செய்தார். ஸ்ரீகிருஷ்ணனின் சன்னிதியில், உடுப்பியில் இருந்த ஸ்ரீஸோதே வாதிராஜ மடத்தில் அதனை செய்வதற்கு தீர்மானம் செய்தார். ஸ்ரீமடத்தில் அந்த முகூர்த்தத்தில், பூஜ்ய ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரின் முன்னிலையில் உபநயனம் நடந்தது. ஸ்ரீமடத்தின் பட்டத்தின் தேவரான பூவராக – ஹயவதன – வேதவியாஸ மற்றும் ஸ்ரீவாதிராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் சன்னிதி. இதைவிட வேறென்ன வேண்டும்?. பிராமணர்கள், உறவினர்கள் சேர்ந்திருந்தனர். விதிப்படி உபநயனம் முடிந்தது. பிராமணர்கள் வேதோக்த மந்திரங்களால் மாதவனை ஆசிர்வதித்தனர். பூஜ்ய ஸ்ரீகளவர் ஸ்ரீஹரி

குருகளில் பிரார்த்தனை செய்து, அருளினார். உபநயனம், ஒரு உற்சவத்தைப் போல சிறப்பாக நடந்தது.

ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகள், வடுவுடன் குருகளின் பாதபூஜையை செய்தனர். ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் தப்த முத்ராதாரணை செய்து, ஸ்ரீகிருஷ்ண மந்திரத்தை உபதேசம் செய்தார். அன்றிலிருந்து மாதவனின் ஜப அனுஷ்டானம் துவங்கியது. த்ரிகால ஸந்த்யா, அக்னிகார்ய ஆகியவை துவங்கின. மாதவனின் அனுஷ்டானத்தின் கிரமம் அபாரமாக இருந்தது. மந்திர ப்ரதிபாத்ய ஸ்வாமியின் ரூபத்தை தியானிக்கும் வழக்கம் வந்தது. ஸந்த்யாதிகரணம் தக்க காலத்தில் நடந்ததால், பிராயசித்த அர்க்யம் கொடுக்கும் சந்தர்ப்பமே வரவில்லை. நாள்பட, மாதவனின் முகத்தின் தேஜஸ் கூடியது.

தந்தையிடமிருந்து மந்திர ஸ்தோத்திரங்களின் படனம் துவங்கியது. இந்த விஷயத்தில் மாதவனின் முயற்சி அற்புதமாக இருந்தது. கற்றவற்றை மனப்பாடம் செய்வதில் கவனம் செலுத்தினான். பள்ளியில் பிராதமிக கல்வியிலும் மாதவன் அனைவரை விடவும் முன்னிலையில் இருந்தான். மாதவனின் கவனம், மனனம் அனைவரும் போற்றக்கூடியதாக இருந்தது. அவனின் காயத்ரி அனுஷ்டானம் மிகவும் வியப்படையச் செய்தது. அடுத்து, காயத்ரி மந்திர பிரதிபாத்ய ஹயமுக தேவனின் ஆராதகன் ஆகும் குறிப்பு அப்போதே கிடைத்தது. மாதவன் மிதபாஷி (குறைவாக பேசுபவர்). அவனின் நடை, நுடிகள் காம்பீர்யமாக இருந்தன. பார்வை அனைவரையும் ஈர்த்தன. பெரியவர்கள் யாராக இருக்கட்டும், அவர்களை வணங்கும் பழக்கம் இருந்தது. மற்ற சிறுவர்களுடன் தொந்தரவு / சண்டை ஆகியவை இல்லவே இல்லை. ஸாது ஸ்வரூபமாக இருந்தான்.

## மாதவன் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஆனது

குருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் தமக்கு ஒரு சிஷ்யரை தேர்ந்தெடுக்க வேண்டும் என்று தெய்வ பிரேரணையை பெற்றார். நான்கு – ஐந்து வடுகளின் ஜாதகங்களை பரிசீலித்துப் பார்த்தார். ஏனோ எதுவும் சரிவரவில்லை. அதிலும், ஸ்வாமியின் மற்றும் குருகளின் பிரசாதம் (அனுமதி) கிடைக்கவில்லை. ஸ்ரீஸோதெ மடத்தில் ஸ்ரீபூதராஜரின் மகிமை அபாரம். அனைத்திற்கும் அவரது அருள், அனுமதி குறிப்பு தேவை. (தந்தெ வரதகோபாலவிட்டல தாசர் கூறியதைப் போல 'ஹம்ஸாரூடர ஸத்வம்ஷ போஷர' - ஸ்ரீராஜரின் ஸத்வம்ஷ போஷகரே ஸ்ரீபூதராஜர்). ஸ்ரீகளவரின் தேடுதல் தொடர்ந்தது. மேலும் குருகளின் ஸ்வப்னத்தில், ஸ்ரீகிருஷ்ணாசார்யரின் மகனான மாதவன், இந்த பரம்பரைக்கு உத்தராதிகாரிகள் ஆவதற்கு அனைத்து விதங்களிலும் தகுதி பெற்றவன் என்று குறிப்பு வந்தது. இத்தகைய குறிப்பினால், குருகளுக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டானது. ஸ்வாமியின் கருணையை கொண்டாடினார்.

அடுத்த நாள், ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகளை, மாதவனுடன் மடத்திற்கு வருமாறு ஆணையிட்டார். ஸ்ரீகிருஷ்ணாசார்யருக்கு ஸ்வாமியின் மற்றும் குருகளின் தரிசன பாக்கியம் கிடைக்கப்போகிறது என்னும் ஆனந்தம். ஆணையின்படி, அம்மூவரும் மடத்திற்கு வந்து குருகளின் பாதங்களில் விழுந்து வணங்கினர். குருகளின் பிரஸன்ன த்ருஷ்டி மாதவனின் மேல் விழுந்தது.

இதற்கு முன்னரே, ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் ஒரு முறை ஒரு வடுவிற்கு ஆசிரமம் கொடுக்க நினைத்தபோது, தெய்வ குறிப்பு மற்றும் அனுமதி கிடைக்கவில்லை. ஆனால் இம்முறை அந்த குறிப்பும் அனுமதியும் கிடைத்தது. ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகளை தனிமையில் அழைத்தார். வடு மாதவனுக்கு ஆசிரமம் கொடுக்கும் விஷயத்தை கூறினார். விஷயத்தைக் கேட்ட மாதவனின் தாய் அதிர்ச்சி அடைந்தார். குருகளிடம் கெஞ்சத் துவங்கினார்.

'ஸ்வாமி, மாதவனுக்கு வெறும் ஒன்பது வயதே ஆகிறது. ஆசிரமத்தின் விஷயம் அறியாதவன். சன்யாசம் பெற்றால் கடினமான விரத நியமங்களை பின்பற்ற வேண்டியிருக்கும். தேக தண்டனை கஷ்டங்களை பட வேண்டியிருக்கும். அத்தகைய கஷ்டங்களை எங்களால் பார்க்க முடியாது. ஆகையால், மாதவனுக்கு ஆசிரமம் வேண்டாம்' -- என பிரார்த்தனை செய்து, தங்களை

மன்னிக்க வேண்டும் என்று மன்றாடி, திரும்பத்திரும்ப கேட்டுக் கொண்டனர். குரு ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் 'அனைத்தும் தெய்வ இச்சை' என்று சொல்லி அமைதி அடைந்தார். ஆனாலும், குருகளின் கருணைப் பார்வை மாதவனின் மேலேயே இருந்தது.

பிறகு, சம்ஸ்தான பூஜை துவங்கியது. மகாபூஜைக்குப் பிறகு, ஸ்வாமி தரிசனம் செய்விக்கும்போதும், சிறுவனான மாதவனையே பிரஸன்ன திருஷ்டியுடன் பார்த்துக் கொண்டிருந்தார் குரு. பிரசாதம் பெற்றுக்கொண்டு தம்மிடத்திற்கு திரும்புவதற்கு ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகள் தயார் ஆயினர். குருகள் அவர்களுக்கு மந்திராட்சதை அருளினார். தம்பதிகள், மாதவனுடன் சன்னிதிக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தனர். தேகம் மடத்திலிருந்து தூரம் சென்றாலும், மனம் மட்டும் மடத்தில் நடந்த விஷயங்களைப் பற்றி சிந்தித்திக் கொண்டே இருந்தது.

ஒரு வாரம் கழிந்தது. ஒரு நாள் திருமதி. கிருஷ்ணவேணி அம்மாளுக்கு ஒரு கனவு வந்தது. கனவில் சிறுவன் மாதவன், ஆஸனத்தில் அமர்ந்திருக்கிறான். முகத்தில் அபாரமான ஒளி பரவியிருந்தது. தாய்க்கு என்றுமில்லா ஆனந்தம். அதற்குள், ஒரு வெள்ளைக் குதிரை பின்னாலிருந்து வந்து கொண்டிருந்தது. அதனுடைய தேஜஸ் அற்புதமாக இருந்தது. அக்குதிரை மெதுவாக வந்து, மாதவனின் தலை மேல் தன்னுடைய பிரஸன்னமான முகத்தை வைத்தது. மாதவனின் தாயினை கருணையுடன் அக்குதிரை பார்க்கிறது. அப்போது திடீரென்று அந்தக் கனவு கலைகிறது. அந்தக் கனவினால் அந்தத் தாய் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறார். இத்தகைய கனவின் குறிப்பினை அவர் அறிந்திருந்தாலும், தன் கணவரின் எதிரில் எதையும் அவர் சொல்லவில்லை. மகிழ்ச்சி - கவலை என இரண்டையும் அவர் ஒருசேர அனுபவித்தார். மாதவனின் மழலை முகத்தை பார்க்கும்போதெல்லாம் அவருக்கு இந்த இரு அனுபவமும் ஒரே சமயத்தில் கிடைத்தது. பின் சிறிது நாட்களுக்கு பிறகு மறுபடி அதே கனவு மறுபடி. அதே அனுபவம் மறுபடி. தாய் பயம் கொண்டார். ஆனால் இன்னும் விஷயத்தை வெளியில் கூறவில்லை. தினமும் இந்த கனவின் விஷயத்தையே நினைத்துக் கொண்டிருந்தார்.

மறுபடி சில நாட்களுக்குப் பிறகு அதே போல கனவு வந்தது. மந்தகாச புன்னகையுடன் கூடிய குழந்தை மாதவனின் தலையின் மேல் அதே வெள்ளைக் குதிரை. அன்று அந்த குதிரையின் முகம் அபாரமாக ஒளிர்ந்தது. அப்போது அசரீரியைப் போல ஒரு குரல் கேட்டது. கனவின் குறிப்புகளை கணவரிடம் சொல்ல வேண்டும் என்று அக்குறிப்பு ஆணையிட்டது. கிருஷ்ணவேணி அம்மாளுக்கு உடனடியாக கனவு கலைந்தது. பக்கத்தில் படுத்திருந்த கணவரை எழுப்பினார். பயத்துடன், தனக்கு வந்த மூன்று கனவுகளைப் பற்றியும், கடைசியில் கேட்ட குரலைப் பற்றியும் கூறினார். கிருஷ்ணாசார்யர்க்கு அந்தக் குரல், தெய்வ ஆணை என்றே பட்டது. பூஜ்ய ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரின் வாக்கினை நினைவுபடுத்தி, மனைவியிடம் இவ்வாறு கூறினார். 'வாதீஷவரத, மத்வேஷ ஹயவதனின் சேவைக்கு, பா[4]வி-மருதரின் சேவைக்கு சிறுவன் மாதவன் தகுதியானவன் என்பது பகவந்தனின் விருப்பம்'. மாதவன் உண்மையாகவே தமது வம்சத்தை மேம்படுத்துவதற்கு வந்திருப்பவன் என்று திடமாக நம்பினார். அன்றைய ஜப பூஜாதி அனுஷ்டானங்களை முடித்தார். மனைவி, மகனுடன் ஸ்ரீமடத்திற்கு சென்றார்.

இங்கு ஸ்ரீமடத்தில், ஸ்ரீகளவருக்கும் ஒரு குறிப்பு வந்திருந்தது. ஸ்ரீராஜரின் சித்தம் என்று சிந்தித்தவாறு, சித்தஜனய்யனை சிந்தித்தவாறு தியானத்தில் இருந்தார். குருகளின் ஆணைப்படி, ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகள் சிறுவன் மாதவனுடன் ஸ்ரீமடத்திற்கு வந்தனர். குரு சன்னிதிக்கு பூ பழ காணிக்கைகளை சமர்ப்பித்து, சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர். குருகள் அவர்களின் நலம் விசாரித்தார். திடீரென்று மடத்திற்கு வந்திருக்கும் நோக்கத்தினை கேட்டார். தன் மனைவிக்கு வந்த கனவு, குறிப்பு, ஆணை என அனைத்தையும் ஸ்ரீகிருஷ்ணாசார்யர் குருகளிடம் விளக்கினார். மாதவனை, மாதவ - மத்வ - பா[4]வி மாத்வரின் சேவைக்கு ஒப்படைப்பதற்கு தயார் என்றானர். இதனைக் கேட்ட குருகள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். தகுந்த உத்தராதிகாரிகளை அருளியதற்கு ஹரி வாயு குருகளை கொண்டாடினார். மாதவனின் விஷயத்தில், தெய்வ பிரேரணை அபாரம் என்றார். அன்று மிகவும் விமரிசையுடன் பூஜாதி கார்யகிரமங்களை நிறைவேற்றினார். தீர்த்த பிரசாதத்திற்குப் பிறகு, ஸ்ரீகிருஷ்ணாசார்ய தம்பதிகளுக்கு மற்றும் மாதவனுக்கு, மந்திராட்சதை கொடுத்து அருளினார்.

ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் உத்யாபுரத்தின் ஷாகா மடத்தில் ஆசிரமம் கொடுப்பதாக சிந்தித்து அதையே தீர்மானித்தார். அதற்கான முன்னேற்பாடுகள் துவங்கின. இந்த ஷாகா மடம், ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரால் நிர்மாணம் செய்யப்பட்டதாகும். நெடுஞ்சாலையின் அருகில் இருந்தாலும், அப்போது அங்கு மக்கள் நடமாட்டம் வெகு குறைவாகவே இருந்தது.

தக்க அறிஞர்களை கலந்தாலோசித்து, ஸ்ரீகளவர் சரியான முஹூர்த்தத்தை நிச்சயம் செய்தார். ஆசிரமம் ஏற்பதற்கு முன்னதான செயல்களை செய்வதற்காக, மாதவனை அழைத்து வருமாறு, ஸ்ரீகோவிந்தண்ண மற்றும் இன்னொருவரை ஸ்ரீகிருஷ்ணாசார்யரின் வீட்டிற்கு அனுப்பினார். அவர்கள் இருவரும், ஸ்ரீகிருஷ்ணாசார்யரை சந்தித்து, ஸ்ரீகளவரின் ஆணையைப் பற்றி கூறினர். குருகளின் ஆணைப்படி மாதவனை மடத்திற்கு அனுப்ப ஸ்ரீகிருஷ்ணாசார்யர் தயார் ஆனார். மாதவன் எதையும் கேட்கவில்லை. தந்தை தாய்களை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, குரு சன்னிதிக்கு புறப்படுவதற்கு தயார் ஆனான். முகத்தில் தெளிவு. நடையில் வேகம். புன்னகை கூடிய முகத்துடன், உறவினர்கள் அனைவரையும் ஒரு முறை பார்த்து, முன் நடந்தான். திரும்பிப் பார்க்கவில்லை. சிறுவன் மாதவன் செல்லும் திசை நோக்கிய தாயின் மனம் கலங்கியது. மகன் மேல் உள்ள பாசத்தால், அவரின் கண்களில் கண்ணீர் பெருகிறது. உடன், நடக்கவிருக்கும் உன்னத செயல்களை சிந்தித்து சமாதானம் செய்து கொண்டார்.

மடத்தை அடைந்த மாதவன், குருகளை வணங்கி, செய்ய வேண்டிய செயல்களின் கட்டளைக்காக தயாராக நின்றான். ஸ்ரீகளவரின் வழிகாட்டுதலில் முன்னேற்பாடுகள் நடந்தேறின. ஸ்ரீகளவர், மாதவனின் தந்தை தாய்களை, உறவினர்களை, அறிஞர்களை, வித்வாம்ஸர்களை, புரோகிதர்களை மற்றும் பலரையும் அழைத்திருந்தார். பிராயச்சித்தாதி ஹோமங்கள், ஆத்ம ஸிரார்த்தாதி கர்மங்கள் விதிப்படி நடந்தன. பொ.யு. 1943ம் ஆண்டு, ஸ்வபானு சம்வத்ஸரம், பாத்ரபத சுக்ல சதுர்த்தியன்று (வினாயக சதுர்த்தி), ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் மாதவனுக்கு துர்யாசிரமம் வழங்கி பட்டாபிஷேகம் செய்தார். 'ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த' என்று நாமகரணம் செய்து அதனை அனைவருக்கும் அறிவித்தார். அனைவரும் மகிழ்ந்து, கை தட்டி, வரவேற்று ஆமோதித்தனர்.

தேவ ஸன்னிதியில் புதிய சிஷ்யருக்கு பிரணவாதி மந்திரங்களின் உபதேசம் குருகளால் செய்யப்பட்டது. வினயாபரண பூஷிதரான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரு, குருகளின் ஸ்ரீசரணங்களில் விழுந்து வணங்கினார். குருபக்தியை சமர்ப்பித்தார். சிஷ்ய வாத்ஸல்யம் நிரம்பிய குருவான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர், தமது வரத ஹஸ்தத்தை வைத்து சிஷ்யரை ஆசிர்வதித்தார். பரம பாவன பரம்பரையின் யதிபுங்கவரின் ஆசிரம சிஷ்யரின் ஸாத்விக ஷக்தி, ஜப தபாதி ஸித்தி, அந்த ஸன்னிதானத்தின் தேஜஸ், ஆகியவை சிஷ்யரிடம் சேர்ந்து ஒளிர்ந்தன. பிறகு, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், தமது பூர்வாசிரம தாயினை நமஸ்கரித்தார். அங்கிருந்த அனைவரையும் இந்தக் காட்சி மெய் சிலிர்க்க வைத்தது. மெய் மறந்து அனைவரும் ஆனந்தக்கண்ணீர் வடித்து, இதனைக் கண்ட தாங்கள் தன்யர் ஆனோம் என்று நினைத்தனர்.

ஆசிரமம் கொடுக்கும் – ஏற்றுக் கொள்ளும் நிகழ்ச்சி விமரிசையாக நடந்தது. ஆனால், அதில் ஆடம்பரம் இருந்திருக்கவில்லை. விதி, விதானம் மற்றும் காலத்திற்கு ஏற்றதான எந்தவொரு குறைகளும் இருந்திருக்கவில்லை. அனைத்தும் சாஸ்திரத்திற்கு ஏற்றதாக நடந்தது. வந்திருந்த பக்தர்கள் அனைவரும், இரு ஸ்ரீகளவர்களுக்கும் பாத பூஜை செய்து கௌரவம் செய்தனர். தீர்த்த பிரஸாதத்திற்குப் பிறகு, அனைவருக்கும் பல மந்திராட்சதையை ஸ்ரீகளவர் அருளினார். வித்வாம்ஸர்களுக்கு தக்க சம்பாவனை வழங்கினார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் குருகளை 'ஸர்வஸ்வ' என்று நினைத்தார். குருகளுடைய சன்னிதியையே எப்போதும் விரும்பினார். பூஜ்யரின் அருளே இவருக்கு ரக்ஷா-கவசம் ஆயிற்று.

## ஸ்ரீவிஷ்வோத்தமரின் ஆசிரமத்திற்கு ஏற்ற ஒழுக்கம் / கட்டுப்பாடுகள்

ஆசிரமம் வழங்கும் நிகழ்ச்சி முடிவடைந்தது. சிஷ்யருடன் குருகள் உத்யாவர மடத்தில் தங்கினார். சன்யாஸி ஜீவனத்தின் மூன்று விதிகளை ஸ்ரீவிஷ்வேந்திரர், சிஷ்யருக்கு உபதேசம் செய்தார்.

1. பிராம்ஹி முஹூர்த்தத்தில் எழுவது; காலத்தின்படி, விதிப்படி ஸ்னானம்; ஜப தப பூஜாதிகளை செய்வது. முதலாம் யாமத்தின் (காலையில் சுமார் 9மணி) கடைசியில் பக்தர்களுக்கு தீர்த்தம் கொடுப்பது. பர்யாய காலத்தில் 11.30மணிக்கு தீர்த்தம் வழங்குதல்.

2. அனைவரிடமும் கருணையைக் காட்டுதல்

3. ஆராத்ய தெய்வத்தின் பெட்டியை தலைப்பக்கத்தில் வைத்துக்கொண்டு படுப்பது. இரவு நேரத்தில் காலடி சத்தம் மற்றும் வேறு சத்தங்கள் கேட்பதுண்டு. தேவதைகளே மாறுவேடங்களில் வந்து தரிசனம் பெறுவதுண்டு. அதற்கெல்லாம் பயப்படத் தேவையில்லை.

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், தமது வாழ்க்கை முழுவதும், இந்த மூன்று அம்சங்களை தவறாமல் செய்து வந்து, குரு ஆணையை சிரமேற்கொண்டு பின்பற்றி வந்தார்.
ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் ஆசிரம ஒழுங்கு / கட்டுப்பாடுகள் அபாரம். ஆசிரமம் பெற்று கொண்ட நாளிலிருந்தே, மூன்று வேளையும் ஸ்னானம், மந்திர ஜப அனுஷ்டானங்களை பின்பற்றுவது, படன மனனாதி ஸாதனை, பக்தி பாவங்களுடன் பகவத் ஆராதனை, பக்தர்களில் கருணையைக் காட்டுவது, பந்தக விஷயங்களை விலக்குவது ஆகிய குண அம்சங்கள் இவரிடம் இருந்தது. எப்போதும் புன்னகையுடன் கூடிய முககமலம் அவருடையது. என்றும் யாரிடமும் கோபம் காட்டியவரில்லை. ஒரு வேளை மனதில் ஏதேனும் கருத்து வேறுபாடு வந்தால், அதற்கு காரணமான பொருள், மனிதர்களிடமிருந்து அவரே விலகியிருந்தார். அது சம்பந்தமான கோபம் ஆகியவற்றை எப்போதும் யாரும் அவரிடம் கண்டதில்லை. அவை சன்யாச ஆசிரமத்திற்கு எதிரானவை என்று ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் நன்கு அறிந்திருந்தார். குருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர் பிறகு அதிக நாட்கள் இருந்திருக்கவில்லை. சிஷ்ய ஸ்வீகாரம் பெற்ற பிறகு, 35 நாட்களுக்குப் பிறகே, ஹரிபதம் அடைந்தார்.

அதே ஆண்டின் ஆஷ்வின சுக்ல நவமியன்று உத்யாவரத்தின் ஷாகா மடத்தில் வ்ருந்தாவனஸ்தரான குருகளின் ஆராதனையை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் வெகு விமரிசையாக நிறைவேற்றினார். பிறகு குருகளின் மிருத்திகா வ்ருந்தாவனத்தின் ஸ்தாபனை, ஸோதெயில் ஆயிற்று. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், சிறியவர் ஆனதால், மடத்தின் நடவடிக்கைகளை, ஸ்ரீகளவரின் பூர்வாசிரமத்தின் அண்ணனான ஸ்ரீபதி ஆசார்யர் கவனித்து வந்தார்.

### தொடர்ச்சியான அத்யயனம்

பரமஹம்ஸ பீடாதிபதிகளுக்கு, நியத ஜபதபானுஷ்டானத்தைப் போல, சாஸ்திர அத்யயனமும் தேவை. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் துவக்க அத்யயனம், உத்யாவர மடத்தில் நடந்தது. உடுப்பியில் அன்றைய பிரஸித்த வித்வாம்ஸராக இருந்த, ஸ்ரீ அட்டெ வேதவியாஸாசார்யர் மற்றும் ஸ்ரீ ஆலெவூரு ஸீதாராமாசார்யர் ஆகியோர் பாடம் எடுத்தனர். ஜப தப பூஜா சமயங்களைத் தவிர, ஒரு நொடிகூட வீணாகாமல் அத்யயனம் நடந்தது. பால யதிகளின் அத்யயனத்தின் விருப்பம், விஷயத்தை புரிந்து கொள்ளுதல், ஒருமுகத்துடன் கேட்டதை சிந்தனையில் வைத்துக் கொள்ளுதல், குழப்பமில்லாத சிந்தனை, விசேஷ அர்த்தானுசந்தானம் ஆகியவை அற்புதமாக இருந்தன. அத்யயனத்துடன் அவருக்கு இருந்த ஆளுமை, அனைவரையும் வியக்கச் செய்தது.

சம்ஸ்கிருத சாகித்ய, வ்யாகரண, தர்க்க, தஷ ப்ரகரண ஆகிய அனைத்து கிரந்தங்களின் அத்யயனம் தடையின்றி நடந்தன. அவருடைய மனனம் மற்றும் சிந்தனா சாமர்த்தியம் அற்புதமாக

இருந்தன. சாஸ்திர விஷயமாகட்டும், மற்ற விஷயங்கள் ஆகட்டும், ஸ்ரீகளவரின் சம்ஸ்கிருத ஆளுமை அபூர்வமாக இருந்தது. படித்த கிரந்தங்கள் மட்டுமல்லாமல், மற்ற அனேக கிரந்தங்களையும் ஸ்ரீகளவர் தொடர்ந்து படித்துக்கொண்டே இருந்தார். இதனால் அனைத்து விஷயங்களின் ஆழம், அகலம் ஆகியவற்றை நன்றாக அறிந்தார். ஸ்ரீவிஷ்வோத்தமர் போன்ற ஸத்பாத்ரர்களில் வித்யா தானம் செய்து, ஆசார்யர்கள் தன்யர் ஆயினர்.

## காணியூரு மடத்தின்
## ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தர்

காணியூரு மடத்தின் ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தர், கடந்த நூற்றாண்டின் மகாபுருஷர். அவருடைய ஸதாசார, ஸத்விசார ஆகியவை கடலைப் போல ஆழமும், அகலமும் கொண்டவை. ஆசிரம நிஷ்டை, பிரம்மசர்ய, ஜபதப அனுஷ்டான ஆகியவை மலை உச்சியைப் போல உயரமானவை. இவர் தனது துவக்க அத்யயனத்தை, பரிவ்ராட் சக்ரவர்த்திகளாக இருந்த, ஸோதெ மடத்தின் ஸ்ரீவிஷ்வாதீஷ தீர்த்தரிடமும், பிறகு யதி ராஜரிஷிகளாக இருந்த அதமாரு மடத்தின் ஸ்ரீவிபுதப்ரிய தீர்த்தரிடமும் நிறைவேற்றினார். இவருடைய ஜப தப அனுஷ்டானங்களால், ஸ்ரீகளவரின் அத்யயனம் / வித்வத் ஆகியவை அர்த்தபூர்ணமாயிற்று.

பரம்பரையின் ஆராத்ய தெய்வமான ஸ்ரீ நரஸிம்ஹனை விசேஷமான ஆராதனை செய்து, அதன் மந்திர ஸித்தியினைப் பெற்றிருந்தார். நாடு முழுவதும் தீர்த்த க்ஷேத்திர யாத்திரை செய்து, புண்யமூர்த்தியாக இருந்தார். நிரந்தர பாவன சாஸ்திர, பாட பிரவசனங்களை செய்து, பாவனதரர் ஆனார். இவருடைய மந்திர ஸித்தி, மிகவும் வியப்பினைத் தந்தது. அனேகர் இவரிடம் சரணடைந்து, மந்திராட்சதை பெற்று, நோய் நொடிகளிலிருந்தும், ஆத்யாத்மிக தாபத்ரயங்களிலிருந்தும் முக்தர் ஆயினர். இவருடைய உபதேசம், பலரை சன்மார்க்கத்தில் நடத்தியது. பூஜ்யர் நான்கு பர்யாயங்களை சிறப்புடன் முடித்து ‘யதுகுல சக்ரவர்த்தி’ என்னும் தக்க பெயர் பெற்றார்.

ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ, ஸமபூஜாதி விஷயங்களில் உயர்ந்த தீக்ஷை பெற்றிருந்த ஸ்ரீகளவர், அது சம்பந்தப்பட்ட பல கையெழுத்துப் பிரதிகளை, அந்த காலத்தில் சேகரித்து தொகுத்தது மிகவும் உயர்ந்த செயலாகும். ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தரின் குருகளாக இருந்த, ஸ்ரீவித்யா நிதி தீர்த்தரின் சிஷ்யரான ஸ்ரீ நாராயணாசார்யர், குருகளின் ஆணைப்படி ‘ஸமபூஜா விகல்ப கண்டனம்’ என்னும் கிருதியை எழுதியிருப்பது, ஸ்ரீவாதிராஜரின் அருமையான சேவை என்று இங்கு சிந்திக்க வேண்டியிருக்கிறது.

ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தர் தமது தென்னிந்திய யாத்திரை சமயத்தில், அனேக வித்வாம்ஸர்களுடன் சாஸ்திர விசாரம் செய்து, அவர்களை வென்றது வரலாறு. இவருடைய ஞானத்தின் உயரத்தை கவனித்து, கொச்சி அரசர், இவருக்கு விசேஷ மரியாதை சன்மானங்களை செய்தார். ஸ்ரீகளவர், ஏகாந்த ப்ரியர். புகழினை விரும்பாதவர். விஷய உபதேசத்தில் கவனம் செலுத்தியவர். இவருடைய வாக்-ஸித்தி அசாதாரணம். அது ‘வாசமர்த்தோऽனுதாவதி’ என்பது போல இருந்தது.

காரண காரியம் இல்லாமல், ஸ்ரீகளவரின் மனதினை நோகடித்து, அதன் மூலம் துன்பத்திற்கு உள்ளானவர்கள் பலர். கேரளாவில் ஏடமானூர் என்னும் இடத்தின் ஜமீன்தார் ஒருவர், ஸ்ரீகளவரின் மனதிற்கு துன்பத்தைக் கொடுத்ததால், அவனுடைய புத்தியே பேதலித்துப் போனது. கருணாளுகளான ஸ்ரீகளவரின் தப:ஷக்தி அற்புதமானது. இந்த சக்தியின் அருளைப் பெற்று, அதன் மூலம் அற்புத பலன்களைப் பெற்றவர்கள் பலர். மகாராஷ்டிரா கர்ஹாடின் கிருஷ்ணா தீரத்தில் பெண் ஒருவர் பாம்பு கடித்து இறந்தபோது, பூஜ்யர் தம் தப:ஷக்தியினால் அவளை மறுபடி பிழைக்க வைத்தார். ஸ்ரீகளவரின் அருள் பலத்தினால் பலர் ஞானத்தைப் பெற்றனர். மற்ற செல்வங்களையும், ஆயுளையும் பெற்று தன்யர் ஆயினர். மந்த்ரோபதேசத்தைப் பெற்று மற்றும் பூஜா தீர்த்தத்தைப் பெற்று, பலர் ஸத்ஸந்தான பலன்களையும் பெற்றிருக்கின்றனர்.

ஹிரண்யகசிபுவை ஸ்ரீநரசிம்ம ஸ்வாமி, மாலை வேளையில் சம்ஹாரம் செய்தார். இதை குறிப்பதைப் போல, ஸ்ரீகளவர், மதியம் வரைக்கும் ஜப தப பாட ஆகியவற்றை நிறைவேற்றி, மாலை வரை, ஆராத்ய நரசிம்ம தேவரின் பூஜையை செய்து வந்தார். இது நரசிம்ம தேவரின் ஆராதனைக்கு சிறந்த காலம் என்று சொல்லி வந்தார். ஒரு முறை, கோதாவரியில் ஸ்னானம். பர்யாய காலம் நெருங்கியிருந்தது. பாகிரதி ஸனானம் ஆகவில்லை என்னும் கவலை. இரவில் அவருக்கு ஒரு கனவு. அடுத்த நாள், கோதாவரியில், ஸ்னான தர்ப்பணாதிகள் சமயத்தில், அங்கு பாகிரதி சாலிகிராமம் அவர் கைகளில் வந்து சேர்ந்தது. அனைவரும் வியந்தனர். அதனை ஏற்றுக்கொண்டு புறப்பட்டார்.

பூனே பிரதேசத்தை ஆண்டு வந்த அரசனின் மனைவிக்கு ஒரு கனவு. அவரிடம் இருந்த கோமேதக சம்புடத்தை ஸ்ரீகளவருக்கு பக்தியுடன் சமர்ப்பிக்க வேண்டும் என்று அந்த கனவில் குறிப்பு வந்தது. அதன்படியே அந்த அரசியும் செய்ய, அன்றிலிருந்து ஸ்ரீகளவர், பாகீரதி சாலிகிராமத்தை அந்த சம்புடத்தில் வைத்து பூஜித்தார். இன்றைக்கும் அதனை ஸ்ரீமடத்தில் பார்க்கலாம்.

இத்தகைய ஞானிகளான தபோமூர்த்திகளான ஸ்ரீகாணியூரு ஸ்ரீகளவரிடமிருந்து மந்திரோபதேசம் பெற்றவர்கள் பலர். அப்படியே, சாஸ்திரோபதேசம் பெற்றவர்களில், குருகளின் சிஷ்யரான ஸ்ரீவித்யா வாரிதி தீர்த்த ஸ்ரீபாதங்களவர், அதமாரு மடாதீஷராக இருந்த ஸ்ரீவிபுதேஷ தீர்த்தர், ஸோதே மடத்து ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஆகியோர். இவர்களைத் தவிர, ஸ்ரீரகுராம ஐதாள ஆசார்யரே ஆகியோரும் குருகளிடம் அத்யயனம் செய்தனர்.

ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தரின் அனுஷ்டான சக்தி, சாஸ்திர தீக்ஷை, பாட பிரவசனங்கள், ஸ்ரீஹரி குருகளை திருப்திப்படுத்தும் செயல்கள், சிஷ்யர்கள் மேல் அவருக்கு இருந்த கருணை, பூத-தயை ஆகிய குணங்கள், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை அப்படியே ஈர்த்தது. குருகளின் சித்தாந்த மண்டனம், அன்வயார்த்த நிரூபணம், சம்பந்த- பின்னணி- பூர்வ பக்ஷங்களை விளக்குவது, ஆகிய அனைத்தும் அற்புதமானவை. இவை அனைத்திற்கும் மீறியதாக, கிரந்த கர்த்ருகளை, அவர்களது உதவிகளை எப்போதும் நினைப்பது. இவை அனைத்தையும் வர்ணிப்பதற்கு நம்மால் முடியாது. சில சமயம், ஞானி வரேண்யர்களின் கருணையை சிந்தித்தவாறு கண்களில் கண்ணீர் விட்டு வந்தார். அபாரமான சாதகர் குருகள். உபதேசம் செய்யும் விஷயம், சிஷ்யர்களின் மனதில் சென்று சேரும்வரை அதனை போதிப்பது, குருகளின் சிறப்பாக இருந்தது. இத்தகைய ஆளுமையைக் கொண்டிருந்த குருகளின் நற்குணங்கள் அப்படியே ஸ்ரீவிஷ்வோத்தமரிடமும் இருந்தது.

இங்கு பார்த்த குணங்கள் அனைத்தும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடம் அப்படியே இருந்தன. சிஷ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நேரம் தவறாமை, சிந்திக்கும் சக்தி, விஷயத்தை கிரகிக்கும் தன்மை, பிரமாணங்களுடன் விளக்கும் தன்மை, நிரூபிக்கும் திறமை, ஆகிய குணங்கள் அபாரமாக இருந்தன. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஸ்ரீவித்யா சமுத்ர தீர்த்தரிடம் தத்வபிரகாசிகா, வியாஸ த்ரய, ப்ரஸ்தான த்ரய பாஷ்ய, யுக்தி மல்லிகா, நியாயஸுதா ஆகிய கிரந்தங்களை அத்யயனம் செய்து, அதில் சிறந்த ஆளுமை என்றும் பெயர் பெற்றார். சாஸ்திர அத்யயன, படன, பாராயணாதிகளை நிரந்தர மற்றும் உத்தம விரதத்தைப் போல செய்து வந்தார் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்.

இவருடைய சஞ்சாரம் மிகக் குறைவு. அப்படி சஞ்சாரம் செய்த காலத்திலும், பாராயணம் தவறவில்லை. தம்முடைய மூன்றாம் பர்யாயத்திற்கு (1980-81) முன்னர், பெரும்பாலும், தம்முடைய சாதுர்மாத விரதத்தை பஞ்சிமாரிலேயே செய்து வந்தார். ஏனெனில், லௌகிக, புற உலகின் சம்பந்தம் அதிகம் இல்லாத அந்த தனிமையான கிராமம், ஸ்ரீகளவரின் ஏகாந்த சிந்தனை, மனனத்திற்கு தக்கதாக இருந்தது. இத்துடன் ஸ்ரீகளவர், ஸ்ரீஹரி வாயு குருராஜரின் பூதராஜரின் அனன்யமாக செய்த ஆராதன பலன் என்று சொல்வதைப் போல, அவருக்கு தெய்வபலம் அபாரமாக இருந்தது. இதனால் அனேக கிரந்தங்களை படித்தல், விஷயங்களை அறிந்து கொள்ளுதல் அவருக்கு தானாகவே வந்தது. ஸ்ரீகளவரின் இந்த அற்புதமான ஆளுமையின் அறிமுகம், புற உலகிற்கு தெரியவே இல்லை. இலைமறை காய் போல, குப்த-ஸாதகர்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். அவருடன் நெருங்கிய தொடர்பில் இருந்த சிலருக்கு மட்டுமே ஸ்ரீகளவரின் ஞானம், ஸாதனை, ஸித்தி ஆகிய விஷயங்கள் தெரிந்திருந்தன.

## ஸ்ரீயுக்தி மல்லிகா பிரம்மாஸ்திரம்
## (அத்யயனம் செய்யும்போது நடந்த சம்பவம்)

கடந்த நூற்றாண்டில், அத்வைத பண்டிதர்களில் முதன்மையானவராக இருந்தவர் ஸ்ரீஅனந்த கிருஷ்ண சாஸ்திரிகள். அபினவ வித்யாரண்யர் என்றே அவரை அழைத்து வந்தனர். சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் வாக்யார்த்த கோஷ்டிகளில் பங்கேற்று வாதிட்டு வந்தவர் இவர். இத்தகைய இவர் ஒரு முறை உடுப்பிக்கு வந்திருந்தார். அங்கிருந்த பல வித்வாம்ஸர்களையும், யதீந்திரியர்களையும் சந்தித்து வாதிட்டு வந்தார். அப்போது காணியூரு மடத்தின் பர்யாய நடந்து வந்தது. சாஸ்திரிகள், ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தரை சந்தித்தார். சாஸ்திரிய விவாதத்திற்கு தயாரானார். வெறும் மஹா வாக்கியங்களை ஆதரித்து விவாதம் செய்வதைவிட, ஒரு மிகப்பெரிய வேதாந்த கிரந்தத்தை அடிப்படையாகக் கொண்டு விவாதிப்பது சிறந்தது என்று நினைத்தார். அதற்கு ஸ்ரீகளவர், ஸ்ரீவாதிராஜரின் 'யுக்திமல்லிகா' கிரந்தத்தின்படி விவாதிக்கலாம் என்றார்.

குணஸௌரபத்தின் நிர்குணத்வ நிராகரணை மற்றும் விஷ்வஸௌரபத்தின் மித்யாத்வ வாதத்தை ஆதரித்து, விசேஷ வாதம் நடந்தது. ஸ்ரீராஜரின் அபூர்வமான அகண்டமான யுக்தி மற்றும் வாக்குகளை ஒவ்வொரு இடத்திலும் கண்டு, தலைகுனிந்து 'இந்த கிரந்தம் பிரம்மாஸ்திரம்' என்று அதனை பாராட்டினார். அந்த சந்தர்ப்பத்தில், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரே முதலான சிஷ்யர்களுக்கு யுக்தி மல்லிகா பாடம் நடந்து கொண்டிருந்தது. அவர்கள் அனைவரும் இந்த பாராட்டுதல்களைக் கேட்டு, அபாரமான மகிழ்ச்சி, வியப்பு அடைந்தனர். ஸ்ரீகளவர், சாஸ்திரிகளை சன்மானம் செய்து, விடை கொடுத்தார். பிறகு, ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தர், சாஸ்திரிகளின் பாராட்டுதலை விளக்கிய விதம் இவ்வாறு - ஸ்ரீராஜர், பிரம்ம பதவிக்கு வரப்போகிறவர் ஆகையால், அவருடைய கிருதி பிரம்மாஸ்திரம் என்று அழைக்கப்படுவது சரியானதே.

## அவருடைய அபாரமான
## சிந்தனை / மனன சக்தி

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஏகாந்த ப்ரியர். அவருக்கு மிகவும் பிடித்தமான தனிமையான இடம், பஞ்சிமாரில் இருக்கும் ஷாகா மடம். 1978க்கு முன்னர், அவர் அதிக காலம் இருந்தது பஞ்சிமாரில்தான். வேலை இருந்தால் உடுப்பி, ஸோதெ மற்றும் மற்ற இடங்களுக்கு சென்று வந்தார். சாஸ்திர அத்யயனத்திற்குப் பிறகு, விசேஷ சிந்தனை மனனத்திற்காக, ஒரு விரதத்தைப் போல, கிரந்தங்களை படிக்கும் செயலை செய்தார்.

காலையில் 8 மணிக்குள் காலை வேளையின் பூஜை, நைவேத்தியங்கள் முடிவடைந்திருந்தன. 8.30 மணியிலிருந்து 11 மணி வரை, கிரந்தங்களின் பாராயணம். 11 மணிக்கு பிக்ஷை. பிறகு, கிரந்தங்களை படிப்பது. ஓய்வு என்பதே கிடையாது. மறுபடி மாலை வரை, பல்வேறு விஷயங்களைப் பற்றி சிந்தனை, மனனம். மாலையில், ஸ்னானத்திற்கு முன்னர், சந்திக்க வந்தவர்களுடன் சந்திப்பு, மந்திராட்சதை கொடுத்து அருளுதல். இரவு 8 மணிக்கு, ஸ்னானம், ஜப, பூஜாதிகள் அனைத்தும் முடித்தல். மறுபடி இரவு 8 முதல் 10 மணி வரை கிரந்தங்களை படித்தல். நிர்வாக அல்லது மற்ற காரியங்களுக்காக இந்த நேரங்களில் சிறிது மாற்றம் இருந்திருக்கலாம்.

தமது சிறப்பு குறிப்புகளை (டிப்பணிகளை), ஸ்ரீகளவர் தாம் படிக்கும் கிரந்தத்தின் பக்கங்களிலோ, அல்லது தனியாக ஒரு காகிதத்திலோ எழுதி வைக்கும் வழக்கத்தை பெற்றிருந்தார். சில சமயம் அந்த விஷயங்களைப் பற்றி வித்வாம்சர்களிடம் விவாதமும் செய்து வந்தார். இவை தவிர, பல தார்மிக விஷயங்களையும் தம்மை சார்ந்தவர்களுடனும், மற்றவர்களுடனும் பகிர்ந்து வந்தார். இப்படியாக, பஞ்சிமாரின் தனிமை, பூஜ்ய ஸ்ரீகளவருக்கு மிகவும் பிடித்தமானதாக இருந்தது. (இந்த

விஷயங்கள் அனைத்தும், ஸ்ரீகளவருடனேயே அவரது அருகில் இருந்தவரான ஸ்ரீகோவிந்தண்ணா அவர்கள் கூறக் கேட்டதாகும்).

## அகராதியின் அர்த்தம்.. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்

பொதுவாக சம்ஸ்கிருதத்தில் அமரகோஷத்தையே அதிகமாக மேற்கோள் காட்டுவது உண்டு. பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு அமரகோஷம் தவிர மற்ற கோஷங்களின் அறிமுகம் மற்றும் அவற்றில் ஆளுமையும் இருந்தது. ஷாகுந்தல மற்றும் தனஞ்சய கோஷங்கள் அவருக்கு மனப்பாடமாக இருந்தன. ஒரு முறை பூஜ்யர் இவ்வாறு கூறியதுண்டு. 'டீகா டிப்பண்யாதிகளை, அதிலும் ஸ்ரீராஜரின் லக்ஷாலங்கார, ஸனத் ஸுஜாதிய பாஷ்ய, பாவ பிரகாஷிகா, குர்வர்த்த தீபிகா ஆகியவற்றை படிக்கும்போது, அனேக கோஷங்களின் மேற்கோள்களை பார்ப்பதுண்டு. அவற்றை திரும்பத்திரும்ப படித்து, மனனம் செய்வது நல்ல விஷயம் ஆகும். ஆகையால், அதிகமான அர்த்தங்களை அறிய முடியும். அது மட்டுமல்லாமல், அவற்றை நமது கட்டுரைகளில் / புத்தகங்களில் பயன்படுத்த முடியும்'.

இந்த வாக்கினை அவர் வெறும் வார்த்தைக்காக சொன்னவர் இல்லை. தமது கிருதிகளில் இப்படியே பயன்படுத்தியவரும் ஆவார். ஆகையாலேயே, ஞானிகளின் வாக்குகளுக்கு, அபூர்வமான மற்றும் ஆழமான அர்த்தங்களை சொல்லி வந்தார். ஸ்ரீகளவருக்கு ஏகாக்ஷர கோஷமும் மனப்பாடமாக இருந்தது.

பூஜ்ய ஸ்ரீகளவருக்கு வ்யாகரண சாஸ்திரங்களிலும் அபாரமான பாண்டித்யம் இருந்தது. பாடாந்தர விஷயங்கள் (வெவ்வேறு பாடங்கள்) வந்தபோது, குறிப்பு புத்தகங்கள் இல்லாமலேயே, வ்யாகரண ஸூத்ரங்களை மேற்கோள் காட்டி வந்தார். அவருடைய சம்ஸ்கிருத மொழித் திறன், அற்புதம். அது சரளம் மற்றும் ஆழமானது. பேசு மொழியிலும் திறன் பெற்றிருந்தார். ஒரு முறை பெள்ளாரியில் ஸ்ரீகளவர் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது, வண்டி ஓட்டுனருக்கு புரியக்கூடாது என்று, சரளமான சம்ஸ்கிருதத்தில் பேசிக் கொண்டு வந்தது, இன்னும் நினைவில் உள்ளது. இப்படியாக, வியாகரண, கோஷ, நிருக்தாதி சாஸ்திர சம்பந்தப்பட்ட அனைத்திலும் இவரே ஒரு கோஷமாக விளங்கினார்.

## கையெழுத்துப் பிரதிகளை தொகுத்த ஸ்ரீகளவர்

பூஜ்ய ஸ்ரீகளவருக்கு, கையெழுத்துப் பிரதிகளை சேகரிக்கும் விருப்பம் அதிகமாக இருந்தது. இதற்குக் காரணம், இவரது வித்யா குருகளாக இருந்த காணியூரு மடாதீஷர் ஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தரே ஆவார். இரவு வரைக்கும் கையெழுத்துப் பிரதிகள் ஆராய்ச்சி, படிப்பது, அதன் மூலமே பாடம் நடத்துவது என குருகள் செய்ததன் பாதிப்பு இவருக்கும் இருந்தது. சஞ்சாரம் செய்யும் இடங்களிலெல்லாம் கையெழுத்துப் பிரதிகளைப் பற்றிய தகவல்களைப் பரப்புவதே முதல் வேலை. பிறகே மற்ற வேலைகள். வித்வாம்ஸர்கள் மற்றும் பிராமணர்களை சந்திக்கும் போதெல்லாம், கையெழுத்துப் பிரதிகளைப் பற்றி விசேஷமாக எடுத்துச் சொல்லி, அவற்றை சேகரித்துக் கொண்டிருந்தார். இப்படியாக ஸ்ரீகளவர் சேகரித்த கையெழுத்துப் பிரதிகளின் எண்ணிக்கை இரண்டாயிரத்துக்கு மேல் ஆகும். இவற்றைத் தவிர, அச்சுப் பிரதிகளின் எண்ணிக்கையும் மிக அதிகமாகும்.

துளு, நாகரி, நந்திநாகரி மற்றும் ஹளெகன்னட ஆகிய லிபிகளை (எழுத்துக்களை) ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் அறிந்தவராக இருந்தார். அந்த எழுத்துக்களைக் கொண்ட கையெழுத்து பிரதிகளை அவர் தடையின்றி வேகமாக படிப்பவராக இருந்தார். ஸ்ரீகளவரின் கையெழுத்தும் மிகவும் தெளிவாகவும் மற்றும் அழகாகவும் இருந்தது. நேரம் கிடைத்தபோதெல்லாம் துளு லிபியின் கையெழுத்துப் பிரதிகளை, சம்ஸ்கிருத மொழியில் எழுதி வந்தார். அந்த சமயத்தில், ஸ்ரீவெங்கடரமண தந்த்ரிகள் மற்றும் ஸ்ரீராமராயரின் சேவை உதவிகள் நினைவில் கொள்ளத் தக்கவை.

தனிமையில் இருந்தபோது, ஸ்ரீகளவர், கையெழுத்துப் பிரதிகளை ஆராய்ந்து படிப்பதையே பழக்கமாக வைத்திருந்தார். மற்ற பரம்பரைகளில் வந்த ஞானிகளால் எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதிகள் இவருடைய தொகுப்பில் இருந்தது. உதாரணத்திற்கு: ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தரின் (வேறு இடத்தில் எங்கும் கிடைக்காத) கையெழுத்துப் பிரதிகளை, ஸ்ரீராஜா எஸ். குருராஜாசார்யருக்குக் கொடுத்து, அவற்றை பதிப்பிக்கவும் ஏற்பாடு செய்தவர் ஸ்ரீகளவர்.

மிகப்பழமையான கிரந்தாலயங்களின் சிறப்பு பிரதிகளை ஸ்ரீகளவர் சேகரித்திருந்தார். காஷ்மீரத்தைச் சேர்ந்த ஒரு கிரந்தாலயத்தில், பத்மனாப பட்டாரகரின் ‘வாயுலீலா விஸ்தார’ என்னும் கிரந்தம் கிடைக்கிறது என்னும் தகவல் ஸ்ரீகளவருக்குக் கிடைத்தது. அதனைப் பெறுவதற்கு ஸ்ரீகளவர் மிகவும் முயற்சி செய்தார். ஆனால் அது கிடைக்கவில்லை. அதுவே தெய்வத்தின் விருப்பமாக இருக்கலாம்.

கையெழுத்துப் பிரதிகளை சேகரித்துப் படிப்பதில் ஸ்ரீகளவர் ஒரு மிகச்சிறந்த ஆராய்ச்சியாளர். அதன் பலனாகவே ‘தவ்யஸ்தோத்ர’, ‘பஞ்சபேதஸ்துதி’, ‘ஹயக்ரீவ ஸ்துதி பத்ய பஞ்சக’ மற்றும் ‘ஸ்ரீமன் மத்வவிலாஸ’ ஆகிய கிருதிகள் வெளிவந்திருக்கின்றன. இவை தவிர, அனேக பிரமேய விஷயங்களும் அச்சுப் பிரதிகளில் வந்திருக்கின்றன.

## அபூர்வ கிரந்த ஆராய்ச்சி

ஞானிகள் ஏகாந்தத்தை விரும்புவது போகத்திற்காக அல்ல. அது ஸ்ரீகாந்தனை சிந்திப்பதற்காகவே. வேதாந்தத்தின் அந்தத்தை (நிர்ணயத்தை) அறிவதற்காக. இந்த பழக்கம் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடம் அதிகமாக இருந்தது. உடுப்பியிலோ, ஸோதெயிலோ, அல்லது வேறு ஷாகா மடங்களிலோ, பூஜ்ய ஸ்ரீகளவர் எப்போதும் ஓய்வினை விரும்பியவர் அல்ல. லௌகிக சம்பந்தத்தை விரும்பியவர் அல்ல. தாமரை இலை தண்ணீர் போல நிர்லிப்தராக இருந்து ‘யாவதர்த்தஷ்ச லோகே’ என்னும் பாகவத வாக்கியத்திற்கேற்ப, செயல்களை செய்து வந்தார். எப்போதும் சாஸ்திர கிரந்தங்களின் ஆராய்ச்சி, படித்தல் என இவற்றிலேயே ஈடுபட்டிருந்தார். ஸ்ரீகளவர் இவ்வாறு படித்துக் கொண்டிருந்தது, அவர் புகழ், பெயர் ஆகியவற்றைப் பெறுவதற்காக அல்லவே அல்ல. அவருடைய கவனம், ஒருமனதுடன் படிக்கும் திறன் ஆகியவை அபாரமானது. இதனால், ஸ்ரீமத்வாசார்யரின், ஸ்ரீவாதிராஜரின் மற்றும் மற்ற ஞானிகளின் கிருதி ரத்னங்கள் (சம்ஸ்கிருத & கன்னட), குருகளின் தலையில் / மனதில் சென்று சேர்ந்து பத்திரமாக அங்கேயே தங்கின. இப்படி சென்று தங்கியவற்றை மறுபடி சிந்தித்து எடுத்துச் சொல்லும் அவருடைய திறன் அபாரமானது. இவை அனைவருக்கும் தெரிந்திருக்கவில்லை. அருகில் இருந்த சிலர் மட்டுமே இதனை கவனித்து சொல்லியிருக்கின்றனர்.

## ஸூத்ர பாஷ்ய:

ஸ்ரீமத்வாசார்யரின் ஸூத்ர பாஷ்யமானது, அவருடைய சன்னிதானத்தின் இருப்பிடம் ஆகும். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் அருகில் எப்போதும் ஒரு சிறிய புத்தகமாக - ஸூத்ர பாஷ்ய புத்தகம் இருக்கும். நிரந்தரமாக இதனை படிக்கும், சிந்திக்கும் பழக்கம் ஸ்ரீகளவருக்கு இருந்தது. ஒரு முறை அருகில் இருக்கும் ஹத்திபௌகல் கிராமத்திற்கு பயணம் செய்யும் சந்தர்ப்பம் வந்தது. அங்கு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீபிராணதேவரின் சன்னிதி இருக்கிறது. ஞான வைராக்ய மூர்த்திகளான ஸ்ரீஹத்திபௌகல் நரசிம்மாசார்யரின் மற்றும் அவருடைய சிஷ்யரின் இருப்பிடம் ஆகும். அங்கு செல்லும்போது, ஸ்ரீகளவர் மூலமாக ஆசார்யரின் மஹிமா சிரவணம் நடந்தது.

பாட பிரவசனத்தில் ஸாதனா அத்யாயத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தவர் ஆசார்யர். இது ஸ்ரீகளவருக்கும் இஷ்டமான அம்சம். அங்கு சென்றபிறகு, ஸ்ரீபிராணதேவரின் தரிசனம் பெற்று, அந்த இடத்தின் மகிமையை சிந்தித்து மகிழ்ந்தார். ஆசார்யரின் சன்னிதியில் சிறிது நேரம் செலவழித்தார்.

ஸூத்ர பாஷ்யத்தின் ஸாதனா அத்யாயத்தின் அனேக பத்திகளை ராகத்துடன் கூறியவாறு (புத்தகத்தின் தேவை இருந்திக்கவில்லை) அனைவரையும் மகிழ்வித்தார். நடுவில் தத்வபிரகாசிகா மற்றும் குர்வர்த்ததீபிகாவின் சம்பந்தப்பட்ட பத்திகளும் மேற்கோள் காட்டப்பட்டன (பூஜ்யரே கிரந்தத்தின் பெயரை கூறினார்). அங்கிருந்தவர்கள் வியந்தனர்.

## மகாபாரத தாத்பர்ய நிர்ணய:

தாத்பர்ய நிர்ணய – ஆசார்ய மத்வரின் மேரு கிருதி. இது பிரமேயங்களை விளக்கும் கிரந்தம். 32 அத்தியாயங்களைக் கொண்ட இந்த கிருதி ரத்ன, 32 நல்ல லட்சணங்களைக் கொண்டவரான மத்வரின் ஆளுமைக்கு சமமாகும். '... ஸம்ஷயச்சிதம்'. என்பதே இந்த கிரந்தத்தின் சிறப்பு. மகாபாரதம் – ஐந்தாம் வேதம். இது பௌருஷேய வேதம் என்று அழைக்கப்படுகிறது. இதனை இயற்றிய வியாஸர், சாட்சாத் நாராயணனே. ஆனால், 'வியாஸோ கஷ்சன ரிஷி:' என்பது துர்வாதம். 'கோ ஹ்யன்ய: புண்டரீகாக்ஷான் மஹாபாரத க்ருத் பவேத்' என்று அந்த கிரந்தத்திலேயே வியாஸர் நாராயணனே என்பதற்கு தெளிவான வசனம் இருக்கிறது. இந்த கிரந்தம், வேதவியாஸரின் நிர்தோஷத்வத்தை மற்றும் நாராயண ஸ்வரூபத்வத்தையும் நிரூபிக்கிறது.

ஒரு முறை, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸோதெயில் இருந்தார். ஒரு நாள் மதிய நேரத்தில், ஸ்ரீகளவரின் முன்னர் நாங்கள் பலர் அமர்ந்திருந்தோம். பூஜ்ய ஸ்ரீகளவர், ஸ்ரீராஜரின் வ்ருந்தாவனத்தின் முன் இருந்த ஸ்ரீவேதவியாஸரின் ஸன்னிதியின் சிறப்பினை விளக்கிக் கொண்டிருந்தார். கரங்களில் இருக்கும் சக்ர, ஷங்கங்களின் சின்னம், ஞான முத்திரை, அனைத்தையும் விசேஷமானவை என்று சொல்லியவாறு, தாத்பர்ய நிர்ணய 10ம் அத்தியாயத்தின் அனேக பத்திகளை மேற்கோள் காட்டியவாறு, வியாஸாவதாரத்தின் அபூர்வத்தினை விளக்கினார்.

ஸ்ரீராஜரின் வியாக்யனமான பாவ பிரகாசிகாவின் பத்திகளையும் அங்கங்கு குறிப்பிட்டார். ஆசார்ய மத்வரின் இந்த கிருதி மட்டும் இல்லையெனில், ஸ்ரீவேதவியாஸரின் உண்மையான மஹிமா ஞானம் நமக்குத் தெரியாமல் போயிருக்கும் என்று கூறும்போது, ஸ்ரீகளவரின் கண்களில் நீர் நிரம்பியிருந்தது. பூதனா வதம், கலிய மர்த்தனம், ருக்மிணி கல்யாணம் ஆகிய சம்பவங்களைப் பற்றி, தாத்பர்ய நிர்ணய மற்றும் ருக்மிணீஷ விஜயத்தின் பத்திகளை, அந்தந்த புத்தகங்களைப் பார்க்காமலேயே மேற்கோள் காட்டி விளக்கினார் என்பது இன்றும் நினைவில் நிற்கிறது. வாலி ஸம்ஹாரத்தின் பின்னணியை தாத்பர்ய நிர்ணய ஸ்லோகங்களைக் கூறி விளக்கியது வியப்பான விஷயம். (இந்த விஷயத்தை ஹம்பியில் வாலி வதையின் இடத்தை நவவிருந்தாவனத்தின் சன்னிதியிலிருந்து தூரத்திலேயே பார்த்து, பிறகு, யந்த்ரோத்தார முக்யபிராணதேவரின் சன்னிதியில் இரவு நேரத்தில், பூஜைக்குப் பிறகு, பேசிக் கொண்டிருக்கும்போது கூறியதாகும். அந்த சமயத்தில் ஆசார்யராக இருந்த ஸ்ரீகாமலாபுர குருராஜாசார்யரும் அங்கு உடன் இருந்தார்).

## யுக்திமல்லிகா:

ஸ்ரீவாதிராஜரின் கிருதிகளின் விஷயத்தில், பூஜ்ய ஸ்ரீகளவருக்கு அபாரமான கௌரவம் இருந்தது. கிருதிகளைப் பற்றி பேசும்போது அதிகமான மரியாதை காட்டினார். ஸ்ரீகுருராஜரின் கிருதிகள் அனைத்தும் அவரைப் போலவே நிர்தோஷமான கிருதிகள் என்று கூறியவர். அவருடைய ஸன்னிதானத்தை இந்த கிருதிகள் கொண்டிருக்கின்றன என்பதை அறிந்தவர். கிருதிகளின் மனனம், அத்யயனத்தின் மூலம், கிருதி-கர்த்ருவின் மகிமையையும் அறிய வேண்டும் என்னும் எண்ணம் / அபிப்பிராயம் அவருக்கு இருந்தது. ஆசார்ய மத்வரைப் போல, சர்வக்ஞ குருகளான ஸ்ரீவாதிராஜரின் கிருதிகள் அனைத்தும் பற்பல அர்த்தங்களைக் கொண்டவை என்றும் யாராலும் வெல்லப்பட முடியாதவை என்றும் அவர் கருத்து கொண்டிருந்தார்.

ஆகையாலேயே, பூஜ்ய ஸ்ரீகளவர், ஒவ்வொரு பதத்தையும் விசேஷமாக மனனம் செய்தவாறு, அனைத்தையும் முழுமையாக அறிந்திருந்தார். தீர்த்த பிரபந்தத்தின் 'ஷப்தாலங்காரபத்தம்

தமலகுலஹர ஷ்லாகனீயார்த்த ஹ்ருத்யம்’ - ருக்மணீஷ விஜயத்தின் ‘ப்ரேமணா சிந்தயதாபி விசித்ரவிமல ஷ்லாக்யார்த்த ஸந்தாயனி’ மற்றும் சரஸ்பாரதி விலாஸத்தின் ‘சார்வபூர்வ ப்ரதஸ்ரேணீம்’ இந்த வாக்கியங்களை மேற்கோள் காட்டியவாறு இவை அனைத்தும் நற்காவியத்தின் சிறப்பு லட்சணங்கள் என்று கூறினார். ருக்மிணீஷ விஜயத்தின் ‘க்ருஷ்ணஸ்யோதய வர்ணன்யே’ என்னும் 19ம் சர்க்கத்தின் ஸ்லோகம் காவிய க்ருதியின் லட்சண பிரகாரத்தை வர்ணிக்கும் உக்தி என்று சொல்லி வந்தார்.

ஸ்ரீஸ்வப்ன வ்ருந்தாவனாக்யானத்தில் வருவதான பத்யங்களின், விஷயங்களின் பின்னணி மற்றும் சிறப்பினை நன்றாக அறிந்திருந்தார். ஆக்யானத்தில், பற்பல பிறவிகளுக்கு சம்பந்தப்பட்ட சம்பவங்களை தக்க பிரமாணங்களுடன் விளக்கிக்கொண்டிருந்தார். அதே சமயத்தில், லட்சாலங்கார மற்றும் ஸனத்ஸுஜாதீய பாஷ்ய க்ருதிகளில் இருக்கும் விவரணைகளையும் உதாரணம் கொடுத்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீவாதிராஜரின் யுக்திமல்லிகா கிருதியானது, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு அனைத்துமாக இருந்தது. ஆசார்ய மத்வரின் அனுவியாக்யானத்தைப் போல இதற்கும் கௌவரம் கொடுத்துக் கொண்டிருந்தார். ‘ஹ்ருத்யபத்யரஸஸ்னிக்தாம்...’ ஆகிய வாக்குகளை மேற்கோள் காட்டியவாறு, வேதாந்தத்திற்கு ஒப்பான கிரமம் இந்த கிருதியில் அடங்கியிருக்கிறது; படிப்பவர்களுக்கு அற்புத சாகித்ய கிருதியின் அத்யயனத்தின் அனுபவத்தைக் கொடுக்கிறது. ஸ்ரீராஜர் கொடுத்திருக்கும் உதாரணங்கள், அனைவரின் அனுபவத்திற்கு வந்திருப்பவையே ஆகும். அவருடைய யுக்தி அற்புதமானது மற்றும் பிரமாணங்கள் போற்றத்தக்கவை. யுக்திமல்லிகாவில் இருக்கும் பரவாதிகளின் பிரமாண விமரிசனம், பிரமேய விமர்சனம் அற்புதமானது. மீமாம்ஸ, இதிகாச புராணங்கள், ஸ்ம்ருதாதி உக்திகளின் விளக்கங்கள், சுருக்கமான – விவரமான விளக்கங்கள், ஸ்ருதி பாகங்களின் அபூர்வ வியாக்யானங்கள் ஆகியவை கொண்டு கொடுக்கப்பட்ட பிரமாணங்கள் அற்புதமானவை. யுக்திமல்லிகாவில் வந்திருக்கும் பிரார்த்தனைகள் ஏராளம்.

பூஜ்ய ஸ்ரீகளவரின் நான்காம் பர்யாய (1996-98). பர்யாய துவங்கியபின், ஸ்ரீகளவர் யுக்திமல்லிகா பாடத்தை துவக்கினார். மதியம் 3 முதல் 5 மணி வரை அது நடந்தது. பூஜ்ய ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர், ஸ்ரீகுருராஜ புராணிக, ஸ்ரீராகவேந்திர புராணிக, S.K.ஆசார் ஆகியோர் அங்கு இருந்தனர். ஸ்ரீகோபாலகிருஷ்ண உபாத்யாய நேரம் கிடைக்கும்போதெல்லாம் வந்தார். நானும்கூட மஹாவித்யாலயாவிற்கு விடுமுறை இருந்த காலங்களிலெல்லாம் மற்றும் பிரவசனங்களுக்கு சென்றபோதெல்லாம் தவறாமல் பாடத்தில் அமர்ந்தேன். ஸ்ரீகளவர் ஸ்ரீராஜரின் மற்றும் கிருதிரத்னத்தின் பின்னணியைப் பற்றி துவக்கத்தில் மிகவும் அற்புதமாக விளக்கினார்.

பாடத்திற்காக கையெழுத்துப் பிரதியையே வைத்துக் கொண்டிருந்தார். ஆனால், அதை எப்போதாவது மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தார். டிப்பணி சஹிதமாக மூலம் அவருக்கு மனப்பாடமே ஆகியிருந்தது. டிப்பணியின் மங்களாசரண பாகம் சொல்லி, ஸ்ரீராஜரின் விளக்கும் திறமையைப் பற்றி ஸ்ரீஸுரோத்தம தீர்த்தரின் அபிப்பிராயம்.. ஜயமுனீனபி | வாதிராஜ குரோன்னத்வா.. என்பதில் அபி மற்றும் வாதிராஜகுரு பதங்களின் முக்கிய அர்த்தத்தை விளக்கினார்.

பக்த்யா ஸ்துத்யா விரக்த்யா... என்னும் மங்களாசரணத்தின் தாத்பர்யத்தை டிப்பணிக்கு தக்கவாறு சொல்லி, கடைசி சரணம் ஸ்வாப்னத்தில் வந்தபடியே இருக்கிறது என்பதன் மகத்துவத்தை தெரிவித்தார். மறுபடி முதலாம் சரணத்தை சொல்லியவாறு, ஸ்ரீஹயக்ரீவதேவர் அனைத்து ருஜுதேவதைகளுக்கு வேதாதி சாஸ்திரங்களை உபதேசித்து, தக்க சாதனைகளை எவ்வித தடைகளும் இன்றி செய்வித்து, தக்க பதவிகளை எவ்வாறு அருளினார் என்பதை விவரித்து வ்ருந்தாவனாக்யான 22ம் அத்தியாயத்தின் ‘மமாபி பாதஸேவயா ததாதி யோக்ய வைபவம்’ என்பதை மேற்கோள் காட்டி, மகிழ்ச்சிப்படுத்தினார்.

மூன்றாம் சரணத்தில் இருக்கும் ‘. அமுத்ரபாத்ரே நமஸ்தே’ என்பதின் அர்த்தத்தை விவரிக்கும்போது ஸ்ரீமத்வாசார்யரைப் போல, ஸ்ரீவாதிராஜருக்கும் ஸ்ரீஹயவதனன் பிரத்யட்சம் ஆனான் என்றும், ஸ்ரீமத்வரைப் போலவே இவரும், எதிரில் ஸ்வாமியைக் கண்டவாறு

நமஸ்கரித்து கிருதிகளை இயற்றியிருக்கிறார் என்றும் விளக்கினார். இதற்கு ஆதாரமாக, மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் ஸ்ரீராஜரின் பாவபிரகாஷிகா வியாக்யானத்தின் பாகம் 'ஸ்வேன அபரோக்ஷீக்ருதாய ஏவ நாராயணாய வந்தனமிதம் ந து அன்யவத் பரோக்ஷீக்ருதாய இதி ஸூசனாய தே நம இத்யுக்தம்' என்று மேற்கோள் காட்டி, ஸ்ரீமத்வரையும் ஸ்ரீவாதிராஜரையும் ஒப்பிட்டு மகிழ்ந்தார்.
அதைப் போல, '... ஹயக்ரீவம் தேவம் வயமிமமுபாஸ்யைவ க்ருதின:' என்று ஸ்லோகத்தின் கடைசி சரணத்தை சொல்லியவாறு, இங்கு இருக்கும் 'ஏவ' என்பது, ஸ்ரீகுருராஜரின் ஏகாந்த பக்தத்வத்தை குறிக்கிறது என்றார். உடனடியாக 'ஸரஸபாரதிவிலாஸ'த்தின் கடைசி பகுதியில் இருக்கும் 'தமேவ சார்ச்சயே நித்யம் தமேவ ப்ரார்த்தயேsனிஷம் | தமேவ சிந்தயே சித்ரே த்யாயே மஹிதமேவ ஹி' மற்றும் வ்ருந்தாவனாக்யாத்தின் 1ம் அத்தியாயத்தின் நமாமி நாராயண பாதபத்மம்... ஸ்மராமி நாராயண மூர்த்திமேவ - என்னும் பிரமாணங்களை சொல்லி, ஸ்ரீராஜரின், ருஜுமகிமையை கொண்டாடியிருக்கிறார்.

அப்படியே 'அதுனா விதுனா ருத்தம்...' என்னும் ஸ்லோகத்தை பாடம் சொல்லும்போது ஸ்ரீராஜரின் கிருதிகளின் மற்றும் ஸ்வரூப மஹிமா விஷயத்தில் பண்டிதர்களின் அபிப்பிராயத்தை சொல்லியவாறு, அதற்கான சரியான பிரமாணத்தை தானே அறியவில்லை என்று சொல்லி வருத்தப்பட்டார். பௌத்தரின் ஸ்வபாவத்தின் நிராகரண பாகத்தில் இருக்கும் 'யஸ்தம்ப ஸம்பவோ டிம்பம்' ஸ்லோக விவரணையை கொடுக்கும்போது பூஜ்ய ஸ்ரீகளவர் நாத்திக வாதத்தின் நிராதாரத்வத்தை மற்றும் ஆகமங்களை புறக்கணிப்பதை விஷ்ணு தத்வ நிர்ணய, கல்ப லதா ஆகிய மற்ற கிரந்தங்களில் உள்ள பிரமாண விஷயங்களை மனப்பாடமாக சொல்லி விளக்கினார்.

மேற்கண்ட ஸ்லோகத்தின் டிப்பணி பாகத்தை கிரந்தத்தைப் பார்க்காமலேயே விளக்கினார். 'மமஸ்வாமி இத்யனேன சேதனானாமபி ப்ரவ்யத்தி: தததீனா | அன்யதா சேதனாந்தரே அத்ருஷ்டா ஈத்ருஷீ க்ரந்தகரணஷக்தி: கதமபூதி: ஸூசயதி'. ருஜு அல்லாத தேவதைகளில், ஈத்ருஷ கிரந்தங்களை இயற்றும் சக்தியை வெளிப்படுத்தாமல், ஸ்ரீராஜரில் மட்டும் அதனை செய்திருக்கிறான். ஸ்ரீவாதிராஜரை ஜீவோத்தம அதிஷ்டான என்று அறிய வேண்டும் என்று விளக்கினார். அதே சமயத்தில், ஸ்ரீவாதிராஜ குருகளின் தனித்துவத்தை காட்டும் விதமாக பலஸௌரபாவில் இருக்கும் வாயுஸ்துதி சம்பந்தப்பட்ட மூல பங்க்தி மற்றும் டிப்பணியை நேரடியாக மேற்கோள் காட்டி விளக்கினார்.

யத்வாயோ: பவமானஸ்ய பூயமானாபிதஸ்ய ச |
ஸூக்தஸ்தர்சாமியம் சர்ச்சா தத்வாயுஸ்துதிரேவ ந: ||
வாயுஸ்துதௌ ச மத்வாக்யா ஸக்ருதேவ ப்ரதர்ஷிதா |
அஸக்ருன் மத்வஸன்னாம்னே ஸேயம் வாயோர்மஹாஸ்துதி: ||

யத்யஸ்மாத் பவமானச்ய பூயமானாபிதஸ்ய ச ஸூக்தஸ்தர்சாமியம்
சர்ச்சா வாயோரேவ சர்ச்சா தத் தஸ்மாத் இயம் சர்ச்சா ந:
வாயுஸ்துதிரேவ இதி ஸம்பந்த: ||

இத்தகைய வசனங்கள் ஸ்ரீராஜரின் சிறப்பினையும், மகிமைகளையும் விளக்குகின்றன என்று கூறினார். 'அயமிஹ ஸுமதிம் வாயுதேவோ விதத்யாத்' ஆகிய மேற்கோள்கள் ஆசார்ய மத்வரால் ஒப்புக்கொள்ளப்பட்ட கிருதியின் விஷயத்தில் கௌரவிக்கப்படும் விதங்கள் என்று விளக்கினார். வியாப்த-ஐக்யத்தை ஸ்ரீராஜரே தனியாக மற்றும் நன்றாக விளக்கியிருக்கிறார். ஆசார்ய மத்வரே பூகோள விஷயங்களை, அந்த அம்சங்களை ஸ்ரீராஜருக்கு விவரிக்க ஒரு சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறார் என்பது, ஸ்ரீகளவரின் அபிப்பிராயமாக இருந்தது.

மேலும் யுக்திமல்லிகாவில் உள்ள பல்வேறு வாக்கியங்கள் அற்புதமானவை. உதாரணம்: பிரமாண்ய ஸ்வதஸ்த்வ விசேஷ, பிரபந்தக, பிம்ப பிரதிபிம்பபாவ, பாவரூப அஞ்ஞான, பக்தி ஆகியவை. பக்திஷ்ச பகவத் ஸ்னேஹ: - என்னும் வாக்கியம் சிறியதானாலும், மிகச்சிறந்த அர்த்தங்களை சொல்லக்கூடியதாகும். பூஜ்ய ஸ்ரீகளவர் வெறும் வாக்கியங்களை மட்டுமல்ல,

ஒவ்வொரு விஷயத்தின் கடைசியிலும் இருக்கக்கூடிய நிர்ணய அபிப்பிராய உக்திகளையும் அற்புதமாக விளக்கினார். ஸித்தாந்த தத்வ மண்டனையில், அந்த நிர்ணய உக்தி எப்படி பயன்படுத்தப்படுகிறது என்று விடுவித்து விளக்கினார்.

ஸ்ரீராஜர் பரமத நிரகரண மற்றும் ஸ்வமத ஸ்தாபன சம்பந்தமான பாகத்தில் கொடுக்கும் உதாரணங்களை மிக அழகாக விளக்கினார். அத்வைதத்தின் ஐக்யவாதம் அனைத்து விதங்களிலும் சரியல்ல. இது பிரமாணங்களைக் கொண்டதும் அல்ல. அனுபவத்திற்கு வருவதும் அல்ல என்பதை விளக்கும்போது, ஸ்ரீராஜர் கொடுத்திருக்கும் 'ஈஷோஸ்ஹம்பாவதீர் போகே ரோகே ம்ருத்யுஞ்சயார்ச்சக:' என்னும் உதாரணத்தின் விவரத்தை கொடுக்கும்போது, அத்வைதிகளின் வாழ்க்கையில் இருக்கும் விருத்தத்தை சொல்லும் நொடியில், ஸ்ரீகளவர் வீசிய புன்னகையை என்றைக்கும் மறக்கமுடியாது.

இத்தகைய நூற்றுக்கணக்கான உதாரணங்களை பூஜ்ய ஸ்ரீகளவரின் விஷயத்தில் நினைத்து நினைத்து மகிழலாம். ஸ்ரீவாதிராஜர் விளக்குவதான விஷயங்களின் காம்பீர்யம் அபாரமானது. ஸ்ரீராஜரின் கருணா பாத்திரரான ஸ்ரீகளவர், மற்றவர்களைவிட அதிகமாக 'வாதிராஜர வாக்விலாஸ'த்தின் உள் அர்த்தத்தை அறிந்திருந்தார் என்பது தெளிவு. பொதுவாக எப்போதும் ஸ்ரீராஜரின் கிரந்தங்களை படிப்பது, பேசுவது ஆகியவையே பூஜ்ய ஸ்ரீகளவரின் ஸ்வபாவம். ஒரு முறை, யுக்திமல்லிகாவில் இருக்கும் பலஸௌரபாவின் 'அத: ஷுபகுணாம்போதி: ஷுத்த: ஸர்வவிலக்ஷண: | ஸத்யவிஷ்வாஸ்ரயோ முக்தாமுக்தேஷோ ஜயதி ப்ரபு:' என்னும் ஸ்லோகத்தை சொல்லி, ஸ்ரீராஜர் இந்த ஸ்லோகத்தின் மூலம், மொத்த யுக்திமல்லிகா சாரத்தை தொகுத்து சொல்லியிருக்கும் விதம் எங்கும் காணமுடியாதது என்று அருளினார்.

இவ்வாறு, ஸ்ரீவாதிராஜகுருகளின் யுக்திமல்லிகா விஷயத்தில், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் அத்யயன கிரமம், மனன மார்க்க, சிந்திக்கும் விதம், பாடம் சொல்லும் ரீதி, நினைவுத்திறன், ஆகியவை மிகவும் அற்புதமானது. பூஜ்யரின் பார்வையில் இந்த கிரந்தம் – அனைத்தையும் அடக்கிய ஒரு அகராதி. சித்தாந்தத்தின் ஆளுமையை மற்றும் பிரமேய நிரூபணைக்கு சம்பந்தப்பட்ட விஷயங்கள் அனைத்தும் இதில் உள்ளன என்பது அவரது அபிப்பிராயம். ஸ்ரீவாதிராஜரின் இந்த மேரு கிருதியில் சுமார் 32,000க்கும் அதிகமாக யுக்திகள் இருக்கின்றன என்பது ஸ்ரீகளவரின் கணக்கு. ஆனால், அவர் இதனை கணக்கெடுத்த, எழுதிய காகிதங்கள் கிடைக்கவில்லை.

## ருக்மிணீஷவிஜய:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாயத்திற்கு முன் சஞ்சார நடந்த காலம். ஆண்டு 1996-97. மாண்டியாவில் நிகழ்ச்சியை முடித்துவிட்டு, மைசூருக்கு திக்விஜயம் செய்தார். அரையாண்டு கால விடுப்பு இருந்ததால், நானும் அவருடன் சென்றிருந்தேன். மைசூரில் ஸ்ரீராமகிருஷ்ணராவ் என்பவரின் வீட்டில் பூஜை, பிக்ஷை ஆகியவை நடந்தன. அங்கு வித்வான் டாக்டர். ஆனந்ததீர்த்தாச்சார் நாகஸம்பிகெ அவர்களால் ஸ்ரீராஜரின் ருக்மிணீஷ விஜயத்தின் பிரவசனம் நடந்தது. அன்று பிரவசன மங்கள நிகழ்ச்சி. பூஜ்ய ஸ்ரீகளவர் பூஜாதிகளை சிறப்புடன் செய்து முடித்தார். 9.00 மணிக்கு ஸ்ரீஆசார்யரின் மங்கள அனுவாத துவக்கம் 1 முதல் 18 சர்க்கங்களின் சாரத்தை சொல்லிக் கொண்டு வந்தார். 19ம் சர்க்கம் துவங்கியது. ஆசார்யர் அனுவாதத்தின் சந்தர்ப்பத்தில் அந்த சர்க்கத்தின் எந்தெந்த ஸ்லோகங்கள் கூறுகிறாரோ, அவை அனைத்தையும், பூஜ்ய ஸ்ரீகளவர் அவருடனேயே சொல்லிக் கொண்டு வந்தார். அதைப் பார்த்து, ஆசார்யர் முதலாக அனைவருக்கும் வியப்பு. எந்தவொரு கிரந்தமாகட்டும், துவக்கத்தின் சில பகுதிகள் மனப்பாடம் ஆகியிருக்கும் என்பது பொதுவான விஷயம். ஆனால், துவக்கத்தைப் போலவே, கடைசி பாகங்களும் மனப்பாடம் ஆகியிருப்பது மிகவும் அபூர்வம். மங்கள அனுவாத – அற்புதமாக இருந்தது. ஸ்ரீகளவர் முதற்கொண்டு அனைவரும் மகிழ்ந்தனர். பிறகு, பல-மந்திராட்சதை. பிக்ஷை ஸ்வீகார. ஸந்தர்ப்பண ஆகியவை சிறப்புடன் நடந்தன.

## பாகவத:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பஞ்சிமாரின் ஷாகா மடத்தில் இருந்தார். ஸ்ரீகளவரை பார்ப்பதற்கு நான் அங்கு சென்றிருந்தேன். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவரான, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அவர்கள் என்னுடன் இருந்தார். அன்று ஏகாதசி. காலையில் 8 மணிக்கு பூஜையை முடித்தார் ஸ்ரீகளவர். தீர்த்தத்தைக் கொடுத்து 'நம் மடத்தில் பூவராஹ தேவர் ஆராத்ய தெய்வம். அவரே வராஹ புராணத்தில் தரணிதேவிக்கு சாதுர்மாஸ்யாதி மகிமைகளை கூறியவர். பாகவத 3ம் ஸ்கந்தத்தில் ஹிரண்யாக்ஷனின் சம்ஹார சந்தர்ப்பம் வந்தபோது, வராஹ தேவரின் மஹாத்ம்யம் அங்கு சொல்லப்பட்டுள்ளது. இன்று மாலை பூஜைக்குப் பிறகு, பாகவதத்தின் சொல்லப்பட்டுள்ள வராஹ தேவரின் கதையை சொல்லுங்கள்' என்று ஆணையிட்டார். டீகையுடன் இருந்த பாகவத புத்தகத்தையும் கொண்டு வந்து கொடுத்தார். புத்தகத்தை வாங்கிக்கொண்டு மடத்தின் முன் பாகத்திற்கு சென்றேன். புத்தகத்தை படிக்கத் துவங்கினேன்.

மனதில் ஒரு சிறு குழப்பம். ஸ்ரீகளவரின் எதிரில் இதனை சொல்ல முடியுமா? என்னும் கவலை. பூஜ்ய ஸ்ரீகளவரையே சிந்தித்தவாறு, புத்தகத்தை படிக்கத் தொடங்கினேன். ஏகாதசியன்று மாலையில் பூஜைகள் நடந்து முடிந்தன. பத்மனாப பட்டர் தாசரின் பதங்களை பாடினார். ஸ்ரீகோவிந்தண்ண ஆகியோர், ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை சொல்லும் பராகு கூறினார். சங்கு த்வனி முழங்கியது. ஸ்ரீகளவர் ஆசனத்தில் அமர்ந்தார். பூஜ்யரின் சன்னிதிக்கு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். கதையை சொல்லத் துவங்கினேன். புத்தகத்தை பார்த்தவாறு, ஸ்லோகங்களை நான் சொல்லச்சொல்ல, ஸ்ரீகளவரும் அவற்றை பார்க்காமலேயே சொல்லி வந்தார். மிகவும் வியப்படைந்தேன். யதாமதி பகவந்தனின் மகிமைகளைக் கூறி முடித்தேன். பூஜ்ய ஸ்ரீகளவர் மகிழ்ந்தார். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அவர்கள் பூஜ்ய குருகளின் கிரந்த பரிச்சயத்தைக் கண்டு வியந்தார். அதன் பிறகும், பலமுறை அந்த நிகழ்ச்சியை சொல்லிச் சொல்லி மகிழ்ந்திருக்கிறோம்.

## ஸரஸபாரதி விலாஸ:

ஸ்ரீவியாசராஜ குரு பிரதிஷ்டை செய்த முக்யபிராணதேவரின் சன்னிதி கொண்ட சிந்தரவேலி க்ஷேத்திரம் மிகப் புகழ் பெற்றது. அது ஆந்திராவின் கத்வால்க்கு அருகில் உள்ளது. அங்கு அருகில் கிருஷ்ணவேணி ஆறு ஓடிக் கொண்டிருக்கிறது.

ஒரு முறை ராயச்சூர் கத்வால் பகுதியின் ஹரிதாசரின் புண்ய சன்னிதியின் தரிசனம் பெற்று, சிந்தரவேலி க்ஷேத்திரத்திற்குப் போகும் வழியில், ஸ்ரீகளவருடன் கத்வால் சென்று, பக்தர் ஒருவரின் வீட்டில் தங்கலாயிற்று. இரவு பூஜைகள் முடிந்தன. அடுத்த நாள் காலையில் சீக்கிரமாக புறப்படும் தீர்மானம் ஆயிற்று. காலையில் ஸ்ரீகளவர் விரைவில் ஸ்னானம் செய்து புறப்பட்டார். கத்வாலிலிருந்து 20 கிமீ தூரம். அனைவரும் சிந்தரவேலி சென்று சேர்ந்தோம். பூஜை, சமையலுக்குத் தேவையான தயாரிப்புகளை சிஷ்யர்கள் செய்யத் துவங்கினர்.

ஸ்ரீகளவர் புண்யஸ்னானத்திற்காக கிருஷ்ணவேணி நதிக்குச் சென்றார். அனேகர் அவரைத் தொடர்ந்து சென்றனர். புண்ய ஸ்னானாங்க தண்டோதக பிரோக்ஷணம் ஆயிற்று. அனைவரும் பாவனர் ஆனோம். ஸ்ரீகளவர் தமது ஆசனத்தில் அமர்ந்து, ஒரு மனதுடன் அனேக மந்திரங்களை ஜெபிக்கத் துவங்கினார். பிறகு, தேவஸ்தானத்திற்கு வந்தார். சம்ஸ்தான பூஜை மிகச்சிறப்பாக நடந்தேறியது. முக்யபிராண தேவரின் சன்னிதியிலும் சமர்ப்பணாதிகள் நடந்தன. பிக்ஷா ஸ்வீகார, ஸந்தர்ப்பணை ஆகியவை முடிந்தன.

அடுத்த சேவைகளை ஜல்லாபுர உறவினர்களான ஸ்ரீகுண்டுராவ், ஸ்ரீபாண்டுரங்க ராவ், உறவினர் சமர்ப்பித்தனர். மாலையில் 5மணிக்கு, பூஜை துவங்குவதற்கு முன்னர், பூஜ்ய ஸ்ரீகளவர், பூஜா மண்டபத்தின் முன்பு வந்து அமர்ந்தார். பின்னால், தோரணங்கள் அலங்கரிக்கப்பட்டிருந்தன. முன்பு சிலர் அமர்ந்திருந்தனர். மற்றவர்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தனர். ஸ்ரீவாயுதேவரின் மகிமைகளை ஸ்ரீகளவர் விவரிக்கத் துவங்கினார்.

ஸ்ரீவாதிராஜர் இயற்றிய 'ஸரஸபாரதிவிலாஸ' கிரந்தத்தில் இருந்த பல ஸ்லோகங்கள், அதன் அர்த்தங்கள் என பலவற்றை மனப்பாடமாக சொல்லிக் கொண்டே போனார். அங்கிருந்த அர்ச்சகரான ஸ்ரீகேஷவாசார்யரும் மற்றும் அமர்ந்திருந்த அனைவரும் ஸ்ரீகளவரின் பேச்சினைக் கேட்டு மிகவும் மகிழ்ந்தனர். பிறகு மாலை நேரத்து பூஜை துவங்கியது. அங்கிருந்து புறப்படும்போது, நான் மடத்து வாகனத்தில் இருந்தேன். அப்போது 'பத்யு: அஸாமஞ்சஸ்யாத்' என்பதை விளக்கிக் கொண்டிருந்த (சரஸபாரதி விலாஸத்தின் கடைசி விலாஸத்தின் வரிகள்) பூஜ்யரைக் கேட்டு மகிழ்ந்தேன்.

## லட்சுமி ஷோபானெ:

பெங்களூரின் ஸ்ரீவாதிராஜ கல்யாண மண்டபம். அங்கு ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் மாதம், குருவந்தனா நிகழ்ச்சி நடைபெறும். பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் சொல்லும் தேதியிலேயே அந்த நிகழ்ச்சி நடைபெற்று வந்தது. கோடேஷ்வர பக்தர் ஒருவர் நடத்தி வந்த நிகழ்ச்சி அது. அன்று அங்கு யாராவது ஒரு ஸ்ரீகளவரையோ, வித்வாம்ஸர்களையோ அழைத்து உபன்யாசம் செய்ய வைப்பது வழக்கமான ஒன்று. ஒரு முறை, அந்த நிகழ்ச்சியன்று மாலையில் ஆயிரக்கணக்கான மக்கள் சேர்ந்திருந்தார்கள். வரவேற்பு முடிந்தபின், அழைக்கப்பட்ட வித்வாம்சர் மேடையில் வந்து அமர்ந்தார். லட்சுமி ஷோபானெயைக் குறித்து பிரவசனம் தொடங்கியது. ஒவ்வொரு நொடியும் புத்தகத்தைப் பார்த்தல், பத்யத்தைப் படித்தல் என்று போய்க் கொண்டிருந்தது. விசேஷ சங்கதிகள், ரசனா சாதுர்யம் ஆகியவற்றைப் பற்றி சொல்லவேயில்லை. சபையினருக்கு இது பிடிக்கவில்லை. பின்னால் அமர்ந்தவர்கள் ஒவ்வொருவராக எழுந்து போகத் துவங்கினர். இது ஸ்ரீகளவரின் கவனத்திற்கு வந்தது.

உடனே ஒரு சிஷ்யரை அழைத்து, அந்த உபன்யாஸகரின் பேச்சினை நிறுத்துமாறு கூறினார். பூஜ்ய ஸ்ரீகளவரின் பிரவசன பிரவாகம் துவங்கியது. லட்சுமி ஷோபானெயின் பத்யங்கள் மனப்பாடமாகக் கூறினார். விஷ்ணு ஸர்வோத்தமத்வ, நிர்தோஷத்வ, தாரதம்ய ஆகிய பிரமேயங்களை நிறுவி விளக்கினார். ஸ்ரீகளவரின் நுடியில், ஸ்ரீராஜரின் கவித்திறன், சாகித்யத்தின் அழகு ஆகியவற்றை அழகாக விளக்கினார். வெளியே எழுந்து சென்றவர்கள் மறுபடி வந்து அமர்ந்து ஸ்ரீகளவரின் பேச்சினைக் கேட்டு மகிழ்ந்தனர். சுமார் 45 நிமிடங்கள், ஸ்ரீகளவரின் அமிர்த உபன்யாசத்தைக் கேட்டு அனைவரும் தன்யர் ஆயினர். குருவின் பாதங்களில் விழுந்து ஆசிகளைப் பெற்று, மகிழ்ச்சியுடன் புறப்பட்டுச் சென்றனர்.

## நூற்றுக்கும் மேற்பட்ட ஸ்தோத்திரங்கள்:

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு ஸ்ரீவாதிராஜர் இயற்றிய ஸ்தோத்திரங்கள் அனைத்தும் மனப்பாடம். வெறும் மனப்பாடம் மட்டுமல்லாமல், அவற்றில் இருந்த பாட-ஷுத்தி மற்றும் அவற்றை சொல்லும் விதம், அவற்றின் சிறப்பு ஆகிய அனைத்தையும் அறிந்திருந்தார். ஸ்ரீராஜரின் ஆளுமை, கவித்திறன், ஆகியவற்றை அறிந்தவர். ஆகையாலேயே, ஸ்ரீராஜரின் அருளால் இந்த ஸ்தோத்திரங்களின் மகிமார்த்தம், யதார்த்த அர்த்த ஆகியவற்றை அறிந்தவராக இருந்தார். ஸ்ரீவாதிராஜர் இயற்றிய 'வ்யாஸாஷ்டக'த்தில் வரும் 'பாபாத்புதௌஷதிகரே ஷ்வஸனாம்ஷ ரூப:' என்னும் வரியை அற்புதமாக விளக்கினார்.

ஸ்ரீகளவருக்கு மற்ற அனேக ஸ்தோத்திரங்களும் மனப்பாடமாக இருந்தன. நேரம் கிடைத்தபோதெல்லாம் அவற்றை திரும்பத்திரும்ப படிப்பவராக இருந்தார். அவற்றில் புராணத்தில் வரும் ஸ்தோத்திரங்கள், மற்ற ஞானிகள் விரசித ஸ்தோத்திரங்களும் சேர்ந்திருந்தன. ஸ்ரீவிஜயீந்திர ஸ்ரீமத் சரணர் இயற்றிய 'பாபவிமோசன ஸ்தோத்திரம்', ஸ்ரீயாதவார்யர் இயற்றிய 'கராவலம்பன ஸ்தோத்திரம்' ஆகியவையும் இருந்தன. 'கராவலம்பன ஸ்தோத்திரம்' இயற்றிய யாதவார்யர், ஸ்ரீவாதிராஜரின் காலத்திற்குப் பிறகு வந்தவர். ஆனாலும், அந்த ஸ்தோத்திரத்தில் உடுப்பி, மத்யவாட, சுப்ரமண்ய ஆகிய க்ஷேத்திரங்களின் குறிப்புகள் இருந்தாலும், ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்தின் பெயர் வராததைக் கண்டுபிடித்துக் கூறினார். அதனால், இன்னும் பல கையெழுத்துப் பிரதிகளை படிக்க வேண்டும் என்பது அவரது கருத்தாக இருந்தது.

அப்படியே, அனேக குருவர்யரின் ஸ்தோத்திரங்களை சொல்லும் பழக்கத்தைக் கொண்டிருந்தார். அவற்றில், ஸ்ரீஜயதீர்த்த ஸ்துதி, ஸ்ரீபாதராஜாஷ்டக, ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரம் ஆகியவை இருந்தன. 'மாத்வகிரந்தான் ஸ்வபந்தூனிவ...' என்பதை மற்றும், மற்ற பிடி ஸ்லோகங்களை நான் பல முறை படித்தும், கேட்டும் இருக்கிறேன். ஸ்ரீபாதராஜாஷ்டகத்தில் 'காஷீகேதார மாயாகரிகிரி' என்பதில், கேதார என்பது இன்றைய ஷிவ கேதார இல்லை என்றும், அது விஷ்ணு கேதார என்றும் கூறினார். தெற்கில், விஷ்ணு காஞ்சி, சிவ காஞ்சி என்று இருப்பதைப் போல, வடக்கில் இமாலயத்தில் விஷ்ணு கேதார, சிவ கேதார என்பதாக இருந்து, பின் காலகிரமத்தில் விஷ்ணு கேதார மறைந்திருக்கலாம் (தனுஷ்கோடியைப் போல). ஸ்ரீபாதராஜாஷ்டகத்தில் சொல்லப்பட்டிருப்பது விஷ்ணு கேதாரமே தவிர சிவ கேதாரம் அல்ல என்பது பூஜ்யரின் அபிப்பிராயம். அத்துடன், வைஷ்ணவர்கள் சிவ கேதாரத்திற்கு செல்லும் வழக்கம் இல்லை. ஆசார்ய மத்வர், தாத்பர்ய நிர்ணயத்தில் இதனை சொல்லியிருக்கிறார். ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தின் 'தவ ஸங்கீர்த்தனம் வேத ஷாஸ்திரார்த்த ஞான ஸித்தயே' என்பது ஸ்துதி பாகத்தைவிட அதிகமான மற்றும் முக்கிய பலன்களை சொல்வதாக இருக்கிறது என்பது ஸ்ரீகளவரின் அபிப்பிராயம்.

ஸ்ரீஸ்ரீஷகுண தர்ப்பணத்தில் 'யுவாம் யுவானௌஸததம் யுவயோர் நவயோ஽திக:' என்பது ஒரு வரி. நீங்கள் இருவரும் சம வயது ஆனவர்கள். உங்கள் இருவரும் யாருக்கும் வயது அதிகமோ, குறைவோ இல்லை. இங்கு '. யுவயோர் நவயோ஽திக:' என்பது பொருத்தமானது. ஸ்ரீலட்சுமி நாராயணர், சமான வயதினர் என்று சொல்வது மட்டும் இங்கு நோக்கம் அல்ல. வயதினால் அதிகம் இல்லை; ஆனால் வேறொரு அம்சத்தினால் அதிகம் உண்டு என்னும் செய்தி இங்கு மறைந்திருக்கிறது. வெறும் வயதின் சமானத்வம் மட்டும் சொல்ல வேண்டுமெனில் '... ஸமானௌ வயஸா நனு' என்று மட்டுமே சொல்லியிருந்திருக்கலாம். ஆனால், வயதில் அதிகம் இல்லை என்று சொல்வதில், வேறொரு அம்சம் அதிகமாக இருக்கிறது என்று சொல்லி குறிப்பிட்டிருக்கிறார். அதுவே குண-அதிக்யம். பகவந்தன் வயோதிகன் அல்ல; ஆனால், குண-அதிகன். பூஜ்ய ஸ்ரீகளவர் இவ்வாறு ஸ்ரீராஜரின் சாதுர்யத்தை விளக்குவதாக இருந்தார்.

## விஷயத்தை விளக்கும் திறன்

பூஜ்ய ஸ்ரீகளவருக்கு விஷயத்தை விளக்கும் திறன் அபாரமாக இருந்தது. ஒரு கிரந்தத்தின் விஷயத்தை சொல்லிக் கொண்டிருக்கும்போது, பல்வேறு கிரந்தங்களிலிருந்து மேற்கோள் காட்டுவது ஸ்ரீகளவருக்கு வழக்கமாக இருந்தது. ஒரு முறை ஸ்ரீகளவர் ஸோதெயில் தங்கியிருந்தார். மதியம் சுமார் 3 மணி. ஸ்ரீ. G.G.புராணிகர் தம் குடும்பத்தினருடன் ஸ்ரீகளவரிடம் வந்தார். (அவர் சாதுர்மாத காலத்தில், பூஜ்ய ஸ்ரீகளவரின் எதிரில், ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யாத்தினை படித்துக் கொண்டிருந்தார். பூஜ்ய ஸ்ரீகளவரிடமிருந்து அதன் பின்னணி, பிரஸங்க விவரணை, விசேஷ மகிமார்த்த ஆகிய விஷயங்களை அறிந்துகொண்டிருந்தார்).

அன்று ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்தின் 9ம் அத்தியாயத்தின் சிந்தனை நடந்து கொண்டிருந்தது. ஹனும பீம மத்வ ரூபங்களின் மகிமை வைபவ மற்றும் ஸ்ரீராஜருக்கு அந்த அவதாரங்களின் தரிசனம் அளித்த மகிமைகளின் நிரூபணம் ஆகிக் கொண்டிருந்தன. அவதார த்ரய மகிமா நிரூபண சமயத்தில் சரஸ்வபாரதி விலாஸத்தின் 5,6,7 விலாஸங்களில் இருக்கும் விஷயங்களை, சில ஸ்லோகங்களை மேற்கோள் காட்டியவாறு விளக்கிக் கொண்டிருந்தார். அப்படியே யுக்தி மல்லிகா, பல ஸௌரபாவில் இருந்த விஷயங்களையும், சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு மேற்கோள் காட்டி விளக்கிக் கொண்டிருந்தார்.

மத்வ விஜய தாத்பர்ய நிர்ணய விஷயங்களும் குருமுகத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்தன. வாயுஸ்துதி மத்வாஷ்டகங்களும் உதாரணம் சொல்லப்பட்டன. அப்போது ஒரு முறை, ராஜஸர்களுக்கும் லிங்க பங்கம் உண்டு என்று சொல்லிக் கொண்டிருந்தபோது, மற்ற கிரந்தங்களின் மற்றும் ஞானிகளின் அபிப்பிராயத்தை (விஷயத்தை) கிரந்தத்தில் இருந்த வரிகளுடன் விளக்கினார்.

இப்படியான சந்தர்ப்பங்கள் அனேகம். இங்கு ஓரிரு விஷயங்களை மட்டும் சொல்லியிருக்கிறோம். சர்வக்ஞ குருகளான ஆசார்ய மத்வரின் மற்றும் ஸ்ரீவாதிராஜரின் கிருதி ரத்னங்கள் மற்றும் அவற்றில் உள்ள விஷய ரகசியங்களை, ஸ்ரீகளவர் எப்போதும் அத்யயனம் செய்தவாறே இருந்தார். இப்படியாக அனேக கிரந்தங்கள் அப்படியே மனப்பாடம் ஆகியிருந்தன. பூஜ்ய ஸ்ரீகளவருக்கு பற்பல பத சுளாதி வரிகள் மனப்பாடமாக இருந்தன. விசேஷமாக சுளாதியின் கடைசியில் இருந்த ஜதெ அவருக்கு அத்துப்படி.

## ஸாரோத்தாரத்தின் ஸாரத்தை சுவைத்தவர்

1982ம் ஆண்டில், ஸ்ரீமத் பாகவத ஸாரோத்தாரம் அதன் டீகையுடன் மறுபடி அச்சில் வந்தது. அது இரண்டாம் பதிப்பு. ஸ்ரீவிஷ்ணுதீர்த்தரின் ஆசியைப் பெற்ற பண்டிதர் ஸ்ரீஜயாசார்ய அரகேரி அவர்கள் அந்த பதிப்பினை வெளிக்கொண்டு வந்தார். அவர் என் மாதாமஹர் ஆவார். அவர் அந்த புத்தகத்தின் பிரதியை பலருக்கு இலவசமாக கொடுத்து வந்தார். அப்போது ஒரு முறை நான் ஸோதெக்கு புறப்படும் நேரம். என் கையில் ஸாரோத்தார ஒரு பிரதியையும், உடன் ரூ.10னையும் கொடுத்து, ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவருக்கு அதனை கொடுக்குமாறு கூறினார். நான் சிர்ஸி வழியாக ஸோதெ சென்றேன். காலையில் 10.30 மணி இருக்கலாம். ஸோதாக்ஷேத்திரத்தை அடைந்தேன். பூஜ்ய ஸ்ரீகளவர் பிக்ஷை முடித்து பஞ்சிமாருக்கு புறப்படுவதற்கு தயாராக இருந்தார். பூஜ்யரின் சன்னிதிக்கு விரைந்து சென்று, சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினேன்.

புத்தகம் மற்றும் காணிக்கையினை சமர்ப்பித்தேன். உடனே ஸ்ரீகளவர் கூறியது இதுவே. ‘இந்த கிரந்தத்தைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். இதுவரை முழுமையாக படித்திருக்கவில்லை. நீங்கள் கொடுத்தது நல்லதாயிற்று’. பிறகு மந்திராட்சதை கொடுத்து, ஸ்ரீகளவர் அங்கிருந்து புறப்பட்டார். மஞ்சிமாரின் ஏகாந்தத்தில் ஸாரோத்தாரத்தை முழுமையாக படித்தார். அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாமல் போனது. அந்த ஆண்டின் கார்த்திக மாத தீபோத்ஸவ சந்தர்ப்பம். ஸ்ரீகளவர் ஸோதெயில் இருந்தார்.

அந்த சமயத்தில் நானும் ஸோதெக்கு சென்றேன். பௌர்ணிமைக்குப் பிறகு இரு நாட்கள் அங்கே இருந்தேன். பிரதமையன்று மதியம் தம்மை வந்து பார்க்குமாறு அனுமதி வந்தது. சன்னிதிக்குச் சென்று, வணங்கி அமர்ந்தேன். சுமார் ஒரு மணி நேரம் வரை, ஸாரோத்தாரத்தைப் பற்றி விளக்கி, பேசினார். பூஜ்யருக்கு மிகவும் இஷ்டமான ஒவ்வொரு பிரகரணத்தைப் பற்றியும் மற்றும் ஒவ்வொரு ஸ்லோகத்தின் விளக்கமும் மிகவும் அற்புதம். ‘இஹ கலு விவிதபவபரிதாபகின்னானாம்...’ என்பதை மூன்று விதமாக பிரித்து அர்த்தம் கூறினார். ‘விவிதபவ’, ‘விவித.. பரிதாப..’ மற்றும் ‘விவிதபவபரிதாப’ என்று. அப்படியே ‘... அகிலபுருஷார்த்த ப்ராப்தயே ச...’ என்பதில் ‘நிகில’ என்று சொல்லாமல் ‘அகில’ பத பிரயோகம் சிறந்தது என்று கூறினார்.

தர்ம, அர்த்த, காம இந்த மூன்று புருஷார்த்தங்களும் மோட்சத்திற்கு காரணம் என்றாலும் இவை ‘கில’ (இணைப்புகள்). மோட்சம் மட்டும் அகில (முழுமையானது). மேலும், அது என்றும் இணைப்பு ஆகும் சந்தர்ப்பமே இல்லை. எவ்வித மாறுபாடுகளும் அற்ற புருஷார்த்தம் ஆகும் அது. ஆகையால், இங்கு சொல்லப்படும் ‘அகில’ என்னும் சொல், முக்ய புருஷார்த்தமான மோட்சம் எத்தகையது என்பதை சொல்கிறது. அதாவது, அதுவே முழுமையான புருஷார்த்தம் ஆகும். இதுவே பூஜ்ய ஸ்ரீகளவர் கொடுத்த விவரணையின் ஸாரம்.

இன்னும் அதே கிரந்தத்தின் ‘ஸம்க்ஷிப்த ஷாஸ்திரார்த்த ப்ரகரண’த்தில் இருக்கும் ‘... அஸங்க ஆத்மவ்யதிரிக்த வஸ்துனி...’ என்னும் ஸ்லோக பாகத்திற்கும், ஸ்ரீகளவர் கொடுத்த விவரம் அற்புதமானது. பகவந்தனிடமிருந்து பின்னமான வஸ்துவில் அஸங்க (சம்பந்தப்படாமல் இருப்பது) இருக்க வேண்டும் என்பதே இதன் பொருள். ஆனால், பிரதிமை, சாலிகிராம (ஜட) மற்றும் ஞானிகள் (அஜட) – என இருவரும் ஆத்ம பின்ன எனப்படுபவர்கள். ‘அஸங்க’ என்பதன் அர்த்தத்தையே சொல்ல வேண்டுமென்றால், பூஜிக்கத்தக்க பிரதிமைகளில் – மரியாதைக்குரிய

குருகளில் ஸங்க செய்யக்கூடாது என்னும் அபிப்பிராயம் தோன்றலாம். இது முமுக்ஷு சாதகர்களுக்கு இஷ்டமானதல்ல.

ஆகையால், இங்கு 'அஸங்க' என்றால் 'அ'கார வர்ணவாச்யனான விஷ்ணு (அகரோ விஷ்ணுருச்யதே) என்று அர்த்தம் சொல்லி, அந்த ஸ்வாமியின் விபூதி சன்னிதானம் இருப்பதால் பிரதிமா சாலிகிராமாதிகள் பூஜைக்கு ஏற்றவை மற்றும் குருகள் மரியாதைக்குரியவர்கள் என அர்த்தம் சொல்லி, மகிமை-அர்த்தம் புரிந்து கொள்ள வேண்டும் என்று கூறினார். இதற்காக, உபநிஷத் மற்றும் பாஷ்யங்களில் உள்ள பிரமாணங்களை மேற்கோள் காட்டியதும் உண்டு. ஸாரோத்தார சம்பந்தப்பட்ட இத்தகைய விஷயங்கள் பல இருக்கின்றன. அவற்றில் ஒன்றிரண்டை மட்டும் இங்கே உதாரணம் காட்டியிருக்கிறோம்.

ஸாரோத்தாரத்தில் இருக்கும் 'தர்மோபதேஷ பிரகரண' பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு மிகவும் இஷ்டமான பிரகரணம் ஆகும். அவருடைய வாக்கில் சொல்ல வேண்டுமென்றால், இது 'வாழ்க்கைக்கான ஸித்தாந்த கையேடு' ஆகும். குருதக்ஷிணா பிரகரணத்தில் உள்ள ஸாதாரண – அஸாதாரண என்னும் விஷயங்களை, மிகவும் உண்மையானவை என்று ஸ்ரீகளவர் மிகவும் மகிழ்ச்சியுடன் சொல்வதுண்டு.

ஸாரோத்தாரத்தின் அத்யாத்ம பிரகரணத்தில் சொல்லப்பட்டுள்ள ஸ்ரீமத் பாகவத பத்யங்கள் எப்படி அத்யாத்ம பிராவண்யத்தை சொல்கின்றன? ஏனெனில், அங்கத்திய அனேக ஸ்லோகங்கள், ஏதோ ஒரு வகையில் ஸ்ரீஹரியின் அவதாரத்துடன் சம்பந்தப்பட்டவை. ஆகையால், ஒவ்வொரு ஸ்லோகத்தின் முந்தைய பிரமேய அம்சங்களை அதன் அர்த்தங்களுடன் அறிந்தால், அது அத்யாத்ம பிராவண்யத்திற்கு சம்பந்தப்படுவதாக ஆகிறது. அத்யாத்ம என்றால் அந்தரங்க. அங்கு இருக்கும் பிம்பரூப மற்றும் அதன் அபின்னனான ஸ்ரீஹரியின் ரூபங்களின் கர்த்ருத்வ மற்றும் காரயித்ருத்வ மஹிமா விஷயத்தில் த்ரிகரண பாவித்ர்யத்துடன் சம்பூர்ண அந்தர்முகியாகி, அதனுடன் சேர்வதே அத்யாத்ம பிராமாண்யம் ஆகும். இந்த நிலையை அடைவதற்கு, ஒவ்வொரு ஸ்லோகத்திலும் இருக்கும் தக்க பிரமேயம்சங்களை அறிய வேண்டும்.

## பாடஷுத்தியின் முக்கியத்துவம் மற்றும் கிரந்த பிரகாஷன

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஒரு கிரந்தத்திற்கு சம்பந்தப்பட்ட ஒரேயொரு கையெழுத்து பிரதியுடன் நிற்கவில்லை. தம் தொகுப்பில் இருக்கும் மற்றும் மற்ற பிரதிகளில் இருப்பதை பார்த்து, பாட ஷுத்தியை செய்து வந்தார். ஆனால், அனைத்து சமயங்களிலும் அதனை உடனடியாக அச்சிடும் செயலை அவர் செய்யவில்லை. (அவர் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வவாதிகள் என்னும் காரணத்தினால், வித்வத் உலகம் அவருடைய அபிப்பிராயத்தை அப்படியே ஒப்புக் கொள்வதில்லை என்பது ஒரு உண்மை).

ஒருமுறை ஸ்ரீவாதிராஜர் இயற்றிய தீர்த்தபிரபந்த சம்பந்தப்பட்ட 4-5 கையெழுத்துப் பிரதிகளை ஸ்ரீகளவர் படித்துக் கொண்டிருந்தார். அவற்றில் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் எழுதிய கையெழுத்துப் பிரதி ஒன்றும் இருந்தது. அதில் மற்ற பிரதிகளைவிட சிறிது பாடாந்தர (வேறுபாடு) இருந்தது. இந்த வேறுபாட்டைக் கண்டு ஸ்ரீகளவருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. அது ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரே எழுதிய பிரதி என்பதற்காக இருக்கலாம். அதனை வெளியிட வேண்டும் என்று ஸ்ரீகளவருக்குத் தோன்றியது. அதனை படி எடுக்குமாறு என்னிடம் கூறினார்.

டாம்டர். ஸ்ரீராகவேந்திர புராணிகரின் உதவியுடன் துளு லிபியில் இருந்த அந்த பாடத்திற்கு ஏற்பமான பிரதியை தயார் செய்தேன். பிறகு, அந்த கிருதி, தாரவாடில் 'ஸ்ரீபுரந்தரோத்ஸவ ஸமிதி'யினால் அச்சிடப்பட்டு வெளிவந்தது. 2001ம் ஆண்டில், தாரவாடில் நடந்த புரந்தரோத்ஸவ பர்வ காலத்தில் பூஜ்ய ஸ்ரீகளவர் மூலமாகவே அது லோகார்ப்பணம் ஆயிற்று. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தமது சதுர்த்த ஸ்ரீகிருஷ்ண பர்யாயத்தில், டீகையுடன் யுக்திமல்லிகா பாடம் சொல்லும்

சந்தர்ப்பத்தில் பாட ஷுத்தியைப் பற்றிய விசேஷ கவனம் கொண்டிருந்ததை நேரில் இருந்து பார்த்திருக்கிறேன்.

அதைப் போல, தெய்வத்தின் அருளால், ஸ்ரீவ்ருந்தாவனாக்யான ஷிலா லேகனத்திற்கு பூஜ்ய ஸ்ரீகளவர் தயார் ஆனார். அந்த சமயத்தில் சுமார் 4-5 கையெழுத்துப் பிரதிகளை அவர் ஆராய்ந்து கொண்டிருந்தார். ஸ்ரீகிருஷ்ணலிங்க யதிகள் எழுதிய பழைய கையெழுத்துப் பிரதி ஒன்று கிடைத்தது. ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவருடன் ஷுத்த பாடத்தைப் பற்றி ஆலோசனை செய்தார். அந்த ஷிலா லேகனத்திற்காக ஷுத்த பாடம் ஒன்றினை தயார் செய்து, அதை செய்வித்து, ஆக்யான மந்திரத்தை நிர்மாணித்து, வாதீஷவரதனுகு சமர்ப்பணம் செய்தார்.

இவ்வாறு பூஜ்ய ஸ்ரீகளவருக்கு பாட ஷுத்தியின் விஷயத்தில் எப்போதும் தனி கவனம் இருந்தது. மேற்கண்ட உதாரணங்களே இதற்கு போதுமானதாகும்.

அப்போது இருந்த ஸ்ரீவாதிராஜ சேவா சங்கத்தின் மூலமாக மற்றும் மடத்தின் சார்பாக, அனேக புத்தகங்களை வெளியிடக் காரணமாக இருந்தவர் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். இவற்றில் – ஸ்ரீவாதிராஜர் இயற்றிய ஸ்ரீஹரிபக்திலதா, ஷ்ருதிதத்வ பிரகாஷிகா, லக்ஷாலங்கார, தஷாவதார ஸ்துதி – டீகையுடன், ஸ்ரீவாதிராஜரின் டீகையுடன் 7 உபநிஷத்கள், உபன்யாஸ ரத்னமாலா, விவரண வ்ரண, கல்பலதா, மஹாபாரத தாத்பர்ய நிர்ணய டீகா பாவபிரகாஷிகா, தத்வப்ரகாஷிகா குர்வர்த்த தீபிகா, நியாயஸுதாகுர்வர்த்த தீபிகா, ஸ்தோத்திர ரத்ர மாலா, பூகோள வர்ணனெ – ஏகாதஷி நிர்ணய சஹிதமாக, ஸ்ரீ நாராயண பண்டிதாசார்யர் இயற்றிய 'ஷுபோதய', ஸ்ரீவாதிராஜரின் கீர்த்தனமஞ்சரி, ஸ்ரீவாதிராஜ குருசரித்ராம்ருத, ஸ்ரீவாதிராஜ குணரத்னமாலா, ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்த கிருதி மஞ்சரி, ஸ்ரீவாதிராஜ மங்களாஷ்டக ஆகியவை சில உதாரணங்கள். இவை அல்லாமல், வேறு அச்சகங்களிலிருந்தும் ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ மஹிமா சமர்த்தன மற்றும் மற்ற கிருதிகள் வெளிவருவதற்கும் முக்கிய ஆதரவு, காரணமாக இருந்திருக்கிறார். இப்படியாக தம்மை எப்போதும் கிரந்த வெளியிடும் காரியத்திலேயே ஈடுபடுத்திக் கொண்டவர், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்.

## ஒருமனதுடனான பாடம்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் பாடகிரமம் மிகச்சிறந்தது. அவர் பாடம் சொல்லிக் கொண்டிருப்பதே மற்றவர்களுக்கு தெரியாததாக இருந்தது. பாடத்திற்கு முன்னாலான புத்தகங்களை படிப்பது, ஆராய்வது மற்றும் மனனம் ஆகியவற்றை தொடர்ந்து செய்திருந்தார். விஷயத்தை புரிந்து கொள்வதில் தெளிவு, போதனையில் ஒரு எளிமை, சரளம், ஆராய்ச்சியில் ஒரு கவனம், ஆகியவை அவருடைய குணங்களாக இருந்தன. ஆதாரத்துடனான விஷயங்களை அவர் மெச்சினார். சந்தேகம் இருந்த சமயங்களில் அதனை பரிகரிக்காமல், பூஜ்யர் அடுத்து நகர்வதில்லை. மூலத்தின் ஒவ்வொரு வரி, அதன் அர்த்தங்களை சொல்வதோடு மட்டுமல்லாமல், அதன் பின்னணியையும் சொல்லும் திறன் படைத்தவர். சம்பந்தப்பட்ட டிப்பணி பாகத்தை ஒரு முறை மூலத்திற்கு ஏற்பவாறு அர்த்தம் சொல்வார். பிறகு அந்த டிப்பணியில் இருக்கும் விசேஷ அம்சஙளை சொல்வது அவருடைய கிரமமாக இருந்தது.

ஒவ்வொரு நிலையிலும், கிரந்தகாரரின் மகிமை, கருணை மற்றும் நிர்லிப்தமான உதவியை மிகவும் தன்யதையுடன் நினைப்பதும் ஸ்ரீகளவரின் ஒரு சிறந்த குணம். மற்றவர்களின் சந்தேகங்களை பரிகரிப்பதில் அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சி. குருகளின் நெருக்கமான சிஷ்யர்களில் ஒருவனாக இருந்ததால், இவை அனைத்தையும் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பாட சமயத்தில் அவர், சோர்வு, கவனமின்மை ஆகியவை கொண்டதேயில்லலை. பூஜ்யரின் நேரத்தை மதிக்கும் தன்மை அபாரமானது.

யுக்திமல்லிகா பாட சந்தர்ப்பத்தில் மற்ற ஞானிகள் இயற்றிய கிரந்தத்தில் இருக்கும் வரிகளை மற்றும் விசேஷமாக ஸ்ரீராஜரின் ஷ்ருதி தத்வபிரகாசிகா, ஹரிபக்திலதா, நியாய ரத்னாவலி ஆகிய கிருதிகளின் வரிகளை சர்வ சாதாரணமாக மேற்கோள் காட்டி வந்தார். ஸ்ரீகிருஷ்ணாபுர

ஸ்ரீகளவரைத் தவிர, மந்தமதிகளான எங்களைப் போன்றோருக்கு அவருடைய பாடத்தின் ஆழம் என்றும் புரிந்ததேயில்லை.

ஒரு முறை ஸ்ரீகளவர் ஸோதெயில் தங்கியிருந்தார். அன்று ஏகாதசி. பூஜை, தீர்த்தம் கொடுத்தல் அனைத்தும் முடிந்தன. ஸ்ரீகளவரின் ஆணையை ஸ்ரீகோவிந்தண்ணா கூறினார். அவர் இருந்த இடத்திற்குச் சென்று சாஷ்டாங்கமாக வணங்கி, அமர்ந்தேன். நான் என்றோ ஒரு நாள் அவரிடம் கேட்டிருந்த விஷயத்தை, இப்போது நினைவுக்குக் கொண்டு வந்து உபதேசிக்கத் துவங்கினார். அது என்னவென்றால், அணுபாஷ்யத்தின் துவக்க ஸ்லோகங்களை மற்றும் ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்தின் துவக்க ஸ்லோகங்களையும் உபதேசம் செய்ய கேட்டிருந்தேன். அதனை இப்போது செய்யத் துவங்கினார்.

அணுபாஷ்யத்தின் 'நாராயணம் குணை: ஸர்வை:' மற்றும் 'விஷ்ணுரேவ விஜிக்ஞாஸ்ய' ஸ்லோகங்களின் அற்புத உபதேசம் நடந்தது. முதலாம் ஸ்லோகத்தில் மொத்த பிரம்மமீமாம்ஸ ஸாரத்தையே கூறினார். 'நாராயண' என்னும் ஒரேயொரு சொல்லினாலேயே அனுபந்த சதுஷ்டயத்தை நிரூபணம் செய்தார். அப்படியே, ஆக்யானத்தின் 'ஹயக்ரீவம் சிதானந்த.. பிரம்மருத்ரேந்த்ர வந்திதம்', என்னும் மூன்று ஸ்லோகங்களை விவரித்து 'ஹயக்ரீவ' என்னும் சொல்லாலேயே அனுபந்த சதுஷ்டயத்தை கூறினார். (இன்னொரு சந்தர்ப்பத்தில் வெறும் 'ஹய' என்னும் சொல்லாலேயே அனுபந்த சதுஷ்டயத்தை கேட்டது உண்டு).

ஒவ்வொரு சொல்லும், வ்ருந்தாவனத்தில் இருக்கும் ஸ்ரீராம கிருஷ்ண வேதவியாஸ ஹயக்ரீவ மற்றும் மத்ஸ்யாதி ரூபங்களின் மற்றும் ஸ்ரீஹனும பீம மத்வ வாதிராஜரின் சன்னிதியின் மகிமைகளை விளக்குவதாக இருக்கிறது என்பதை மிகவும் கருணையுடன் உபதேசித்து வந்தார். ஒவ்வொரு சமயத்திலும், வ்ருந்தாவனம் இருக்கும் திசையில் பார்த்து, கை குவித்தவாறு, மஹிமா ஞானபூர்வகமாக மகிழ்ச்சியில் ஆழ்ந்தார். அந்த உபதேசத்தின் குரல் இன்றைக்கும் என் காதுகளில் எதிரொலித்துக் கொண்டே இருக்கிறது.

## லௌகிகத்திலிருந்து தூரம்

சிறிய வயதிலிருந்தே ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஏகாந்தபிரியர் ஆவார். அது வெறும் அத்யயன மனனாதிகளுக்கு அல்ல. லௌகிக தூரமான பக்திக்கு, ஸாத்விக தாத்விக வாழ்க்கைக்கு, இப்படி சொல்வதால், அவருக்கு லௌகிக வாழ்க்கையே இல்லை என்று இல்லை. அவர் என்றும் புகழ், பெயர், பட்டம் ஆகியவற்றை விரும்பியதே இல்லை. 'யாவதர்த்தாஷ்ச லோகே' என்னும் பாகவத தர்மமே அவரில் எப்போதும் கண்டு வந்தது.

முடிந்தவரை அவர் பொதுமக்களின் நிகழ்ச்சிகளுக்கு போகாமலே இருந்தார். வேறு வழியின்றி போக வேண்டி வந்தால், குறைவான காலம் மட்டும் அங்கு இருக்குமாறு பார்த்துக் கொண்டார். அதிகாரிகள், மந்திரிகள் ஆகியோர் அதிக தார்மிக உணர்வு இல்லாதவர்களாக இருந்திருக்கலாம். ஸ்ரீகளவரும் அவர்களுடன் மேடையில் அமர விரும்பவில்லை எனலாம். 'ராக்ஞாம் பாபாத்மனாம் வார்த்தா ஸதாம் ஆர்த்திப்ரதா த்ருவம்' என்னும் ஸ்ரீராஜரின் வாணி, பூஜ்ய ஸ்ரீகளவருக்கு மிகவும் பிடித்தமானதாகும்.

முதலிலேயே லௌகிக சம்பந்தத்தை அவர் விரும்பவில்லை. அதில் ஒரு முறை ஈடுபாடு காட்டிவிட்டால், அடுத்து அதிலேயே மூழ்கிவிட வேண்டும். பிறகு வேண்டாம் என்றாலும் விடமாட்டார்கள். பிறது அதை ஒப்புக் கொள்ளவும் முடியாது / விடவும் முடியாது. எவ்வித சங்கடங்கள் வந்தாலும் அதனை சகித்துக் கொள்ள வேண்டியிருக்கும். அனுபவிக்க வேண்டியிருக்கும். இதெல்லாம் சன்யாச தர்மத்திற்கு சரிப்படாது என்று ஸ்ரீகளவர் நம்பினார். மேலாக, இவையெல்லாம், ஸ்ரீஹரி வாயு குருகளின் மறதிக்கு காரணம் என்னும் சிந்தனையும் அவருக்கு இருந்தது. இவ்வாறு மனதை திசைதிருப்பும், ஸ்ரீஹரி வாயு குருகளின் மறதிக்கு காரணமாகும்படியான விஷயங்களைப் பற்றி மிகவும் கவனமாக இருந்தார் ஸ்ரீகளவர். பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தமது மூல மடத்திலும், பிற ஷாகா மடங்களிலும் பல ஜீர்ணோத்தார காரியங்களை செய்தது நாம் அறிந்ததே. அதற்காக அவர் அனைத்து இடங்களிலும் சஞ்சாரம்

மேற்கொள்ளவில்லை. அவர் செய்த ஸ்ரீஹரி வாயு குருராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் பிரார்த்தனையே அவர் சங்கல்பம் செய்த காரியங்களை நடத்திக் கொடுத்தது. பிரத்யக்ஷ மற்றும் பரோக்ஷமாக விஷயம் அறிந்த பக்தர்கள் தாமாகவே வந்து தங்களின் சேவையை செய்து தன்யர் ஆயினர்.

ஸ்ரீவ்ருந்தாவனாக்யான ஷிலாலேகன மற்றும் ஆக்யான மந்திர நிர்மாண விஷயங்களில் ஸ்ரீராஜரின் பக்தர்கள், நான் முந்தி நீ முந்தி என்று சேவை செய்ய முன்வந்தாலும், பூஜ்ய ஸ்ரீகளவர் காட்டிய யோசனை / சங்கோசம் சொல்ல முடியாதது. ஆனாலும் அவருக்கு தெய்வபல, ப்ரேரணை அபாரமாக இருந்தது. ஆகையாலேயே, சங்கல்பம் செய்த செயல்கள் அனைத்தும் தடையின்றி நடந்தன. அதன்படியே, அனேக ஷதமானோத்ஸவ நடவடிக்கைகளை அவர் ஏற்பாடு செய்தாலும், பணத்திற்காக அவர் அதிகமாக சஞ்சாரம் செய்யவில்லை. ஆனாலும், தெய்வ பலத்தினால் அனைத்தும் சிறப்பாக முடிவடைந்தன. அனைத்திற்கும் ஸ்ரீராஜரின், ஸ்ரீபூதராஜரின் கருணையே காரணம் என்று கொண்டாடி தன்யர் ஆனார். ஸ்ரீஹரி குருகளில் அதிகமாக பிரார்த்தனை செய்து அவர்களின் அருளைப் பெற்று வந்தார். சிறிய அளவிலான காணிக்கை செலுத்தினாலும் அவர் வாக்கு இவ்வாறு இருந்தது.

நீங்கள் குடும்பஸ்தர். குடும்பத்தை பாதுகாக்கும் பொறுப்பு உங்களுக்கு இருக்கிறது. சேவை செய்யும்போது இதனை கவனத்தில் கொண்டு செய்யுங்கள் – என்பார். சேவை காணிக்கையைவிட, பக்தர்களின் சிரத்தை, பக்தி, அந்த:கரணம், ஸ்ரீஹரி குருபக்தி, ஸ்ரீராஜரின் ருஜுத்வ தீக்ஷை ஆகியவற்றை கவனித்து, அவர்களிடம் கருணை காட்டி வந்தார்.

## கைப்பேசியை தூரம் வைத்தார்

இன்றைய நாளில் லேண்ட்லைன், கைப்பேசி ஆகியவற்றுடனான தொடர்பு அதிகம் தேவை. அவை இல்லாமல் வாழ்க்கையை நடத்துவதே கஷ்டம் ஆகிறது. ஆனால், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு இவற்றின் தேவை இருக்கவில்லை. அவர் கைப்பேசியையே தொடவில்லை. அதை பற்றி அவருடைய கருத்து இவ்வாறாக இருந்தது. ‘தொலைபேசி வழியாக செய்யும் செயல்கள், நம்மை திரும்பத்திரும்ப லௌகிகத்திலேயே தள்ளுகிறது. தொடர்ச்சியான பேச்சுவார்த்தைகளில் மனம் ஈடுபட்டு, அதிலேயே லயிக்கிறது. அது நம் வாழ்க்கைக்கு தக்கதல்ல. என்பது அவருடைய நிலை. வேறு வழியின்று பேசும் சந்தர்ப்பம் வந்தால், வேறொருவர் மூலமாக பேசி, பதில் மற்றும் செய்திகளை பரிமாறி செயல்களை நிறைவேற்றிக் கொண்டிருந்தார்.

## II. ஆன்றோர்களின் சன்னிதி தரிசனம் –<br>சரணாகதி மற்றும் அலௌகிக மகிமைகள்

தேவதானு தேவதைகள், ரிஷி முனிகளே இந்த புண்ணிய பூமியில் அவதரித்து ஸித்தாந்த சேஎவை மற்றும் லோகோத்தாரக செயல்களை செய்தனர். அவர்களில் சிலர் யதிவரேண்யர்கள், பலர் கிருஹஸ்தர்கள். இவர்களில் சிலர் தாசவரேண்யர்கள். இத்தகைய மகாத்மர்களின் சன்னிதிகள், தென்னிந்தியாவில் கர்னாடக, ஆந்திரா, மற்றும் தமிழ் நாட்டில் காணப்படுகின்றன. இந்த சன்னிதி தரிசனம் என்பது, சாதகர்களின் சாதனைக்கு ஒரு வழியாகும்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மேற்கொண்ட ‘ஆன்றோர்களின் ஸன்னிதி தரிசனம்’ இந்த பின்வரும் அம்சங்களைக் கொண்டதாகும்.

1. மடம், இடம் ஆகியவற்றை மீறியது
2. ஒரு நிகழ்ச்சிக்காகவே, வரவேற்பினை எதிர்பார்த்தோ, உபசாரங்களை எதிர்பார்த்தோ செல்லாமல், சிரத்தையுடன் தானாகவே சென்றது.
3. எவ்வித சன்மானங்களை விரும்பாமல் இருப்பது
4. ஞானிகளின் சிஷ்யர்கள், அவர்களின் பிர-சிஷ்யர்கள், அவர்களின் பரம்பரையில் வந்தவர்கள் என இவர்களின் சன்னிதியில், அவர்களுடைய ஸ்வரூப மகிமைகளை அனுசந்தானம் செய்தவாறு தரிசனாதிகளை செய்வது

5. மற்றும் அந்தந்த இடங்களின் சம்பிரதாயங்களை மீறாமல் அவற்றை பின்பற்றுவது.

ஸ்வோத்தமர்களின் சன்னிதி தரிசனம் பெற்று, அவர்களுடைய அருளைப் பெற வேண்டும் என்னும் விருப்பம், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருடையதாக இருந்தது. பழமையான யதிகளின் சன்னிதிகளை மட்டும் தரிசிக்காமல், ஹரிதாசர்களின் மற்றும் மற்ற ஞானிகளின் சன்னிதிகளையும் தரித்து தன்யர் ஆனவர் ஸ்ரீகளவர். குருகளுடன் இத்தகைய பயணத்தில் இணைந்த பாக்கியம் நம்முடையது. அங்கங்கு நடந்த மகிமைகள் / அற்புதங்கள் ஏராளம். அனைத்தையும் முழுமையாக அறியும், அறிந்ததை முழுமையாக சொல்லும் தகுதி என்னுடையதல்ல. ஆனாலும் 'யதாமனீஷம் ததனுக்ரஹீண' என்று சொல்வதைப் போல, சிலவற்றை எனக்குத் தெரிந்த / புரிந்தமட்டில் சொல்வதற்கு முயல்கிறேன்.

## தபோரிஷியைக் கண்டு மகிழ்ந்தார்

உத்தராதி மடத்து பரம்பரையில் வந்த மிகச்சிறந்த யதிவரேண்யர்களில் ஒருவர் ஸ்ரீசத்யபோத தீர்த்தர். அபாரமான தபஸ்வி. பாட ப்ரவசனங்களில் சிறந்தவர். ஸ்ரீஹரிகுரு அருளால் விஷத்தை ஜீரணம் செய்த மகான். இரவில் சூரியனைக் காட்டிய அலௌகிக மகானுபாவர். தாஸகூடத்தவர்கள் போற்றிய ஆளுமை. இவருடைய சன்னிதிக்கு பிராமணர் அல்லாத ராஜனும் வந்து சரணாகதி அடைந்த பெருமையைக் கொண்டவர். குருகளின் பெயர் பொறித்த நாணயங்கள் அந்த காலத்தில் இருந்தன. ஸ்ரீகளவர், ஸ்ரீசத்யபோத தீர்த்தரை மார்க்கண்டேய அம்ச ஸம்பூதர் என்று சொல்லி, அவரின் சன்னிதானத்தின் தரிசனத்தை செய்தார்.

ஒரு முறை, ஸோதெயிலிருந்து சீக்கிரமாக புறப்பட்டார் ஸ்ரீகளவர். ஸித்தாபுர வழியில் சவனூருக்கு வந்தார். தபோநிதிகளான ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் தரிசனம் பெற்றார். விஷாலமான மடம், பாட பிரவசனத்தின் இருப்பிடம், ஸ்ரீநரசிம்மதேவர், ஸ்ரீஜகன்னாததாசர் அமரும் வழக்கம் கொண்ட ஒரு தூண் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்தார். அப்பொழுதே மானவிக்கு சென்றிருந்தபோது, ஸ்ரீசத்யபோத தீர்த்தர் அருளிக் கொடுத்திருந்த ஒரு மணையை தரிசனம் செய்திருந்தார். பூஜ்ய சன்னிதியில் மந்திராட்சதையை சிரத்தையுடன் பெற்றுக் கொண்டு, அங்கிருந்து புறப்பட்டார் ஸ்ரீகளவர்.

## மாதனூர் தரிசனம்

மாதனூரின் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், அரண்யகாசார்யர் என்று அழைக்கப்பட்டார். ருத்ராம்ஷ சம்பூதரான குருகள் மிகுந்த வைராக்யஷாலிகள். 50 ஆண்டுகளில் நான்கு ஆசிரமங்களையும் விதிப்படி பின்பற்றியவர். ஸாரோத்தாராதி கிரந்தங்களை இயற்றி, முமுக்ஷுகளை ஸம்ஸார பந்தனங்களிலிருந்து விடுவித்தவர். இத்தகைய மகாத்மரின் சன்னிதியின் தரிசனத்தை செய்ய வேண்டும் என்னும் விருப்பம் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு இருந்தது. சுமார் 1992ம் ஆண்டு. பள்ளாரியில் ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவரிடமிருந்து, ஸ்ரீகளவருக்கு, பள்ளாரி திக்விஜயம் செய்ய வேண்டும் என்று பிரார்த்தனை வந்தது. அப்படியே செல்வதற்கு விருப்பம் தெரிவித்த ஸ்ரீகளவர், மற்ற ஞானிகளின் தரிசனத்தையும் பெற விரும்பினார்.

அதைப்போல, சவனூர், மாதனூர், பள்ளாரி, சிப்பகிரி, மந்திராலய, உத்தனூரு ஆகிய புண்ய சன்னிதிகளை தரிசனம் செய்வதென முடிவு ஆயிற்று. அவருடன் செல்வதற்கு பலர் முன்வந்தனர். ஸ்ரீனிவாஸராவ் இடகி அவர்கள் வழிகாட்டி ஆனார்.

சவனூரிலிருந்து நேராக மாலை 5 மணிக்கு மாதனூருக்கு வந்தார்கள். ஸ்ரீகளவரின் வருகைக்கு முன்னரே, இடகி அவர்கள் அனைத்து ஏற்பாடுகளை தயார் செய்திருந்தார். முக்கிய த்வாரத்தில் பூர்ணகும்ப ஸ்வாகதம், மாலை அர்ப்பணம் ஆகியவை செய்தபோது, ஸ்ரீகளவர் கூறியது – இதெல்லாம் வேண்டாம். நாமே தரிசனத்திற்கு வந்திருக்கிறோம். பிறகு, ஸ்ரீவிஷ்ணு தீர்த்தரின் வ்ருந்தாவன தரிசனம். ஸ்வரூப மகிமானுசந்தானத்துடன் சாஷ்டாங்கமாக வணங்கினார். முண்டஹமோதபுரீ.. என்னும் வ்ருந்தவன ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டிருப்பதைக் கேட்டார்.

மறுபடி தரிசனம் செய்தபோது, ஸ்ரீகளவருக்கு வியப்பு. ஸ்ரீவிஷ்ணு தீர்த்தரின் வ்ருந்தாவனம் கைலாய பர்வதத்தைப் போல தெரிந்தது. தான் கண்டதை அருகில் இருந்த எங்களுக்கு தெரிவித்தார். முன்பே, சரித்திரத்தைக் கேட்டு, ஸாரோத்தாரத்தை படித்திருந்ததால், அப்போது மிகவும் மகிழ்ந்தார். அங்கு மந்திராட்சதையை தலையில் ஏந்தி, வெளியே வந்தார். பிறகு, பிரகார பிரதட்சிணை செய்தார். இடகி ஆசார்யர் மற்றும் மற்றவர்கள் பூஜ்ய ஸ்ரீகளவருக்கு பாதபூஜை செய்து, பழங்களை சமர்ப்பித்தனர். அங்கு வந்திருந்த நூற்றுக்கணக்கான பக்தர்களுக்கு மந்த்ராட்சதை வழங்கினார் ஸ்ரீகளவர். ஸ்ரீவிஷ்ணு தீர்த்தரின் சன்னிதியின் தரிசனானுபவத்தின் மகிழ்ச்சி, ஸ்ரீகளவரின் முகத்தில் தெளிவாக தெரிந்தது.

## ஸ்ரீபூதராஜரை வணங்கி மழையை நிறுத்தினார்

ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் பள்ளாரி திக்விஜயம். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவரின் இடத்தில் பூஜாதி கார்யகிரமங்கள். அங்கு வந்த நாளில், இரவு கால பூஜை மற்றும் ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜை மிகவும் சிறப்புடன் நடைபெற்றன. ஸ்ரீகளவரின் தரிசனம் பெற்று, பல மந்திராட்சதை பெறுவதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். அப்போது ஸ்ரீகளவர் தமது அனுக்ரஹ உரையில், ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யரின் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ சித்தாந்த ஸமர்த்தன சேவையை நினைவுபடுத்திக் கொண்டார். அங்கத்திய தேவதா தரிசனம் செய்து, மகிழ்ந்தார்.

அடுத்த நாள் காலையில் சம்ஸ்தான பூஜை. ஷாமியானா அலங்காரங்கள். உயரத்தில் மேடையில் பூஜைக்கான இடம் தயார் நிலையில். பூஜைக்கான தயாரிப்புகள் துவங்கின. ஆந்திராவில் (ராயலஸீமா) புயல் இருந்தாலும், பள்ளாரியில் காலையில் வானம் தெளிவாகவே இருந்தது. ஆகவே, பூஜைக்கான தயாரிப்புகள் துவங்கின. பீடம் போட்டு, ஆராத்ய தேவரின் பிரதிமைகளைத் தவிர, மற்ற அனைத்து பிரதிமைகளையும் எடுத்து வைத்தனர் சிஷ்யர்கள். பூஜ்ய ஸ்ரீகளவர் ஸ்னானத்திற்காக இறங்கினார். ஆசார்யரின் மனதில் கலக்கம். அதற்குள் அருகில் 1 கிமீ தூரத்தில் மழை துவங்கிவிட்டது என்னும் செய்தி வந்து சேர்ந்தது. மேலும் பயந்தார்.

ஒரு முறை பீடத்தில் பிரதிமைகளை வைத்தபிறகு, அதனை பூஜிக்காமல் மறுபடி உள்ளே எடுத்து வைக்க முடியாது. அனைவரும் ஸ்ரீகளவரிடம் சென்று வணங்கி, நிலைமையை எடுத்துக் கூறினர். ஸ்ரீகளவர் பல-த்வய (இரு தேங்காய்கள்) தொட்டு, ஸ்ரீபூதராஜரை பிரார்த்தனை செய்தார். அங்கு இருந்த ஸ்ரீபூதராஜரின் சன்னிதிக்கு (ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யர் பூஜித்து வைத்த ஸ்ரீபூதராஜரின் சன்னிதி சிலை), அந்த தேங்காய்களை சமர்ப்பிக்கச் சொன்னார். அதன்படியே ஆசார்யர் அதனை சமர்ப்பித்தார்.

அருகில் சுற்றிலும் ஜோரான மழை. ஆனால், சத்யநாராயணபேட்டையில் மட்டும் ஒரு துளியும் பெய்யவில்லை. இது தெய்வ அனுக்கிரகம் மற்றும் பூஜ்ய ஸ்ரீகளவரின் தவசக்தியின் பலனே ஆகும். அன்றைய பூஜை எப்போதும்போல சிறப்புடன் நடந்து முடிந்தது. வந்திருந்த பக்தர்களுக்கு வியப்பு. அனைவருக்கும் சம்ஸ்தானதேவரின் தரிசனம், தீர்த்த மற்றும் சந்தர்பணை ஆகியவை தடையின்றி கிடைத்தன.

இதெல்லாம் ஸ்ரீபூதராஜரின் மகிமை என்று கொண்டாடினார் ஸ்ரீகளவர். அனைவரின் மனக் கலக்கங்களும் தூரமாகி, மகிழ்ச்சி அடைந்தனர். ஸ்ரீராஜர், ஸ்ரீகிருஷ்ணதேவரின் ரதோத்ஸவ சந்தர்ப்பத்தில், அனைத்து இடங்களிலும் மழை பெய்து வந்தாலும், ரதவீதியில் மட்டும் மழை பொழியாதவாறு செய்தது அவரது மகிமை மற்றும் வரலாறு. ஸ்ரீகுருராஜரின் அருளால், அந்த பரம்பரையில் வந்தவரான ஸ்ரீகளவர் பிரார்த்தித்து மழையை தடுத்தது இவரது மகிமையே ஆகும்.

## திறக்காத ஸம்புடம் சுலபமாக திறந்தது

ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் தந்தை ஸ்ரீனிவாஸாசார்யர் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் அருளிய வித்யாநிதி ஸம்பன்னர். சத்புத்ர பிராப்திக்காக தம்பதிகள் உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண சேவையில் ஈடுபட்டிருந்தனர். ஸ்ரீஸோதெ க்ஷேத்திரத்தில் சேவை தொடர்வதற்கு குறிப்பு வந்தது. அப்படியே

அவர்களும் ஸோதெ வந்து சேவையை செய்தனர். அந்த சமயத்தில் ஸ்ரீவிருந்தாவனாசார்யர் அங்கு இருந்தார். சில நாட்களுக்குப் பிறகு, அவருடைய சொந்த இடத்திலேயே சேவையை தொடருமாறு சொல்லி, ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர், ஸ்ரீராஜரின் மிருத்திகை நிரப்பிய ஒரு சிறிய தங்கமயமான பிருந்தாவனத்தை ஆசார்யருக்குக் கொடுத்து அருளினார்.

குரு உத்தரவினைப் பெற்று தம்மிடத்திற்கு (ஹானகல்) வந்த ஆசார்ய தம்பதிகள், அந்த வ்ருந்தாவனத்தின் சன்னிதியில் சேவையை தொடர்ந்தனர். அதன் பலனாக ஸ்ரீராஜரின் ஏகாந்த பக்தரை புத்திரனாக பெற்றனர். பிறகு அந்த பிருந்தாவனத்தை, வேறொரு தாமிர சம்புடத்தில் வைத்து பூஜிக்கத் துவங்கினர். இப்படியே பல ஆண்டுகள் கழிய, அந்த சம்புடம் கெட்டியாக மூடிக்கொண்டது. திறப்பதற்கே கடினமானது. வம்சத்தில் அடுத்து வந்தவர்கள் அதனை திறக்க முயலவேயில்லை. ஆனால், 1980ம் ஆண்டின் துவக்கத்தில் இந்த விஷயமே அவர்களுக்கு தெரியவில்லை. தங்கமய பிருந்தாவனத்தை, வ்ருந்தாவனாசார்யர் கொடுத்தார் என்றும், அது அந்த சம்புடத்தில் இருக்கலாம் என்றும் நினைத்தனர். 1992ம் ஆண்டில் அதனை திறப்பதற்கு பல முறை முயன்றும் அது முடியவில்லை.

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பள்ளாரிக்கு வந்தபோது, அந்த விஷயத்தை சொல்லி, பிரார்த்தனை செய்தனர். பூஜ்ய ஸ்ரீகளவர் தமது சம்ஸ்தான பூஜையை முடித்தார். அங்கத்திய தேவ- குரு சன்னிதிக்கு பல சமர்ப்பணம் செய்தார். அந்த சம்புடத்தை கையில் எடுத்து, விசேஷமாக பிரார்த்தனை செய்து, அதன் மூடியை ஓரிரு முறை ஆட்டியவுடன், அது சுலபமாக திறந்து கொண்டது. ஸ்ரீகளவர் முதலாக அனைவரும் ஆச்சரியம்.

இது ஸ்ரீஜம்புகண்ட ஆசார்யரின் புண்ய மற்றும் அதில் இருந்த தேவஸன்னிதியின் மகிமை என்று மகிழ்ந்தனர். அந்த சம்புடத்தில் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் கொடுத்த பெயர் பொறித்த தங்கமயமான வ்ருந்தாவன மற்றும் ஸ்ரீராஜரின் மிருத்திகை இருந்தது. இன்றைக்கும் அதனை அவர்கள் வீட்டில் பார்க்கலாம். ஆசார்யரின் வம்சத்தவர்களின் மனதில், இந்த வ்ருந்தாவனம் அல்லாமல், பரம்பரையில் வந்த, ஸ்ரீராஜரின் வெள்ளி பஞ்ச வ்ருந்தாவனங்களும் இருக்கின்றன. மத்வ வ்ருந்தாவனத்தில் ஹனும, பீம, மத்வ மற்றும் ஹம்ஸாரூட ஸ்ரீராஜரின் பிரதிமைகளும் பொறிக்கப்பட்டுள்ளன.

## விஜயகுருகளின் தரிசனம் பெற்ற தன்யர்

ப்ருகு வம்ஷ சம்பூதரான ஸ்ரீவிஜயதாசரின் விஷயத்தில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு அபாரமான கௌரவம் இருந்தது. பள்ளாரியின் திக்விஜயத்திற்குப் பிறகு, சிப்பகிரிக்கு செல்லலாம் என்று நினைத்தார். அப்படியே அங்கும் சென்றார். புயல் சின்னம் ஏற்பட்டிருந்ததால், அனைத்து இடங்களிலும் தொடர்ச்சியான மழை. அப்படியே, புறப்பட்டுச் சென்றனர்.

க்ஷேத்திரத்தில் தமது ஆராத்ய தேவபெட்டியுடன் நுழைந்து, முதலில் சன்னிதி தரிசனத்திற்குச் சென்றார் ஸ்ரீகளவர். தேவபெட்டியுடன் சன்னிதியின் வாயிலில் நுழைந்தபோது, ஸ்ரீவிஜயதாசர் கட்டெ மேல் சார்த்தியிருந்த மாலை ஒன்று கீழே விழுந்தது. அப்படி ஸ்ரீகளவர் மேலும் கட்டெயின் அருகில் சென்றபோது, மேலும் ஒரு மாலை கீழே விழுந்தது. இதனை ஸ்ரீகளவர் மிகவும் சூக்ஷ்மமாக கவனித்து, இவ்வாறு கூறினார். ‘முதலில் விழுந்த மாலையானது, நமது ஆராத்ய தெய்வத்தை மற்றும் ஸ்ரீராஜரை வரவேற்பதாக இருந்தது. பிறகு விழுந்த மாலையானது நம்மை வரவேற்பதாக இருந்தது’ என்று கூறி மகிழ்ந்தார்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், தாஸவரேண்யரின் சன்னிதிக்கு சாஷ்டாங்கமாக வணங்கினார். அங்கிருந்த தாசரின் வம்சத்தவர்கள், அவரை கௌரவம் செய்து, தங்குவதற்கு ஏற்பாடு செய்து கொடுத்தனர். இரவு

கால பூஜை, ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜை என அனைத்தும் சிறப்பாக நடந்து முடிந்தன. அடுத்த நாள் காலையில் சம்ஸ்தான பூஜை தொடங்கியது. நைவேத்ய சமர்ப்பணைக்குப் பிறகு, மகா மங்களாரத்தி துவங்கியது. கடைசியில் எழுந்து நின்று, தட்டு ஆரத்தியை செய்தபோது,

ஸ்ரீகளவர், ஸ்ரீவிஜயதாசரின் சன்னிதிக்கு ஆரத்தி காட்டினார். பிறகு வியாஸமுஷ்டி பூஜையை செய்து, ஸ்ரீராஜரின் (பாதுகை) பூஜை துவங்கியது. அங்கு தாசரின் வம்சத்து வாலிபன் ஒருவர் இருந்தார். அவர் பெயர் மதுஸூதனதாஸ. அவர் ஸ்ரீவிஜயதாசர் இயற்றிய ஸ்ரீவாதிராஜரின் சுளாதியை மிகவும் அற்புதமாக பாடத் துவங்கினார்.

ஸ்ரீகளவரும் அங்கு அமர்ந்து, மிக கவனத்துடன் அதனை கேட்டார். ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் பூஜையை முடித்து, சமர்ப்பணம் செய்தற்காக தாசரின் சன்னிதிக்கு வந்தார். பஞ்சோபசாரம் செய்து, ஸ்வாமிக்கு நிவேதனம் செய்த நைவேத்தியத்தை தாசருக்கு ஹஸ்தோதகம் செய்து சமர்ப்பித்து, மகா மங்களாரத்தி செய்தார். அங்கிருந்த, தாசர் பயன்படுத்திய தம்பூரியை தன் தலையினால் வணங்கினார். அதற்கும் ஒரு ஆரத்தி செய்தார். முன் இருந்த, ஸ்ரீமோகனதாசரின் சன்னிதிக்கும் நைவேத்தியம் சமர்ப்பித்தார். கட்டெயின் கீழே வந்து, சாஷ்டாங்கமாக வணங்கி நிற்க, தாசரின் தரிசனம் ஆயிற்று. மெய்சிலிர்த்து மறுபடி கீழே விழுந்து வணங்கினார். பிறகு, பிக்ஷா ஸ்வீகார, சந்தர்ப்பணை, ஆகியவை நடந்தன.

## சுளாதியை மறுபடி கேட்டு மகிழ்ந்தார்

சிப்பகிரியிலிருந்து புறப்படும் நேரம். மறுபடி தாசரின் சன்னிதிக்கு வந்தார் ஸ்ரீகளவர். அன்றைய சம்ஸ்தான பூஜா சமயத்தில் கேட்ட சுளாதியை திரும்ப கேட்கவேண்டும் என்னும் ஆசை, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு வந்தது. தன் விருப்பத்தை கூறினார். மதுஸூதன தாஸரை அழைத்தனர். ஸ்ரீகளவர், தாசரின் கட்டெயின் படிக்கட்டில் அமர்ந்தார். சுளாதி கானம் துவங்கியது. ஸ்ரீகளவர் சுளாதியை மிக கவனத்துடன் கேட்டார். மனதை பறிகொடுத்தார். ருஜுத்வத்தை நிரூபிக்கும் சுளாதியின் சரணங்களைக் கேட்கும்போது ஸ்ரீகளவருக்கு மெய்சிலிர்த்தது. கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் வந்தது.

திரும்பத்திரும்ப ஸ்ரீவிஜயதாசரின் சன்னிதியை பார்த்துக் கொண்டிருந்தார். குவித்த கைகள் அப்படியே இருந்தன. சுளாதி கானம் முடிந்தது. பாடிய மதுஸூதன தாசரை ஸ்ரீகளவர் அருகில் அழைத்தார். அனுக்கிரக மந்திராட்சதை அருளினார். தாசரின் வம்சத்தவர்களுக்கு மற்றும் வந்திருக்கும் பக்தர்களுக்கு மந்திராட்சதை வழங்கினார். அந்த சமயத்தில் ஸ்ரீகளவர் பேசியது இவ்வாறு:ஸ்ரீவிஜயதாசர் செய்த உதவி அபாரமானது. அவருடைய சுளாதி சாகித்யம், அனைத்து சாஸ்திரங்களின் சாரம் ஆகும். ஸ்ரீமத்வாசார்யர், ஸ்ரீமத் டீகாக்ருத்பாதர், முதலான மஹனீயர்களின் ஸ்வரூப மகிமையை எளிய மொழியில் போதித்து, நமக்கு பேருதவி செய்தவர் ஸ்ரீவிஜயதாசர். பூஜ்யர், அதே கிரமத்தை ஸ்ரீவாதிராஜரின் விஷயத்திலும் பின்பற்றி, பத சுளாதிகள் மூலம் ஸ்ரீராஜரின் ஸ்வரூப மகிமையை கொண்டாடியிருப்பது மிகச்சிறப்பு. பிரம்மாண்ட புராணத்தில் பிரமாணம் இருக்கிறது என்று சொல்லும் குறிப்பு மிகவும் கவனிக்கத்தக்கது. பூஜ்ய தாசர் சாஸ்திர- அபரோக்ஷிகள். அந்த சுளாதியிலேயே, ஸ்ரீமத்வருக்குப் பிறகு, ஸ்ரீவாதிராஜரே பிரம்ம பதவிக்கு தகுதி பெற்றவர் என்பதை தெளிவாக சொல்லியிருக்கிறார். இந்த குறிப்பு ஸ்வரூப தாரதம்யத்தை அறிவதற்கும், மற்றும் அதனை பின்பற்றுவதற்கும் ஏற்றதாக இருக்கிறது. ஸ்ரீராஜரின் பக்தர்கள் அனைவரும் ஸ்ரீவிஜயதாசருக்கு எப்போதும் பக்தி மரியாதையுடன் நன்றியை தெரிவிக்க வேண்டும்’.

இது பிரவசனம் அல்ல. மெய்மறந்து உச்சரித்த வார்த்தைகள். அங்கிருந்து புறப்படும் முன்னர், மறுபடி ஆரத்தி செய்து, ஸன்னிதியின் மந்திராட்சதையை தலையில் ஏந்தினார். அந்த புண்ணிய சன்னிதி தரிசனத்தை செய்த மகிழ்ச்சி, ஸ்ரீகளவரின் முகத்தில் தெரிந்தது.

## ஸ்ரத்தையே பாதபூஜையின் காணிக்கை

1993ம் ஆண்டு. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு, ஸ்ரீவிஜய தாசார்யரின் சன்னிதிக்கு செல்லும் விருப்பம் வந்தது. அப்போது பள்ளாரியில் இருந்தார். பூஜைகளை முடித்தார். அங்கிருந்து சிப்பகிரிக்கு புறப்பட்டார். உடன் பல பக்தர்களும் வந்தனர். தாசார்யரின் சன்னிதியை சேர்ந்து, சன்னிதியின் தரிசனத்தினால் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். இரவு கால பூஜை ஆயிற்று.

ஸ்ரீவிஜய பிரபுகளின் குணகானம், தாசார்யரின் வம்சத்தவரான ஸ்ரீநாராயண தாசர் மூலமாக, மந்திரதுல்யமான சுளாதிகளின் கானங்கள், ஸ்ரீகளவர் முதற்கொண்டு அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

அடுத்த நாள் சம்ஸ்தான பூஜை ஆனபிறகு, ஸ்ரீகளவர், ஸ்ரீவிஜயதாசரின் மற்றும் ஸ்ரீமோகனதாசரின் சன்னிதிக்கு ஹஸ்தோதகம் சமர்ப்பித்து, ஆரத்தி காட்டி, சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். தீர்த்தம் கொடுக்கப்பட்டது. பிறகு, வம்சத்தவர்கள் மற்றும் வந்திருந்த பக்தர்கள் அனைவரின் விருப்பத்தின்படி பாதபூஜை நடந்தது. ஏராளமான மக்கள் அங்கு திரண்டிருந்தனர். ஒவ்வொருவராக வந்து பழ காணிக்கைகளை சமர்ப்பித்து, பாதபூஜை செய்து, மந்திராட்சதை பெற்று சென்றனர். ரூ10, ரூ5, ரூ2 என காணிக்கைகளை காண முடிந்தது. அந்த சமயத்தில் தாசார்யரின் கிருதிகளை சிலர் பாடிக் கொண்டிருந்தனர். அவற்றில் 'தாஸ தாஸதாஸர தாஸ்யவ கொடு' என்பது அற்புதமாக இருந்தது.

அங்கு ஒரு பக்தன். குருகளுக்கு பாத பிரக்ஷாளனம் செய்தான். கை குவித்து நின்றான். பழ காணிக்கை இல்லை. சீக்கிரம் பழ காணிக்கை செலுத்துங்கள் – என, ஸ்ரீகோவிந்தண்ண, இரு முறை சத்தமாக கூறினார். அவனிடம் எதுவும் பழங்கள் இல்லை என்று அந்த பக்தன் கூறினான். அப்போது அருகில் இருந்தவர்கள் – பிறகு ஏன் பாதபூஜை செய்ய வரவேண்டும்? - என்று முணுமுணுத்தனர். அவன் அதற்கெல்லாம் கவலைப்படவில்லை. கை குவித்து அப்படியே நின்றிருந்தான். ஸ்ரீகளவர் அந்த பக்தனின் சிரத்தை, பக்தி, சரணாகதிகளை கண்டு மகிழ்ந்து, தட்டில் இருந்த உத்தத்தி மற்றும் மந்திராட்சதையை கொடுத்து அருளினார். அவன் மறுபடி நமஸ்கரித்து பின் நகர்ந்தான். அங்கிருந்த பலருக்கு ஆச்சரியம். எனக்கும் ஆச்சரியம் ஏற்பட்டது. வம்சத்தவரான ஸ்ரீஜகன்னாத தாசர், அந்த மனிதனை பார்ப்பதற்கு செல்ல, ஸ்ரீகளவர் புன்னகையுடன் அவரை தடுத்து நிறுத்தினார். சர்வக்ஞ பீடஸ்தவரான குருகளில் இருந்த கருணை அங்கிருந்தவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

பிக்ஷைக்குப் பின், புறப்படுவதற்கு முன், மறுபடி தாசரின் சன்னிதிக்கு வந்து நமஸ்காரம் செய்தார் ஸ்ரீகளவர். அப்போதும் ஸ்ரீகளவர் கூறியது – தாஸ்ய பாவத்தின் ரகசியத்தை உபதேசித்த தாஸார்யரின் சன்னிதியில், பக்தி மரியாதையுடன் இருப்பது நமக்கு பெருமை தரக்கூடிய விஷயம் ஆகும்'.

## சமத்வ சன்னிதியின் விசேஷ தரிசனம்

பள்ளாரியில், ஷிரகுப்ப தாலுகாவில் ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீவாதிராஜரின் கோயில் ஒன்று உள்ளது. சிதிலமடைந்திருந்த அந்தக் கோயில் 2003ம் ஆண்டில் ஜீர்ணோத்தாரணம் கண்டது. ஆசார்யரின் வம்சத்தவரான ஸ்ரீபதரி நாராயணாசார் மற்றும் ஸ்ரீரங்கநாதாச்சார் மற்றும் பிற பக்தர்களின் சேவை உதவியுடன் ஜீர்ணோத்தாரணம் நிறைவேறியது.

ஒரு முறை பள்ளாரியிலிருந்து, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஷிரகுப்ப சென்றார். வழியில் கெஞ்சனகுட்டாவில், ஸ்ரீவஸுதேந்திர தீர்த்தரின் வ்ருந்தாவன தரிசனம் பெற்று வணங்கினார். அங்கு, அர்ச்சகரான ஸ்ரீவெங்கண்ணாசார்யரால் குருமகிமா ஸ்ரவணம் செய்து, மகிழ்ந்தார். அங்கிருந்து ஷிரகுப்ப சென்று, ஸ்ரீராஜரின் சன்னிதியை அடைந்தார். அங்கு மிகச்சிறப்புடன் வரவேற்புகள் நடந்தன. அந்த சன்னிதியின் பிரகாரம் சிறப்பானது. ஸ்ரீராஜரின் மத்ய வ்ருந்தாவன மற்றும் உப-வ்ருந்தாவனங்களின் பக்கத்திலும் ஸ்ரீமுக்யபிராணரின் சிலைகள் உள்ளன. இத்தகைய சன்னிதி வேறு எங்கும் இல்லை. அந்த பிருந்தாவனங்களில் உள்ள தேவதா சன்னிதானம் மிகச் சிறப்பானவை என்று ஸ்ரீகளவருக்கு தோன்றியது. ஸ்ரீபூதராஜரின் மற்றும் கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாதீஷரின் ம்ருத்திகா பிருந்தாவன சன்னிதியும் விசேஷமானவை – என்றார்.

அங்கு சம்ஸ்தான பூஜைகள் மிகுந்த வைபவத்துடன் நடந்தன. பிறகு, வ்ருந்தாவன சன்னிதியின் எதிரிலும் சமர்ப்பண, ஆர்த்திகளை செய்து சாஷ்டாங்கமாக வணங்கினார். வம்சத்தவர் மற்றும்

பிறரிடமிருந்து பாதபூஜை, பழ சமர்ப்பணம் ஆகியவை நடந்தன. பிறகு நடந்த சபா கார்யகிரமத்தில் அனேக வித்வாம்ஸர்கள் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ மஹிமையை நிரூபணம் செய்தனர்.

பூஜ்ய ஸ்ரீகளவர் 'இங்கத்திய சன்னிதி பிரகாரம் மிகவும் விசேஷமானவை. வாயு ஸமத்வோசித ருஜுத்வ, ஸ்ரீராஜரின் பிராணாதி பஞ்ச ரூப வைபவம் ஆகியவை தெளிவாக தெரிகிறது. ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யர், ஸ்ரீராஜரின் ஏகாந்த பக்தர். அவர் செய்த சித்தாந்த சேவை அபாரமானது' - என்று கொண்டாடினார். பிறகு, பிக்ஷா ஸ்வீகாரம், சந்தர்ப்பணை ஆனபிறகு, அங்கிருந்த பக்தர்களுக்கு மந்திராட்சதை கொடுத்து அருளினார்.

## ஸ்ரீவிஜயதீர்த்த ஸ்னானம் – துரித நிவாரணம்

சிப்பகிரியில் ஒரு சிறிய சரோவரம். பெயர் ஸ்ரீவிஜயதீர்த்த. கங்காதி அனைத்து தீர்த்தங்களின் சன்னிதானம் கொண்டது. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், முன்பு அங்கு சென்றிருந்தபோது பயங்கர மழை. மேலும், ஸ்ரீவிஜயதீர்த்தத்தின் தண்ணீர் சிறிது துர்நாற்றம் அடிப்பது போல இருந்தது. ஆகவே, சிஷ்யர்கள் ஸ்ரீகளவரை அங்கு ஸ்னானத்திற்கு செல்ல வேண்டாம் என்பதாக தீர்மானித்தனர். விஷயத்தை அவரிடம் சொல்லவில்லை.

ஸ்ரீகளவரும் அருகில் இருந்த மோகனதாசரின் கிணற்றிலேயே ஸ்னான, பின் அதிலிருந்தே பூஜை, சமையலுக்கு தண்ணீர் எடுக்கப்பட்டது. மழை இருப்பதால் மற்றும் ஸ்ரீவிஜயதீர்த்தம் சன்னிதியிலிருந்து சிறிது தொலைவில் இருப்பதால், அதைப் பற்றி ஸ்ரீகளவர் எதுவும் கேட்கவில்லை. பிறகு அங்கிருந்து கிளம்பி வந்தபிறது, ஏதோ ஒரு பேச்சின் நடுவில், ஸ்ரீவிஜயதீர்த்தத்தைப் பற்றி ஸ்ரீகளவர் கேட்டார். அப்போது அவருக்கு விஷயம் தெரிய வந்தது.

அப்போது அவர் கூறியது: பாருங்கள், ஸ்ரீவிஜயதீர்த்தம் என்பது புண்ய தீர்த்தம். தாசர் நிர்மாணம் செய்தது. தாசார்யருக்கு அங்கேயே ஸ்ரீவேணுகோபால பிரதிமை கிடைத்தது. அந்த தீர்த்தத்தின் தண்ணீர், சம்சாரத்தின் துர்வாசனையை (பந்தனத்தை) அழிக்கக்கூடிய மகிமையைக் கொண்டது'. என்று அந்த பவித்ர தீர்த்த ஸ்னான விஷயத்தை தெளிவுபடுத்தினார். அடுத்த முறை வரும்போது, அதிலேயே ஸ்னான செய்ய வேண்டும் என்று விரும்பினார்.

அடுத்த ஆண்டு ஸ்ரீகளவர், மறுபடி பள்ளாரிக்கு வந்தார். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவர்கள் முன்னிலையில், பூஜாதி கார்யகிரமங்கள் அனைத்தும் வழக்கம்போல சிறப்பாக நடந்தன. அந்த சமயத்தில் சிப்பகிரியில், ஸ்ரீவிஜயதீர்த்தத்தில் ஸ்னானம் செய்யும் விருப்பத்தை வெளிப்படுத்தினார். அடுத்த நாள் பள்ளாரியிலேயே, புகழ் பெற்ற நியாயவாதிகளான ஸ்ரீ.ஷ்யாமாஜி. கோபிநாத் அவர்களுடைய வீட்டில் சம்ஸ்தான பூஜை இருந்தது. அந்த பூஜை, பிக்ஷை ஆகியவை முடிந்தபிறகு, மதியம் சிப்பகிரிக்கு புறப்பட்டார். அப்போது ஸ்ரீகளவர் ஸ்ரீவிஜயதீர்த்தத்தில் ஸ்னானம் செய்தார். தண்ணீர் நிர்மலமாக இருந்தது. ஸ்னானம் செய்து, த்ருப்தி அடைந்தவர் போல காணப்பட்டார். தாசார்யரின் சன்னிதி தரிசனம் பெற்றார். சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். சிப்பகிரி யாத்திரை பூர்ணமாயிற்று என்று மனம் நிரம்பியவாறு கூறி தன்யர் ஆனார். முன்னர் வந்தபோது நடந்த விஷயங்கள் அங்கிருந்த சிலருக்கு தெரிந்திருந்தது. அவர்களும் மகிழ்ந்தனர்.

## பௌகல்லார்யரின் விரத அனுஷ்டானம்
## மற்றும் பாட கிரமத்தை புகழ்தல்.

சிப்பகிரியிலிருந்து ஆதோனி செல்லும் நிகழ்ச்சி. அலூரு வழியாக செல்ல வேண்டும். அங்கேயே அருகில் ஹத்திபௌகல் கிராமம். அங்கிருந்த பிராணதேவரின் தரிசனம் செய்து, பின் பயணம் என்று தீர்மானித்தார் ஸ்ரீகளவர். அதைப்போல, ஹத்திபௌகல் கிராமத்திற்கு வந்தார். கிராமத்தின் அருகில் ஸ்ரீராயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட வெங்கண்ணபந்த பிராணதேவரின் சன்னிதானம் இருந்தது. பிராணதேவரின் தரிசனம் செய்து, ஆரத்திகளை காட்டினார். ஸ்ரீஹத்திபௌகல்

ஆசார்யரின் மற்றும் பில்பபத்ரி ஆசார்யரின் வம்சத்தினர், ஸ்ரீகளவருக்கு பழ-காணிக்கை சமர்ப்பித்தனர். ஆசார்யரான ஸ்ரீ பாணேஷாசார்யர், அந்த க்ஷேத்திர மகிமையை விளக்கினார்.

ஸ்ரீராயரின் சமகாலீனராக இருந்த பக்தன் வெங்கண்ண. ஸ்ரீராயரின் சன்னிதிக்கு சரணாகதி அடைந்து, அருளுமாறு பிரார்த்தனை செய்தான். கருணாளுவான ராயர், அங்கு வந்து பிராணதேவரை பிரதிஷ்டை செய்தார். பிறகு, அந்த சன்னிதி, அனேக ஞானிகளின் சாதன க்ஷேத்திரமாக ஆனது. அதில், ஹத்திபௌகல் ஸ்ரீநரசிம்மாசார்யரும் ஒருவர். அவருடைய தபோபூமி. ஆசார்யரின் மகிமைகளில் நான்கு அம்சங்கள் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை மிகவும் ஈர்த்தன. அவை ஸ்ரீபிராணதேவரில் விசேஷ பக்தி, அவரது உபவாச விரத அனுஷ்டானங்கள், பாட பிரவசன கிரமம் மற்றும் தானம் செய்யும் உள்ளம்.

விசேஷ பக்தியுடன், அவர் வாயுதேவருடன் பேசும் வழக்கம் கொண்டிருந்தார். அவருடைய ஆணைக்கேற்ப, ஒரு மண்டல காலம் வரைக்கும் உபவாஸ விரத அனுஷ்டானம் செய்தார். பாடத்தில் விஷ்ணு ப்ரீதிகர சாதனத்திற்கு சாட்சாத் பொருந்துவதான பிரமேயங்களை விவரித்து, திரும்பத்திரும்ப விளக்குவதாக இருந்தார். மத்வ சித்தாந்த விஷயங்களை உபாசனைக்கு ஏற்ற வகையில் போதிப்பது, ஸ்ரீஹரியின் கர்த்ருத்வத்தை, ஸ்வாமித்வத்தை வைராக்கியம் வருமாறு விளக்குவார். இவை விசேஷ அம்சங்கள். ஸ்ரீகளவருக்கு ஆசார்யரின் பாட கிரமம் மிகவும் பிடித்திருந்தது. பிறகு, ஆசார்யரின் சன்னிதானம், ஊரில் இருந்த தேவ ஸன்னிதி மற்றும் பாகிரதி ப்ரத்யட்சமான கிணற்றினை தரிசனம் செய்த ஸ்ரீகளவர் ஆதோனிக்கு திரும்பினார்.

## யாதவகிரி

ஆதோனி முதலிலிருந்தே யாதவகிரி என்றே புகழ் பெற்றிருந்தது. அங்கு செல்லும்போது, இவர்களுடன் மழையும் தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது. ஸ்ரீகளவரை வரவேற்பதற்கு ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் வம்சத்தவர் மற்றும் இதர பக்தர்கள் அங்கு சேர்ந்திருந்தனர். மடத்தின் அருகில் ஒரு இடத்தில் ஸ்ரீகளவரை வரவேற்கக் காத்திருந்தனர். வேதகோஷ, பஜனை, வாத்திய வைபவங்களுடன் ஸ்ரீகளவரை வரவேற்றனர். அங்கத்திய ஸ்ரீகோதண்ட ராமதேவரை வணங்கி, ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் வ்ருந்தாவன தரிசனத்தைப் பெற்று சாஷ்டாங்கமாக வணங்கினார் ஸ்ரீகளவர்.

ஸ்ரீவாதிராஜரை ருஜுதேவதை என்று ஆராதிக்கும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் அங்கு இருந்தனர். மாலை வேளையின் பூஜை நடக்கும்போது, வேறு இடத்தில் சபா நிகழ்ச்சி நடந்தது. ஸ்ரீகளவர், பூஜ்ய ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் மகிமையை அறிந்தவர். 'முத்திகி வம்சத்தில் பிறந்து, நியத குருகளைத் தேடி, ஹத்திபௌகல் ஸ்ரீ நரசிம்ஹாசார்யரின் சிஷ்யர் ஆனார். பற்பல விதங்களில் குரு சேவையை செய்து, சாஸ்திர அத்யயனத்தை முடித்தார். கூடலி ஆர்ய அக்ஷோப்ய தீர்த்த சம்ஸ்தானத்தின் அதிபதிகள் ஆனார். பின், பீடத்தை தியாகம் செய்து, நியத வைராக்ய பாக்யத்தைக் கொண்டார். 'ஸ ரக்ஷிதா ரக்ஷதி யோ ஹி கர்ப்பே' - என்பதை தமது ஸாத்விக தாத்விக வாழ்க்கையில் பின்பற்றி பலன்களைக் கண்டார். தம் வித்யாகுரு ஸ்ரீபௌகல்யாசார்யரைப் போல வாயுதேவரை ஆராதித்தவர். அந்த ஸ்வாமியின் ஆணைப்படி உபநயனங்களை முடித்து, தேவோத்தமனைக் கண்டு தன்யர் ஆனார்.

இப்படிப்பட்ட யதிகளை, பிடி சன்யாசி என்று புறக்கணித்துவிடாமல், வந்து அவரை தரிசனம் செய்தார் நம் ஸ்ரீகளவர். அங்கு இரவு பூஜை, ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜை ஆகியவை சிறப்பாக நடைபெற்றன. அடுத்த நாள் சம்ஸ்தான பூஜை, குருகளின் வ்ருந்தாவனத்தின் முன் பாகத்தில் நடந்தது. வாயுதேவரின் சன்னிதி மற்றும் ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் வ்ருந்தாவன ஸன்னிதியில் ஆரத்திகள், வைபவத்துடன் நடந்தன. தீர்த்தம் கொடுத்தலுக்குப் பிறகு, அங்கிருந்த பக்தர்கள் ஸ்ரீகளவருக்கு பாதபூஜைகளை சமர்ப்பித்தனர். மடத்து சிஷ்யர்கள் ஸ்ரீகளவரிடமிருந்து தப்த முத்திரையை ஸ்வீகரித்தனர். பிக்ஷாஸ்வீகாரத்திற்குப் பிறகு, அனைவரும் ஸ்ரீகளவருக்கு தக்க மரியாதைகளை செய்து விடைகொடுத்தனர்.

## மழை மாயம்

மந்திராலயாதீஷரான ஸ்ரீராகவேந்திர குருஸார்வபௌமர், கலியுக காமதேனு கல்பவ்ருக்ஷம் ஆவார். அவரை சிந்திக்காத, சேவை செய்யாத பக்தர்களே இல்லை. ஸ்ரீகோபாலதாசர் கூறியதைப் போல, அனைத்து குருகளின் சன்னிதானமும் அங்கேயே இருக்கிறது. ஆதோனியிலிருந்து மந்திராலயத்திற்கு புறப்பட்டார் ஸ்ரீகளவர். மந்திராலயத்தில் நுழையும்போது, இவருடைய வரவேற்பிற்காக, அபாரமான ஏற்பாடுகள் ஆகியிருந்ததைக் காணமுடிந்தது. ஸ்வோத்தமரின் சன்னிதிக்கு போய்க்கொண்டிருக்கும் ஸ்ரீவிஷ்வோத்தமருக்கு இதெல்லாம் பிடிக்காது.

ஷோபா யாத்திரை துவங்கியது. மடத்தின் முன்பாகத்தின் சாலையின் துவக்கத்தில் இறங்கி, நடந்தவாறு சென்றார். அனேக வித்வாம்ஸரின் வேதகோஷ மற்றும் வாத்திய வைபவம் அற்புதமாக இருந்தது. மடத்தின் முக்கிய வாயிலில் நிர்வாக அதிகாரி, ஆப்த காரியதரிசி மற்றும் மற்றவர்களும் சேர்ந்து ஸ்ரீகளவரை வரவேற்றனர். தரிசனத்திற்காக வ்ருந்தாவன சன்னிதானத்திற்காக சென்றார். அங்கு பூஜ்ய ஸ்ரீஸுஷமீந்திர தீர்த்தர் இவரை வரவேற்றார். எதிரில் இருந்த ஸ்ரீமுக்யபிராணர தேவரின், ஸ்ரீராகவேந்திர மற்றும் ஸ்ரீவாதீந்திர தீர்த்தரின் தரிசனத்தைப் பெற்றார். அந்த சமயத்தில், அங்கும் மழை பெய்துகொண்டிருந்தது. அடுத்த நாள் நதி ஸ்னானம், சம்ஸ்தான பூஜை ஆகியவை எவ்வித தடையின்றி நடக்க வேண்டியிருந்தது. அதற்காக, ஸ்ரீஹரிகுருகளை விசேஷமாக ஸ்ரீராயரை பிரார்த்தனை செய்தார்.

பின், மாலையில் ஸ்வாகத சபை துவங்கியது. ஸ்ரீராயர மடத்தின் மற்றும் ஸ்ரீ ஸோதா மடத்தின் நட்பு குறித்து பேசப்பட்டன. ஸ்ரீவாதிராஜ மற்றும் ஸ்ரீராயர மகிமைகளின் கொண்டாடப்பட்டன. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் வருகை, வரவேண்டிய மழையை தடுத்திருக்கிறது. இந்த நிகழ்ச்சிக்கு மற்றும் உற்சவங்கள் சரியாக நடக்குமாறு நேரம் கொடுத்திருக்கிறது என்று மகிழ்ச்சியடைந்தனர். சபைக்குப் பிறகு, இரவில் பூஜாதிகள் சிறப்புடன் நடைபெற்றது.

அடுத்த நாள் காலையில் ஸ்ரீகளவர் விரைவாகவே நதி ஸ்னானத்திற்குப் புறப்பட்டார். தண்டோதக ப்ரோக்ஷணைக்கு பக்தர்கள் அவரை பின் தொடர்ந்தனர். நதி ஸ்னானத்திற்குப் பிறகு, ஜபங்களை முடித்து, சம்ஸ்தான பூஜை துவங்கியது. அந்த சமயத்தில் ஸ்ரீசுஷமேந்திர தீர்த்தரும் தமது சம்ஸ்தான பூஜையை துவக்கினார். அருகருகில் இரு சம்ஸ்தான பூஜைகள், பார்ப்பவர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. பூஜைக்குப் பிறகு, ஸ்ரீராயரின் சன்னிதியில் ஸ்ரீசுஷமீந்திர தீர்த்தரால் ஹஸ்தோதகங்கள் சமர்ப்பிக்கப்பட்டன.

பிறகு சபை துவங்கியது. வேத கோஷங்கள் முழங்கின. ஸ்ரீராயரின் மடத்திலிருந்து, ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவருக்கு கௌரவம் சமர்ப்பணம். கௌரவத்தை ஏற்றுக்கொண்டு ஸ்ரீகளவர், நன்றியுரை செலுத்தினார். ‘இந்த கலியுகத்தில் காமதேனுவாக, அனைத்து சஜ்ஜனர்களையும் அருளிக் கொண்டிருக்கும் குரூத்தம- த்வயர்கள், ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீராகவேந்திர பிரபுகள். ஸ்ரீராஜர் என்றும், ஸ்ரீராயர் என்றும் அழைக்கப்படுகிறார்கள். மடம், மொழி, மாநிலம், பரம்பரை, குலம் ஆகிய அனைத்தையும் தாண்டி அனைவருக்கும் அருளும் கல்பவ்ருக்ஷங்கள்.

ஸ்ரீஸுஷமீந்திர தீர்த்தர் மற்றும் தாங்கள் அனைவரும் காட்டிய அபிமான அபாரமானது. அதற்கு தக்கவாறு பேச்சே வரவில்லை. இந்த அனைத்து கௌரவத்திற்கும் நாம் எவ்வளவு தகுதியானவர்கள் என்று சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஸ்ரீராயரின் சன்னிதி தரிசனம், நமக்கு எங்கும் கிடைக்காத அமைதியை தருகிறது. ஸஹ்ருதயரான ஸ்ரீகளவர் (ஸ்ரீசுஷமீந்த்ர தீர்த்தர்), நட்புடன் சிறந்த மரியாதையைக் காட்டியிருக்கிறார். அனைவருக்கும் ஸ்ரீஹரிகுருகள் விசேஷமாக அருளட்டும்’.

பிறகு சரியாக 11 மணிக்கு பிக்ஷா ஸ்வீகாராதிகள் நடைபெற்றன. ஸோதெ ஸ்ரீகளவரின் நேரம் தவறாமையைக் கண்ட அங்கிருந்தவர்கள் ‘ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர்கள் ஒரு மாதம் மந்திராலயத்தில் இருந்தால், இங்கும் நேரம் தவறாமை போன்ற ஒழுக்கங்கள் வந்துவிடலாம்’ என்று கூறினர். பிறகு, சிஷ்ய, பரிவாரங்களுடன், ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரை மிகுந்த மரியாதையுடன் வழியனுப்பி வைத்தனர்.

மந்திராலயத்திலிருந்து புறப்பட்டு, முதலில் அருகில் இபராமபுரத்திற்கு வந்தனர். அங்கு ஸ்ரீ அப்பாவர (ஸ்ரீகிருஷ்ணாசார்யரின்) சன்னிதி தரிசனம் செய்தார் ஸ்ரீகளவர். மைஸூரு மற்றும் அந்தப் பக்கங்களில் அப்பாவரு காட்டிய அமானுஷ மகிமைகளைக் கேட்டு மகிழ்ச்சி கொண்டு வணங்கினார். பிறகு, மந்திராலய பிரபுகளின், ஏகஷிலா வ்ருந்தாவனம் இருக்கும் பிச்சாலைக்கு வந்து தரிசனம் செய்தார். ஸ்ரீஅப்பண்ணாசார்யார் காட்டிய தூய்மையான பக்தி மற்றும் அவர் இயற்றிய 'ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திர'த்தின் சிறப்பினை நினைவு கூர்ந்தார். அந்த ஸ்தோத்திரத்தில் வந்த 'தவ ஸங்கீர்த்தனம் வேத ஷாஸ்திரார்த்த ஞான ஸித்தயே' என்னும் வரியைக் கூறியவாறு வணங்கினார். நதிக்கரையில் இருக்கும் அந்த சன்னிதி, மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. அப்ப்டியே, ஸ்ரீராயரின் தபோபூமியான பஞ்சமுகி க்ஷேத்திரத்திற்கு வந்து, ஸ்ரீமுக்யபிராணதேவரின் சன்னிதிக்கு சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். அங்கத்திய அர்ச்சகர், சன்னிதியின் மகிமையை விளக்கி மகிழ்ச்சிப்படுத்தினார்.

## ஸ்ரீவேணிஸோமபுராதீஷரின் சன்னிதி

பஞ்சமுகி தரிசனம் பெற்று, வேணிஸோமபுரத்திற்கு செல்வதற்காக சரியான காலத்தில் புறப்பட்டாயிற்று. ஐஜி கிராமத்தை நோக்கி சென்றனர். அது ஸ்ரீவ்யாஸ தத்வக்ஞ தீர்த்தரின் கார்யக்ஷேத்ர மற்றும் வ்ருந்தாவன சன்னிதி. அங்கேயே ஞானகாரியத்தை ஸ்ரீகுருகள் நடத்தி வந்திருந்தார். அவரது பூர்வாசிரம பெயர் ஸ்ரீவெங்கடரமணாசார்யர். ஸ்ரீகோபாலதாசரே முதலான ஞானிதாசர்களின் நண்பர். ஸ்ரீராயர மடத்தின் பரம்பராதீஷரான ஸ்ரீபுவனேந்திர தீர்த்தரிடமிருந்து ஆசிரமம் பெற்றிருந்தார். அது வைராக்கியத்திற்காக. அவர் மிகச்சிறந்த கிரந்த கர்த்ருவும் மற்றும் வாக்யார்த்த கோவிதராகவும் திகழ்ந்தார். பூனே, கத்வால் ஆகிய பல இடங்களில் இவருடன் வாதம் புரிந்து தோற்றவர்கள் பலர். ஸ்ரீகளவர், கத்வால் சம்ஸ்தானத்தின் குருகள். மாதனூரின் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், ஸ்ரீஸத்யப்ரிய தீர்த்தரின் மக்களான ஸ்ரீவியாஸாசார்யரே முதலானவர்கள், ஸ்ரீவியாஸதத்வக்ஞரின் விஷ்யா சிஷ்யர்கள். சம்ஸ்கிருதத்தில் சிறந்த ஸ்வதந்த்ர க்ருதி, டீகா டிப்பணிகளை எழுதியவர். 'ஸ்ரீவாஸுதேவ விட்டல' என்னும் அங்கிதத்தில், நூற்றுக்கணக்கான பத பத்ய சுளாதிகளை இயற்றியவர். தன்னை நம்பி வந்த பக்தர்களின் கஷ்டங்களை தூர விலக்கியவர். பூஜ்ய குருகள் அனேக மகிமைகளை காட்டியிருக்கிறார். இவரை த்ருஷ்டத்யும்னனின் அவதாரம் என்று சொல்கிறார்கள்.

புண்ய சன்னிதியை அடைந்ததும், ஸ்ரீவியாஸதத்வக்ஞ குருகளின் வம்சத்தவர்களான ஸ்ரீகோபாலகிருஷ்ணாசார்யர் மற்றும் ஸ்ரீனிவாஸாசார்யர் ஸ்ரீகளவரை வரவேற்றனர். அங்கத்திய ஷோடஷ பாஹு நரசிம்மஸ்வாமி, ஸ்ரீவேணுகோபால கிருஷ்ண மற்றும் குருகளின் வ்ருந்தாவன சன்னிதி தரிசனம் பெற்று, ஸ்ரீகளவர் வணங்கினார். மாலை நேரத்து பூஜைகளை முடித்து, அங்கத்திய மகிமைகளைக் கேட்டு, மகிழ்ச்சியடைந்தார். அடுத்த நாள் காலையில், அந்த வம்சத்தவரின் வீட்டின் பின்னால் ஓடிய துங்கபத்ராவின் மகிமையை கேட்டு மெய்சிலிர்த்தார். நதி அபிமானி தேவதையே இவ்வாறு வந்து தரிசனம் அளித்தது அபூர்வமான விஷயம். அந்த பிரவாகத்தின் அருகே ஒரு மிகப்பெரிய பாறை. ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர் (பூர்வாசிரம ஸ்ரீஜயதீர்த்தாசார்யர்), குருகளின் ஆணையினால், அங்கேயே குரு புத்திரரின் (ஐஜி ஸ்ரீவெங்கடரமணாசார்யரின் புத்திரர் ஸ்ரீகோபாலகிருஷ்ணாசார்யர்) அபமிருத்யு பரிகாரத்திற்காக அந்த பாறையின் மேல் அமர்ந்து, ஒரு வார காலம், ஸ்ரீ நரசிம்ம மந்திரத்தை ஜெபித்து, அதன் பலனைக் கொடுத்தர். அபம்ருத்யு பரிகாரமும் ஆயிற்று. அந்த சம்பவத்தைக் கேட்டு, சிறிது காலம், ஸ்ரீகளவர் அந்த பாறையை பார்த்தவாறே இருந்தார். தண்ணீர் பிரவாகம் இல்லாதிருந்தால், நாமும் அந்த பாறைக்கு சென்றிருக்கலாம். 'தபஸ்தபந்த: ஸன்மந்த்ரம் ஜபந்த: ஸ்யாம ஸந்ததம்' என்று கூறினார்.

அபூர்வமான அந்த தபோபூமியை பார்த்தவாறு, தலை வணங்கினார். பிறகு, சம்ஸ்தான பூஜை, தேவ சன்னிதியில் சமர்ப்பணம், வ்ருந்தாவன சன்னிதானத்தில் ஹஸ்தோதகம் கொடுத்தல் ஆகியவை சிறப்புடன் நடந்தன. ஸ்ரீகிருஷ்ணதேவரின் கர்ப்பகிருஹத்திற்கு வெளியே இருக்கும் ஸ்ரீஹயக்ரீவ விக்ரகத்தைப் பார்த்து மகிழ்ந்தார். அதன்பின், தீர்த்தம் கொடுத்தல், பிக்ஷா

ஸ்வீகாரம், ஸந்தர்ப்பணாதிகள் வழக்கம்போல நடந்தன. அங்கிருந்து புறப்படும் முன்னர், மறுபடி ஹரி குரு சன்னிதி தரிசனம் செய்து வணங்கினார். துங்கபத்ரா பிரவாகத்தின் அருகில் சென்று, அபூர்வமான தபஸ்ஸக்திக்கு சாட்சியான பவித்ரமான பாறையைப் பார்த்து வணங்கினார். அந்த சன்னிதி தரிசனத்தினால் அவருடைய மகிழ்ச்சி மேலும் பன்மடங்காயிற்று.

## கனவில் ஸ்ரீகோபாலதாசரைக் கண்டார்

வேணிஸோமபுரத்திலிருந்து ஐஜி வழியாக உத்தனூருக்கு வந்தார் ஸ்ரீகளவர். தாசரின் வம்சத்தவர்கள் மற்றும் மற்ற பக்தர்கள், அங்கு ஸ்ரீகளவரை வரவேற்று மகிழ்ந்தனர். வேணிஸோமபுரத்திலிருந்து புறப்படும்போது துவங்கிய மழை, தொடர்ந்து பெய்துகொண்டே இருந்தது. அது ஒரு சிறிய கிராமம். அனைத்து இடங்களிலும் மழைத் தண்ணீர், சேறு நிரம்பியிருந்தது. கோபாலதாசரின் வீட்டின் அருகில், அந்த கிராமத்தின் சமுதாயக்கூடம் இருந்தது. அங்கேயே சிஷ்ய மற்றும் உடன் வந்த குழுவினர் தங்குவதற்கு ஏற்பாடு ஆகியிருந்தது. ஸ்ரீகளவருக்கு, தாசரால் சாபம் பெற்றிருந்த வீட்டினரின் முன்பாகத்தில் ஒரு கொட்டடையில் தங்குவதற்கு ஏற்பாடு ஆகியிருந்தது. இரவு பூஜை, உபஹாராதிகள் முடிந்தன. அது குளிர் காலம். கடும் மழை. அதனால் குளிர் இரு மடங்காக இருந்தது. அனைவரும் எதுவும் பேசாமல் ஓய்வு எடுத்தனர்.

அடுத்த நாள் காலை 6.00 மணி. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருடன் படுத்திருந்த ஸ்ரீகோவிந்தண்ண கண் விழித்தார். ஸ்ரீகளவரின் சன்னிதிக்குச் சென்று அவரை வணங்கினார். அப்போது ஸ்ரீகளவர் 'இரவில் ஒரு கனவு. அதில் ஸ்ரீகோபாலதாசரின் தரிசனம். அவர் சுமார் 40 வயதானவர். கிராமத்தின் வெளியே இருந்த தம் சன்னிதான (பூஜ்ய ஸ்ரீகோபாலதாசர், தம் தேகத்தை விட்ட இடம். அவரே மறுபடி பிறந்து வந்து தமது அஸ்திகளை கங்கையில் கரைக்கிறார்) தரிசனம் செய்யுங்கள்' என்றார். சரி என்று கூறி, மறுபடி நமஸ்கரித்து திரும்பி வந்தார் கோவிந்தண்ணா.

பின், ஸ்னானங்கள் முடிந்தன. அந்த சமுதாயக்கூடத்தில் சம்ஸ்தான பூஜை நடைபெற்றது. சம்ஸ்தான தேவரின் பீடத்தின் அருகில், ஸ்ரீகோபாலதாசர் கரார்ச்சித பிரதிமா, சாலிகிராமங்களை வைத்து, பண்டிதர், கலகலி ஸ்ரீமுரளிதராசார்யர் பூஜை செய்தார். சம்ஸ்தான பூஜை சிறப்புடன் நடைபெற்றது. ஸ்ரீகளவர் தாஸவர்யர் கரார்ச்சித பிரதிமா சாலிகிராமங்களைப் பார்த்து, தொட்டு மகிழ்ந்தார். ஹயக்ரீவ சாலிகிராமமோ அற்புதமாக இருந்தது. அதில் இருந்த சக்ர, ரேகைகளைப் பார்த்து வியந்தார். அங்கும் பழ சமர்ப்பணை நடந்தன. பிறகு, தாசரின் வீட்டின் ஒரு புறத்தில், ஸ்ரீகளவரின் பிக்ஷை நடந்தது. மற்றவர்களின் பிரஸாத ஸ்வீகாரமும் நடந்தது.

போஜனத்திற்குப் பிறகு சிறிது ஓய்வு. பின், புறப்படும் ஏற்பாடுகள். அங்கத்திய பக்தர்கள் அனைவருக்கும் பல-மந்திராட்சதை வழங்கினார். அங்கத்திய ஸ்ரீவெங்கடேஷ ஸ்வாமியின் தரிசனம் செய்தார். அந்த சன்னிதியே ஸ்ரீஜகன்னாததாசருக்கு ஆயுள் தானம் வழங்கிய சன்னிதி என்பதை கேட்ட ஸ்ரீகளவர், மெய்சிலிர்த்தார். மகிழ்ந்தார். ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

## தாசரின் ஆணைப்படி சன்னிதி தரிசனம்

உத்தனூரிலிருந்து புறப்பட தயார் ஆனோம். அப்போது ஸ்ரீகளவரின் ஆணை 'தாசரின் சன்னிதி தரிசனம் செய்து கொண்டே அனைவரும் முன் செல்வோம்' என்றார். அனைவரும் தத்தம் வாகனத்தில் புறப்பட்டார்கள். அந்த கிராமத்தின் வெளியில் சாலையில் அருகில் ஒரு பாழும் கிணறு. (இப்போது அதனை நன்றாக கட்டியிருக்கிறார்கள். சுற்றுப்புறச் சுவர், சுற்றி வேலி, இறங்குவதற்கு படிக்கட்டுகள் என உள்ளது). அந்த சமயத்தில் அதனை கிணறு என்றே கண்டுபிடிக்க முடியாததாக இருந்தது. ஏனெனில், சுற்றிலும் மரம், செடி, கொடிகள். அங்கு விழுந்து வணங்குவதே அஸாத்தியம். அனைவரும் நின்றவாறே அந்த கிணற்றை பார்த்தவாறு வணங்கினர். ஸ்ரீகளவர் மட்டும், முள், கல் என்று பார்க்காமல், அங்கேயே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். அவருக்கு மட்டும் ஏனோ, எந்த தொந்தரவும் ஆகவில்லை. பிறகு, அங்கு இருந்தவர்களில் சிலர் முள், கல் ஆகியவற்றை புறம் தள்ளி நமஸ்கரிக்க முயன்றனர்.

அந்த கிணற்றின் மிருத்திகை மிகவும் சிறப்பு வாய்ந்தது. அங்கு மட்டும் அதனை தலையில் தரிக்கமுடியுமே தவிர, அதனை வெளியே எடுத்துச் செல்ல முடியாது. அந்த இடத்தில் இருந்தவர்கள், ஏற்கனவே அதைப் பற்றி சில கதைகளை சொல்லியிருந்தனர். அப்படியே எடுத்துச் சென்றவர்கள் பல கஷ்டங்களை அனுபவித்தார்களாம். ஆகவே, நம்முடன் வந்திருந்தவர்கள் அப்படி எதுவும் செய்யவில்லை. பூஜ்ய ஸ்ரீகளவரும் அங்கேயே மிருத்திகையை சிரத்தையுடன் தரித்துக் கொண்டார். மற்றவர்களையும் அருளினார்.

## காயத்ரிஜப புண்ய நிதி, பத்திரமாக சம்புடத்தில் இருக்கட்டும்

அங்கிருந்து அருகில் இருந்த சங்காபுரத்திற்கு போக தீர்மானித்தனர். அது ஸ்ரீகோபாலதாசர் காயத்ரி அனுஷ்டானம் செய்து ஸித்தி அடைந்த சன்னிதி. அங்கு ஒரு ஸ்ரீமுக்யபிராண தேவரின் சிறிய ஆலயம் இருந்தது. அந்த முக்யபிராண தேவர், தாஸார்யரின் காயத்ரி அனுஷ்டானத்திற்கு சாட்சியாக இருக்கிறார். ஆகையால், ‘காயத்ரி முக்யபிராண’ என்றே அவர் பெயர். ஸ்ரீகளவரின் வாகனம் மற்றும் பிறரின் வாகனங்கள் அந்த இடத்தை நோக்கி விரைந்தன.

ஆனால், அந்த கிராமத்தவர்கள் சீக்கிரம் வரவில்லை. மழை இருந்ததால் அவர்களுக்கு பிரச்னை ஏற்பட்டது. அதுவரை, ஸ்ரீகளவர் பிராணதேவரின ஆலயத்தில் அமர்ந்திருந்தார். அங்கேயே ஸ்ரீகோபாலதாசர், காயத்ரி ஜபம் செய்த இடம். மொத்தம் 48 லட்சம். அதற்காகவே, தாசருக்கு அற்புத வாக்-ஸித்தி கிடைத்தது. அந்த மகிமையை நினைத்து வியந்தார் ஸ்ரீகளவர். அப்படியே, காயத்ரி மகிமையை விரிவாகக் கூறினார்.

நற்புத்தி கிடைப்பதற்காக இருக்கும் திவ்ய பிரார்த்தனை அது. உபநயன சம்ஸ்காரத்தைப் பெற்ற அதிகாரிகள் தவறாமல் காயத்ரி ஜபம் செய்ய வேண்டும். இந்த காலத்தில் சந்த்யாவந்தனம் (காயத்ரி ஜபம்) செய்பவர்களே மிகக்குறைவு. அதனை செய்பவர்களில் சிலர், காலையில் மட்டும் செய்கின்றனர். பலர் மாலை சந்த்யாவை, காலையில் செய்கின்றனர். இது இரண்டுமே தவறு. காலையின் ஜபம், சம்புடத்தின் கீழ் பாகம் இருப்பதைப் போன்றது. மாலையின் ஜபம் அதன் மூடி போன்றது. மதியம் செய்யும் சந்தியாவந்தனம், புண்ய ரூப நிதியாகும். அந்தந்த நாளின் அந்த நிதியை சந்த்யா சம்புடத்தில் பத்திரமாக வைக்க வேண்டும். காலை நேரத்து மற்றும் மாலை நேரத்து காயத்ரி ஜபமும் புண்யரூப நிதிகளே. புண்ணிய சம்புடத்தில் தேவதா ஆராதனாதி புண்ய நிதியை பத்திரமாக வைத்து புண்யவந்தர் ஆகவேண்டும்.

அந்த சமயத்தில் அனைவரும் வந்து சேர்ந்தனர். பூஜ்ய ஸ்ரீகளவர் மூலமாக காயத்ரி மகிமையை கேட்பது நமது பாக்கியம். அது கிடைக்கவில்லை என்று வருத்தப்பட்டனர். அது ஸித்தி க்ஷேத்திரம். ஸ்ரீகளவர், முக்யபிராணதேவருக்கு ஆரத்தி காட்டி சாஷ்டாங்கமாக வணங்கினார். விசேஷமாக பிரார்த்தனை செய்து, அனைவருக்கும் மந்திராட்சதை அருளினார்.

## மொதலகல்லு சேஷதாசர்

சங்காபுரத்திலிருந்து ஐஜி வழியாக மொதலகல்லு க்ஷேத்திரத்திற்கு வந்தனர். இந்த க்ஷேத்திரம் புராண பிரஸித்தி. பழங்காலத்தில் இது ஆதிஷிலா க்ஷேத்திரம் எனப்பட்டது. திருமல க்ஷேத்திரத்தில் ஸ்ரீனிவாஸன் வைகுண்டத்தை விட்டு வந்து சாட்சாத்தாக நின்ற இடம். அதற்கும் முன்பு, ஆதிஷிலா க்ஷேத்திரத்தில் ஸ்வயம் ஆவிர்பூதமாக வந்து நின்றான். ஆகவே இது ஆதிஷிலா க்ஷேத்திரம். ஸ்ரீசேஷதாசர் (ஸ்ரீகுருவிஜய விட்டலர்) விசேஷ தவம் செய்த சன்னிதி. அவருடைய பக்திக்கு மெச்சி, பாகிரதி ஸ்ரீனிவாஸதேவரின் பாதத்திலிருந்து தோன்றி, பிரவாகம் செய்தாள். தாஸார்யர், சிந்தரவேலியிலும் ஸ்ரீவியாஸராஜ குருசார்வபௌமர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீபிராணதேவரை விசேஷமாக வணங்கி, தன்யர் ஆனார்.

ஸ்ரீகளவர் அங்கத்திய பக்தர்கள் மூலமாக மஹாத்ம்ய ஸ்ரவணம் செய்து மகிழ்ந்தார். தேவரை சாஷ்டாங்கமாக வணங்கினார். நிர்மால்யத்தை பிரஸாத ரூபேண ஏற்றார். அங்கிருந்து ஸ்ரீசேஷதாசரின் கட்டெக்கு (பூஜ்ய சன்னிதானம்) வந்தார். ஹரிதாச சாகித்யத்தில்

ஸ்ரீசேஷதாசரின் இடம் மிகச் சிறந்தது. பதபத்ய சுளாதிகளின் மூலம் சாகித்யத்தை வளர்த்தவர் இவர். குருவிஜய விட்டல அங்கிதத்தைக் கொண்ட ஸ்ரீசேஷதாசரின் கிருதிகள் பிரமேயங்கள் நிறைந்தது. உபநிஷத், பாகவத மற்றும் கீதையில் சொல்லப்பட்ட பிரமேயங்களை, பேசு மொழியில் இயற்றியவர் தாசர். அவற்றில் ஸ்வ-அனுபவ ரூப கிருதிகள் அனேகம்.

இன்னொரு அற்புதம் என்னவென்றால், பூஜ்யர் தாம் 'பார்த்தன்' என்று தமது கிருதிகளில் சொல்லிக் கொண்டது. யதி பரம்பரையில் ஸ்ரீவாதிராஜர் வ்ருந்தாவன பிரவேசத்திற்குப் பிறகு தம் ஸ்வரூபத்தை விப்ரர் ஒருவர் மூலமாக கூறினார். அதைப் போலவே, ஸ்ரீசேஷதாசரும், தம் ஸ்வரூபத்தை தெளிவாக கூறிக்கொண்டவர். அந்த எழுதப்பட்ட கிருதிகளை சுவற்றில் மறைத்து வைத்தார். தம் காலத்திற்குப் பிறகு, அவற்றை பார்க்க வேண்டும் என்று ஆணையிட்டார். பூஜ்யரின் மறைவுக்குப்பிறகு, அந்த கிருதிகளை எடுத்து பார்த்தபோது, தாமே 'பார்த்தன்' என்றும், ஸ்ரீகிருஷ்ணன் தனது ஸகா என்றும் எழுதியிருந்தார். வாலியாக ஸ்வாமியிடமிருந்து தூரமாக இருந்தேன். அர்ஜுனனாக ஸ்ரீகிருஷ்ணனின் அருள் பெற்றேன். அடுத்து யதியாகி (ஸ்ரீமத் டீகாராயராகி) சேவை செய்தான் என்று சொல்லியிருக்கிறார்.

ஸ்வரூப மஹிமா அறிந்த ஸ்ரீகளவர், சன்னிதியை வணங்கினார். அங்கிருந்து தரூரு கிராமத்திற்கு வந்தார். அங்கி ஸ்ரீசேஷதாசரின் வீடு. அங்கு தாசர் பிரதிஷ்டை செய்த அழகான ஸ்ரீபார்த்தசாரதி விக்ரகம். மிகவும் மகிழ்ச்சியுடன் தரிசனம் செய்தார் ஸ்ரீகளவர். சன்னிதிக்கு ஆரத்தி செய்தார். சரணாகதராகி வணங்கினார். தாம்கூட ஹரிதாசார்யரின் கிருதி ரத்னங்களை அத்யயனம் செய்ய வேண்டும் என்னும் ஆசை, ஸ்ரீகளவரின் முகத்திலிருந்து வெளிவந்தது.

## ஸ்ரீகளவரின் சயனிக்கும் நிலை

தரூரிலிருந்து புறப்பட்டு சிந்தரவேலிக்கு போகும் வழியில், கத்வால்குச் சென்று அங்கி இரவு பூஜை என்று நிச்சயம் ஆகியிருந்தது. வாகனத்தில் செல்லும்போது, ஸ்ரீசேஷதாசரின் மகிமையின் மனனம் ஆயிற்று. ஞானிகள் தம் ஸ்வரூபத்தை, ஸ்ரீஹரியின் ஆணைப்படி மற்றும் தமக்கு இஷ்டப்பட்ட ரீதியில் தெரிவிக்கலாம். குறிப்பிடலாம். ஸ்ரீவாதிராஜருக்குப் பிறகு, ஸ்ரீசேஷதாசரின் ஸ்வரூப மகிமையை வெளிப்படுத்தியது சரியான உதாரணமாக இருக்கிறது. அதற்காகவோ என்னவோ, வித்வத் பிரபஞ்சம், ஸ்ரீராஜரின் விஷயத்தில் இருப்பதைப் போல, ஸ்ரீசேஷதாசரின் விஷயத்திலும் உதாசீனம் காட்டியது. இவ்வாறு அனேக அபிப்பிராயங்களை வெளிப்படுத்தினார் ஸ்ரீகளவர்.

கத்வால் வந்து சேர்ந்தோம். அங்கு டி. மதனமோகன் என்னும் பக்தரின் வீட்டில் இரவு பூஜைகள் ஆயிற்று. அது ஒரு சிறிய வீடு. ஆனால் அந்த பக்தரின் மனது மிகப்பெரியது. குடும்பத்தவர் அனைவரும் நான் முந்தி, நீ முந்தி என்று தமது சேவையை செய்தனர். வேண்டிய நேரத்தில் தேவையான பொருட்கள் கிடைத்தன. இரவு கால பூஜைக்கு, அதிலும் ஸ்ரீபூதராஜரின் பூஜைக்கு பக்தரின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. பக்தர்களின் ஒரு வரிசையில் வந்து, தரிசனம் பெற்றனர். பிரஸாதம் ஏற்றுக்கொண்டு தன்யர் ஆயினர்.

ஸ்ரீகளவரின் ஓய்வுக்கு ஒரு சிறிய கொட்டகை ஏற்பாடு ஆகியிருந்தது. அதற்கு கதவே இருக்கவில்லை. நடுவில் ஒரு படுக்கை. அதில் ஸ்ரீகளவர் ஓய்வெடுத்தார். அவருடைய அருகில், கீழே கோவிந்தண்ணா. ஏகப்பட்ட கொசுத் தொல்லை. அதனால், எனக்கு தூக்கமே வரவில்லை. தீபம் அணைப்பதற்கு இல்லை. அணைத்தால் கொசுக்களின் தொல்லை. தூக்கமே இல்லாமல் அப்படியே படுத்திருந்தோம். ஸ்ரீகளவரை பார்த்தால் அவர் இரு கைகளை கூப்பிய வண்ணம் படுத்திருந்தார். இரவில் பல முறை எழுந்து பார்த்தபோதும், அவர் அந்த விதத்திலேயே படுத்திருந்தார். நம் போன்றோர் படுக்கும்போது, பல முறை இப்படியும் அப்படியும் புரண்டு படுப்பது வழக்கம். ஆனால், சுமார் ஐந்து மணி நேரம் வரை, ஸ்ரீகளவர் படுத்திருந்த நிலை மாறவேயில்லை. அதிலும் அந்த கை கூப்பிய நிலை மாறவேயில்லை.

காலையில் ஸ்ரீகளவர் சீக்கிரமாக எழுந்தார். நானும் எழுந்து அவரை வணங்கினேன். ஸ்ரீகளவர் புன்னகையுடனே இருந்தார். பிறகு இந்த விஷயத்தை அனைவரிடமும் கூறினேன். அனைவரும் வியந்தனர்.

## சாணைக்கல்லின் அரிசியை ஏற்றுக் கொண்டார்

ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், பள்ளாரிக்கு வந்தார். அங்கத்திய நிகழ்ச்சிக்குப் பிறகு, மானவி தாசரின் தரிசனம் செய்ய விரும்பினார். முதலில் ஸ்ரீவிஜயதாசரின் பிறப்பு இடமான சீகலபரவிக்கு சென்று, அங்கிருந்து மானவிக்கு வருவதாக நினைத்தார். பள்ளாரியில் பிக்ஷையை வேகமாக முடித்து, சீகலபரவிக்கு புறப்பட்டார்கள். மதியம் 3 மணிக்கு சென்று சேர்ந்தனர். முதலில் ஸ்ரீபாதராஜர் நட்ட அஷ்வத்த வ்ருக்ஷ மற்றும் ஸ்ரீ நரசிம்ம தேவரின் அருகில் பாயும் துங்கபத்ரா நதிக்குச் சென்று, ப்ரக்ஷாலனம், ப்ரோக்ஷணம் ஆயிற்று. பிறகு, நரசிம்மதேவனின் தரிசனம். ஸ்ரீவிஜயதாசர் காசியிலிருந்து கொண்டு வந்து வைத்த ருத்ரதேவரின் தரிசனம். அங்கு 10 நிமிட ஓய்வு. ஸ்ரீவிஜயதாசர் இயற்றிய நரசிம்ம சுளாதியை பக்தர்கள் பாடினர். பிறகு, ஸ்ரீவிஜய கவசத்தை பாடியவாறு, படிக்கட்டுகள் ஏறி, தாசரின் பிறப்பு இடத்திற்கு வந்தனர். முதலில் ஸ்ரீகளவர் நமஸ்காரம் செய்தார். பிறகு அனைவரும் சாஷ்டாங்கமாக வணங்கினர். அந்த இடத்தில் ஒரு சாணைக்கல் இருந்தது. ஸ்ரீதாசர் காசியிலிருந்து கொண்டு வந்தது அது. பூஜ்ய தாசரின் கை பட்டது என்பதால் அதுவும் மகிமை பொருந்தியதே. அந்த சாணைக்கல்லின் மேல் அரிசி போட்டு எடுத்துக் கொள்ள வேண்டும். அந்த அரிசியினால் செய்யப்பட்ட அன்னத்தை உண்டால், தேக சம்பந்தப்பட்ட நோய் நொடிகள் அனைத்தும் பரிகாரம் ஆகிறது என்பது நம்பிக்கை. இது கற்பனை அல்ல. அன்றிலிருந்து ஆயிரக்கணக்கான பக்தர்கள் பலன்களைக் கண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீகளவரும் சாணைக்கல்லின் மேல் அரிசி போட்டு எடுத்துக் கொண்டார். அப்போது அவர் கூறிய வாக்கு. ‘அவ்வப்போது நமக்கும் வயிற்று வலி வருகிறது. இது அருள் பொருந்திய பிரசாதம் ஆகும்’. தினமும் ஆராத்யதேவரின் பிரஸாதம் ஏற்றுக்கொள்ளும் ஸாதுவர்யர் ஸ்ரீகளவர். ஆனாலும் ஸ்வோத்தமரின் சன்னிதியின் மகிமையை ஏற்றுக்கொணடது அபூர்வமான விஷயம். இதுதானே நிஜமான பாகவத தர்மம். ஸ்ரீகளவரின் தன்ய பாவம் மிக அதிகமானது.

அங்கு அருகில் இருந்த ஸ்ரீமோகனதாசரின் அபம்ருத்யு பரிகாரம் ஆன இடத்திற்கு வந்தார். ஸ்ரீமோகனதாசர் ஸ்ரீவிஜயதாசரின் வளர்ப்பு மகன். தம் அபரோக்ஷ பலத்தினால், ஸ்ரீமோகனதாசருக்கு வரவிருந்த துர்மரணத்தை பரிகரித்தார் ஸ்ரீவிஜயதாசர். தாம் சுற்றுப்பயணத்தில் இருந்தபோது இந்த சம்பவம் நடக்கப் போகிறது. அப்போது தம்மை நினையுங்கள் என்று மருமகளுக்கு கூறினார். அப்படியே அந்த நாளும் வந்தது. ஸ்ரீமோகனதாசருக்கு துர்மரணம் வந்தது. மனைவி, ஸ்ரீவிஜயதாசரின் ஸ்மரணையை செய்தார். செய்யவேண்டிய தேக சம்ஸ்காரத்தை நிறுத்தினார். அணிமாதி ஸித்திகளைக் கொண்டிருந்த தாஸார்யர், அந்த நொடியிலேயே தரிசனம் அளித்து, எமலோகத்திற்கு சென்று, எமதூதர்களால் ஆன தவறினை சரிப்படுத்தி, மரணத்தை பரிகரித்தார்.

அந்த அற்புத மகிமையை கவனமாகக் கேட்டார் ஸ்ரீகளவர். அந்த சமயத்தில் அவர் கூறியது. ‘முமுக்ஷு சமூகத்திற்கு ஸ்ரீவிஜயதாசர் செய்த உதவி பல விதம். அவருடைய ஸ்மரணையானது, நம் செயல்கள் தடையின்றி நடப்பதற்கும், நினைத்தவை நிறைவேறுவதற்கும் முக்கிய காரணம் என்பதில் சந்தேகம் இல்லை. ஞான மற்றும் ஸித்தியின் சங்கமம் ஸ்ரீவிஜயதாசர்’. அங்கும் ஸ்ரீவிஜயதாசரை கொண்டாடி, வணங்கினார். அங்கிருந்து ஸ்ரீகளவருடன் மானவி க்ஷேத்திரத்திற்கு புறப்பட்டோம்.

## கம்பத்திலிருந்து சலங்கை ஒலி

மானவியில் நுழைகையில் முதலில், ஸ்ரீ நாராயண தீர்த்தரின் ஆசிரமத்திற்கு வந்தோம். பெரிய இடம். சிறியதான பிருந்தாவன சன்னிதானம். பக்கத்தில் ஸ்வயம்வ்யக்த முக்யபிராண தேவரின் சன்னிதி. ஸ்ரீ நாராயண தீர்த்தர் முதலில் மிலிட்டரியில் பணி புரிந்து பின்னர் வைராக்கியம் பெற்று, ஸ்ரீஆர்ய அக்ஷோப்ய தீர்த்த மடாதீசரான ஸ்ரீரகுவீர தீர்த்தரிடமிருந்து சன்யாச ஆசிரமம் ஏற்றுக் கொண்டவர். தம்மிடம் இருக்கும் அனைத்தையும் தானம் கொடுக்கும் சிந்தனை அவருடையது. இரவு படுக்கும்போது அவரிடம் இருப்பது தேவபெட்டி மற்றும் மந்திராட்சதை தட்டு மட்டுமே. ஒரு வேளை 10 பைசா இருந்தால்கூட அதனையும் தானம் அளித்துவிட்டு படுக்கும் வழக்கம்.

ஸ ரக்ஷிதா ரக்ஷதி யோ ஹி கர்ப்பே - என்பது அவருடைய தீக்ஷை. இது பாகவத தர்மத்தின் பழக்கம். பூஜ்யரின் வ்ருந்தாவன பிரவேசத்திற்கு பிறகு, ஒரு ஆண்டிற்குப் பிறகு, கலாகர்ஷன செய்தபோதும், அவருடைய தேஜஸ் குறையவில்லை. கூந்தல் உதிர்ந்திருக்கவில்லை. துளஸி வாடியிருக்கவில்லை (இவற்றை கண்ணாரக் கண்டவர்கள் இன்னும் இருக்கிறார்கள்). அங்கு இருந்த படத்தைப் பார்த்து ஸ்ரீகளவர் வியந்தார். இரவு கால பூஜை மற்றும் ஸ்ரீபூதராஜரின் பூஜாதிகள் சிறப்பாக நடந்து முடிந்தன. ஆயிரக்கணக்கான பக்தர்கள் திரண்டிருந்தனர். அடுத்த நாள், காலத்தில் சம்ஸ்தான பூஜைகள் நடந்து சந்தர்ப்பணங்கள் நடந்து முடிந்தன.

அங்கிருந்து ஸ்ரீஜகன்னாத தாசரின் சன்னிதிக்கு புறப்பட்டு, வழியில் ஸ்ரீவெங்கடேஷ ஸ்வாமியின் தரிசனம் செய்தார். பிறகு தாசரின் இடத்தில் நுழையும்போது, ஸ்ரீகளவரை பூர்ணகும்பத்துடன் வரவேற்றனர். உள்ளே நுழைந்து, கம்பத்தில் இருந்த தாசார்யரின் சன்னிதானத்தைக் கண்டு சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார் ஸ்ரீகளவர். அருகில் இரவு கால பூஜைக்கு தயார் செய்தனர். இன்னொரு பக்கம் சபா நிகழ்ச்சிகள். அங்கத்திய முக்கியஸ்தர்கள் ஸ்ரீகளவரை வரவேற்று மாலை மரியாதைகளை செய்தனர். 'ஸ்ரீராஜரின் சன்னிதானம் இங்கு வந்தது, தாசருக்கு மிகவும் மகிழ்ச்சிக். பரம்பரைக்கும் சன்னிதிக்கும் நித்ய தாத்விக சம்பந்தம் உண்டு. பூஜ்ய ஸ்ரீகளவர் நம் அனைவரையும் அருள வேண்டும்' என்று வேண்டினார்.

தாசரின் குணகானம் செய்யும் வாய்ப்பு எனக்கு வந்தது. 'தாசர் மூலத்தில் ஸஹ்லாதர். முற்பிறவியில் ஸ்ரீஸோதெ மடத்தில் கொண்டப்பராக இருந்து, ஸ்ரீராஜரை சேவை செய்தார். ஸ்ரீராஜரின் அற்புத மகிமையை கண்ட மகாமகிமர். பின், அவரே ஸ்ரீனிவாஸாசார்யராக அவதரித்து, ஸ்ரீவரதேந்திர தீர்த்தரிடம் சாஸ்திர அத்யயன செய்து, வித்வத் சக்ரவர்த்தி ஆனார். நூற்றுக்கணக்கான மக்களுக்கு ஸுதாதி சாஸ்திர கிரந்தங்களை பாடம் எடுத்தார். அப்போது ஒரு முறை ஸ்ரீவிஜயதாசருக்கு செய்த அவமானத்தால் வயிற்றுவலி ஏற்பட்டது. கடைசியில் தாசரையே வேண்டிக்கொள்ள, ஸ்ரீகோபாலதாசரிடம் செல்ல அவர் ஆணையிட்டார். அவரை சந்தித்து, அவரால் பிரார்த்தனை செய்யப்பட்ட தன்வந்தரியின் அருளால், வயிற்றுவலியிலிருந்து விடுபட்டார். அவரிடமிருந்து ஆயுள் தானம் பெற்றார்.

குருவின் ஆணைப்படி பண்டரிபுரத்திற்கு சென்று, சந்திரபாகா நதியில் ஸ்னானம் செய்யும்போது 'ஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். அதே அங்கிதத்தில் பத்ய பத்ய சுளாதிகளை இயற்றினார். ஸ்ரீஹரி குரு க்ஷேத்திரங்களை சஞ்சரித்து, ஸ்தோத்திரம் செய்து தன்யர் ஆனார். ஸ்ரீஜகன்னாததாசரின் மேரு கிருதி ஸ்ரீஹரிகதாம்ருதசாரம். இது அனேக ஞானிகளின் அருளின் பலன். முக்கியமாக பாவிஸமீர ஸ்ரீவாதிராஜருடையது.

** 'ஸ்வாதிராஜேந்திரர ப்ரஸாததிந்த ஹரிகதாம்ருதசார தத்வ ஸாதுஜனரிகாகி ப்ராக்ருத .. வாதிராஜர கோஷகொப்புவ ஹரிகதாம்ருதசார பேளிதரு || (ஸ்ரீதவிட்டலர்).

** பாவிபாரதிபதி வாதிராஜரின் பூரிகோஷக்கெ ஒப்பிஸுதலபார முத படெத | (ஸ்ரீகமலாபதி விட்டலர்).

** குருஜகன்னாத தாசர ஸ்வப்னதொளு பந்து வாதிராஜ | ஹரிகதாம்ருதசார விரசிஸெந்தருஹித வாதிராஜ || (ஷ்யாமசுந்தர தாசர்)

அத்தகைய சிறப்புமிக்க ஸ்ரீவாதிராஜரின் சம்ஸ்தானம் வந்திருக்கிறது. தாசர் மகிழ்ச்சி அடைந்திருக்கிறார் – என்று கூறினேன்.

பூஜ்ய ஸ்ரீகளவர் தம் அருளுரையில் 'பத பத்ய சுளாதி, ஸ்ரீமத் ஹரிகதாம்ருதசார மற்றும் தத்வசுவ்வாலிகளின் மூலம் சாதகருக்கு ஸ்ரீஜகன்னாத தாசர் செய்த உதவி மிகவும் அற்புதமானது. ஸ்ரீவாதிராஜரின் ஏகாந்த பக்தர் தாசார்யர். அவருடைய வாழ்க்கை அனைவருக்கும் ஒரு கண்ணாடி. அவருடைய உபதேசம் தத்வத்தின் சாரம். அவருடைய சேவை இஷ்டார்த்தங்களை அடைவதற்கு ஒரு வழி. அருளுக்காக தாசரை வணங்கி தன்யர் ஆவோம் – என்று கூறினார்.

பிறகு இரவு பூஜாதிகள் சிறப்புடன் நடைபெற்றன. ஸ்ரீகளவர் தாசரின் சன்னிதியில் பல சமர்ப்பண செய்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். ஸ்ரீசத்யபோத தீர்த்தர் அருளிக் கொடுத்த மணையை தொட்டு வணங்கினார். அந்த சமயத்தில் ஆராத்ய தேவரின் பெட்டி கர்ப்பகுடியில் இருந்தது. ஒரு முறை ஸ்ரீகளவருக்கு அந்த சன்னிதியிலிருந்து சலங்கை ஒலி கேட்டது. வியப்படைந்தார். மகிழ்ச்சி ஆயிற்று. இரு நிமிடம் அது கேட்டது. சுற்றி நின்றவர்களுக்கு எதுவும் புரியவில்லை. சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். ஸ்ரீகளவர் அப்போது எதையும் கூறவில்லை. இரவு ஓய்வுக்கு செல்லும் முன்னர் இதனை கூறினார். பிரசாரம் செய்யாதீர்கள் என்றார். இதனை பல நாட்களுக்கு யாரிடமும் கூறவில்லை.

## பூஜை சமயத்தில் ஹரிகதாம்ருதசாரம்

அடுத்த நாள் காலையில் பூஜைகள் துவங்கின. அதற்கு முன், ஸ்ரீகளவர் கூறியது. தாசர்யரின் சன்னிதியான இந்த மானவியில், ஹரிகதாம்ருதசாரத்தை மனப்பாடமாக சொல்பவர்கள் பலர் இருக்கலாம். பூஜை சமயத்தில் அந்த கிருதி ரத்னத்தினை சொல்ல வேண்டும் – என்றார். கேட்டபோது, அங்கேயே பூஜையை பார்க்க அமர்ந்திருந்த ஒருவர் – அவர் பெயர் ஸ்ரீனிவாஸாசார்யர். அவரிடம் சென்று கேட்டேன். அவர் ஸ்வரத்துடன் ஹரிகதாம்ருதசாரத்தை சொல்லத் துவங்கினார். சிறிய வயதினர் ஆனாலும், வெண்கலக் குரல். தினமும் பாராயணம் செய்து பழக்கம். தாசரின் அருளைப் பெற்றவர். ஸ்ரீகளவர் பூஜை செய்யும்போது பல முறை திரும்பி இவரைப் பார்த்தார். பாராயணத்தைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தார். ஆராத்ய தெய்வத்தின் பூஜை ஆனது. முன்னால் இருந்த ஸ்ரீபிராணதேவருக்கு நைவேத்தியம் சமர்ப்பித்தார். தாசரின் சன்னிதியில் 10 நிமிடம் அமர்ந்தார். நைவேத்ய சந்தியின் பாராயணம் முடிந்தது. சன்னிதியில் தீர்த்த ஹஸ்தோதகம் சமர்ப்பணம் செய்தார். ஆரத்தி எடுக்கும்போது ஆராத்ய தெய்வத்தின் பெட்டி அங்கேயே இருந்தது. பிறகு தீர்த்தத்தை கொடுத்தார். அந்த சமயத்தில் பாராயணம் முடிந்திருந்தது.

## கையெழுத்துப் பிரதியில் பக்கங்கள் மாயம்

அனைவருக்கும் தீர்த்தம் கொடுத்தபிறகு, ஸ்ரீகளவருக்கு பாதபூஜை நடந்தது. பலர் குருபாத பூஜை செய்து தன்யர் ஆயினர். அன்று அங்கு அர்ச்சகராக இருந்த ஸ்ரீதீரேந்திராசார்யர், பக்கத்து வீட்டிற்கு வருமாறு அழைப்பு விடுத்தார். அங்கு சென்று, அவரிடமிருந்து பாதபூஜை ஏற்றுக் கொண்டபிறகு, தாசார்யரின் தம்பூரியைக் காட்டி, அதனை ஸ்ரீகளவருக்குக் கொடுத்தார். அதனை ஸ்ரீகளவர் தமது தலையில் வைத்து வணங்கினார். அங்கேயே நின்றிருந்த சிலருக்கு அந்த பாக்கியம் கிடைத்தது. பிறகு, ஸ்ரீதீரேந்திராசார்யர் ஒரு கையெழுத்துப் பிரதியை ஸ்ரீகளவருக்குக் கொடுத்தார். அது ஸ்ரீஜகன்னாத தாசர் இயற்றிய தேவர நாமாக்களின் தொகுப்பு. அதனை எழுதியவர் தாசரின் மக்களான ஸ்ரீதாமோதராசார்யர்.

ஸ்ரீகளவர் மகிழ்ச்சியுடன் அதனை பார்க்கையில், ஒரு இடத்தில் செல் அரித்திருந்தது. அதற்கு முந்தைய பக்கத்தை பார்க்கையில் ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய ஸ்ரீவாதிராஜ ஸ்துதி பதம் அங்கு

துவங்கியிருந்தது. ஆனால், அது முழுமை அடைந்திருக்கவில்லை. அடுத்த ஆறு பக்கங்கள் கிழிக்கப்பட்டிருந்தன. அந்த பக்கங்களில் அந்த பாடலே இருந்திருக்க வேண்டும் என்று தெரிந்தது. இதனைக் கண்ட ஸ்ரீகளவர் கவலை கொண்டார். 'ஸ்ரீஜகன்னாததாசர் சுதாதி கிரந்தங்களை படித்தவர். ஸ்ரீராஜரின் ருஜுத்வ போதகர். அனேக பதங்களை இயற்றியிருக்க வேண்டும். அதனை எதிர்க்கும் நிலையில் இருப்பவரே இந்த வேலையை செய்திருக்க வேண்டும். வேறு எந்த பக்கங்களும் துண்டாகாமல், ஸ்ரீராஜரின் சம்பந்தப்பட்ட பக்கங்கள் மட்டும் இப்படி கிழிக்கப்பட்டுள்ளது. அவருடைய த்வேஷமே இதற்கு காரணம்' என்று கூறினார். அங்கு இருந்த ஸ்ரீதீரேந்திராசார்யர், அந்த விஷயம் தமக்குத் தெரியாது என்றார். உணர்ச்சிவசப்பட்ட ஸ்ரீகளவரின் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. சிறிது நேரம் கழித்து, 'ஸ்ரீராஜரின் சித்தம். ஸ்ரீபூதராஜர் அத்தகையவர்களையெல்லாம் தண்டிப்பது நிச்சயம்' என்று சமாதானம் அடைந்தார்.

## ஸ்ரீவியாஸ விட்டலரின் பிரார்த்தனை

மானவி தாசரின் தரிசனம் ஆனபிறகு, கல்லூர் ஸ்ரீலட்சுமிதேவியின் தரிசனத்திற்காக புறப்பட்டோம். அங்கு சாணைக்கல்லின் மேல் சுயம்புவாக வந்திருக்கும் லட்சுமி இருக்கிறார். உடன், ஸ்ரீவெங்கடேஷ விக்ரகம். அழகான ஈர்க்கும்படியான சன்னிதானம். பல பேர்களின் குலதெய்வம். இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் தாய். அங்கு செய்யும் பிரார்த்தனை பலிக்கிறது. சிறப்பு பண்டிகை நாட்களில் விசேஷ பூஜைகள் அங்கு நடைபெறுகின்றன.

ஸ்ரீவிஷ்வோத்தமர் மற்றும் மற்றவர்கள் சன்னிதிக்கு வந்து தரிசனம் செய்தனர். ஸ்ரீகளவர் சாஷ்டாங்கமாக வணங்கினார். அங்கத்திய அர்ச்சகர் க்ஷேத்திர மகிமையை கூறினார். நூற்றாண்டுகளுக்கு முன் அவருடைய முன்னோரான ஸ்ரீலட்சுமி காந்தாசார்யருக்கு தரிசனம் அளித்த ஸ்ரீலட்சுமிதேவியின் சன்னிதானம் இது. ஸ்ரீனிவாஸதேவர், பிராணதேவர் – அவருடைய வம்சத்தவராலேயே பூஜிக்கப்பட்டதாகும். நாங்கள் சிலர் ஸ்ரீவாதிராஜர் இயற்றிய 'ஸ்ரீஸ்ரீஷகுணதர்பண' பாராயணம் செய்தோம். ஒருவர் ஸ்ரீவியாச விட்டலர் இயற்றிய, ஸ்ரீலட்சுமிதேவியின் பதத்தை பாடினார். இன்னொருவர் அதே தாசரின் ஸ்தோத்திரமான ஒரு பதத்தை பாடினார். அந்த பதத்தின் கடைசி நுடியில் இருந்த நிவேதனை மற்றும் பிரார்த்தனை ஸ்ரீகளவரின் மனதினை ஈர்த்தது. திரும்ப சொல்லுமாறு பணித்தார். அந்த மனிதர் மறுபடி அதனை பாடினார். ஸ்ரீகளவர் ஒருமனதுடன் அதனை கேட்டார். மகிழ்ச்சி அடைந்தார். ஸ்ரீவியாச விட்டலரின் கதையை தெரிந்து கொள்ள விரும்பினார்.

ஸ்ரீவியாசவிட்டலர் அன்றைய காலத்தில் பண்டிதராக இருந்த கல்லூர் ஸ்ரீசுப்பண்ணாசார்யர். அவருக்கு ஹரிதாசர்கள் என்றால் பிடிக்காமல் இருந்தது. ஒரு முறை சுதா மங்கள சந்தர்ப்பம். ஸ்ரீவிஜயதாசர் அங்கு தான் என்று காட்டிக் கொள்ளாமல் வந்திருந்தார். அங்கு மண்டிகெ செய்யும் சமையல்காரர் வரவில்லை. எஜமானனுக்கு கவலை. தாசர் எஜமானனுக்கு அபயம் அளித்து, தாமே தேவையான மண்டிகெ செய்தார். பிறகு சுதா மங்கள அனுவாத செய்யும் இடத்தில் வந்து அமர்ந்தார். மங்கள அனுவாத துவங்கியது. ஒரு கட்டத்தில் நின்றது. ஆசார்யருக்கு அதனை தொடர்ந்து சொல்ல முடியவில்லை. தாசர் தம்முடன் சமையல் செய்த ஒருவரை அழைத்தார். அவனின் தலை மேல் கை வைத்து, 'ஆசார்யரின் அனுவாதத்தை தொடர்ந்து சொல்' என்றார். அந்த சமையல்காரரும் அற்புதமாக விஷயத்தை சொல்லத் துவங்கினார். தாசர் தமது கையை எடுத்தவுடன், அவர் மறுபடி சாதாரணமானவனாக ஆனார். இதனை பார்த்த ஆசார்யருக்கு வியப்பு. ஞானிகளுக்கு அவமரியாதை செய்யக்கூடாது என்று தன் தவறினை உணர்ந்தார். தாசரிடம் வந்தார். பாதங்களில் விழுந்து வணங்கினார். தன்னை மன்னிக்குமாறு வேண்டினார். கருணாமயியான தாசர், ஆசார்யரை ஆதோனிக்கு அனுப்பி, ஸ்ரீவேணுகோபால விட்டல தாசரிடமிருந்து அங்கித உபதேசம் பெறச் செய்தார். அன்றிலிருந்து ஸ்ரீசுப்பண்ணாசார்யர் ஸ்ரீவ்யாசவிட்டலர் என்று புகழ் பெற்றார். தாசரின் இந்த கிருதியின் கடைசி நுடியினை ஸ்ரீகளவர் விரும்பினார். அதனை எழுதிக் கொடுத்தார் அந்த மனிதர். அது இதுவே:

என்னந்த பாபிஷ்டரினில்ல தரெயொளகெ
நின்னந்த கருணி இல்ல ।
சென்னகுரு விஜயராயர நம்பிதவனெந்து
மன்னிஸி ஸலஹபேகு ।
கன்ன ஸம்ஸாரதொளு பவணெ பந்தட்டிதரு
நின்ன ஸ்ம்ருதியொந்து இரலி ।
ஸன்னுதாங்கிய ரமண வ்யாஸவிட்டல மத்வ
முனிகொலிதெ, உடுபிவாஸா ஸ்ரீஷ ।।3

ஸத்யஸங்கல்ப ஸ்வாதந்த்ர்ய ஸர்வேஷ ஸர்வோத்தமனே ஸார்வபௌம ।
ப்ருத்யரிகெ பந்த பரி பரி பயகளனெ களெது
நித்யதலி காய்த ஸ்வாமி ப்ரேமி ।।

பூஜ்ய ஸ்ரீகளவர், அங்கத்திய நிர்மால்யங்களை பிரசாத ரூபத்தில் ஏற்றுக் கொண்டு அனைவருக்கும் பல மந்திராட்சதை வழங்கி அருளினார். அடுத்து, ஹுப்பள்ளி நோக்கி புறப்பட்டார். (ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பள்ளாரிக்கு வந்தபோதெல்லாம் யதிபுங்கவரின் மற்றும் தாசவர்யரின் சன்னிதி தரிசனம் செய்யும் கொண்டவராக தாமாகவே (வரவேற்பு ஆகியவற்றை எதிர்பார்க்காமல்) அந்த பூஜ்ய சன்னிதானங்களின் தரிசனம் பெற்று தன்யர் ஆனார்). பாத்ரர ஸங்கட யாத்ரெய மாடி.. என்னும் தாசார்யரின் வசனத்திற்கேற்ப, ஸ்ரீகளவரின் பின்னால் அவருடன் அனைத்து இடங்களுக்கும் சென்று, அந்தந்த க்ஷேத்திரத்தின் மகிமைகளை கேட்டறிந்து தன்யர் ஆனவர் பலர்.

## கங்காதரரின் சன்னிதியில் கங்கையைக் கண்டார்

ஸ்ரீசத்யதர்ம தீர்த்தர், ஸ்ரீமத் உத்தாரதி மடத்தின் பரம்பரையில் வந்த முனிபுங்கவர். பூஜ்யர், ருத்ராம்சர் என்றே பெயர் பெற்றவர். பூர்வாசிரம மற்றும் துர்யாசிரம காலத்தில் டீகா டிப்பணிகளை இயற்றியவர். ஸ்ரீராஜரின் ஏகாந்த பக்தர். ஸோதெயில் சேவை செய்து, அருள் பெற்றவர். ராஜமகாராஜர்களிடமிருந்து மான்யங்களைப் பெற்றவர். 36 ஆண்டுகள் வேதாந்த சாம்ராஜ்யத்தை ஆண்டவர். ஸ்ரீவாதிராஜரின் வாக்குகளை பின்பற்றியவர். அப்படியே, ஸ்ரீராஜரின் அபிப்ராயத்திற்கு (ராஜஸர்களுக்கும் லிங்கபங்க) ஒப்புக் கொண்டவர். குருகள் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யருக்கு மூத்த சமகாலத்தவர். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரை தம் மடத்திற்கு வரவழைத்து (அன்றைய ஹொளெ நரசிபுர) வியாஸ முஷ்டியின் வைபவ பூஜையை செய்வித்தவர். குருகள், பூஜ்யருக்கு பரம ஆப்தர். ஸ்ரீசத்யதர்ம தீர்த்தரின் வ்ருந்தாவனம் இருப்பது, பத்ரா நதி தீரத்தின் ஹொளெஹொன்னூரில். அவருடைய வ்ருந்தாவனத்தில் ஸ்ரீராஜரின் சன்னிதானம். நித்ய நைவேத்ய சமர்ப்பணம். குருகள், வ்ருந்தாவனாக்யானத்தில் புகழப்பட்ட மஹிமர். அதில் 'மௌத்கல நாரசிம்ம' என்று அழைக்கப்பட்டவர்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு ஸ்ரீசத்ய தர்ம தீர்த்தரின் வ்ருந்தாவன சன்னிதியின் தரிசனம் செய்ய வேண்டும் என்று விருப்பம் இருந்தது. இதனை சேவா ரூபமாக நிறைவேற்றியவர் ஸ்ரீ.S.R. பிரகலாதாச்சார் (தற்போது கோடேஷ்வரத்தில் வசிக்கிறார்). இவர் ஸ்ரீசத்ய தர்ம தீர்த்தரின் சன்னிதியில் பல ஆண்டுகள் சேவை செய்து, அருள் பெற்றவர். மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் ஆப்த பக்தர். ஆசார்யருக்கும், ஸ்ரீகளவரை, ஸ்ரீசத்யதர்ம தீர்த்தரின் சன்னிதிக்கு வரவழைக்க வேண்டும் என்று ஆசை இருந்தது. 1993ம் ஆண்டு. பூஜ்ய ஸ்ரீகளவருக்கு ஆசிரமம் ஆகி 50 ஆண்டுகள் இந்த சம்பந்தமாக, சுவர்ண மஹோத்ஸவத்தின் நிகழ்ச்சிகளை ஹொணெஹொன்னூரில் செய்வதாக தீர்மானித்தார்.

ஸ்ரீகளவரிடம், இதற்காக வேண்டி அனுமதி பெற்றார். ஹொளெஹொன்னூரில் இருந்த அர்ச்சகருக்கு தெரிவித்து, தக்க ஏற்பாட்டினை செய்யத் துவங்கினார். அன்று ஆங்கிரஸ சம்வத்ஸர ஆஷ்விஜ சுத்த த்விதியா (28.9.1992) மாலை கோதூளி சமயம். பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஆராத்ய தெய்வத்துடன், பரிவாரத்துடன் வந்திருந்தார். ஸ்ரீகளவரின் வருகைக்காக அந்த

கிராமமே அலங்கரிக்கப்பட்டிருந்தது. அனைத்து இடங்களிலும் தோரணங்கள், பதாகைகள், ரங்கோலி, வாத்ய, வைபவம், வேதகோஷ, பூர்ணகும்ப, பஜனை, ஜயஜயாகாரங்கள் கேட்டன. ஸ்ரீகளவரை பக்தி மரியாதையுடன் வரவேற்று உபசரித்தனர்.

ஸ்ரீஜனார்த்தன ஸ்வாமி, ஸ்ரீமுக்யபிராணதேவரின் தரிசனம் செய்து, ஸ்ரீசத்யதர்ம தீர்த்தரின் சன்னிதிக்கு வந்தார் ஸ்ரீகளவர். அங்கும் வித்வாம்சர்களின் வேதகோஷம், வாத்ய வைபவம் ஆகியவை நடந்தன. அன்றைய இரவின் பூஜாதிகள் சிறப்பாக நடந்தன. அடுத்த நாள் சம்ஸ்தான பூஜை நடந்தது. அர்ச்சகரான ஸ்ரீசுப்பண்ணாசார்யர் வ்ருந்தாவன ஸன்னிதியின் பூஜாதிகளை கிரமப்படி முடித்தார். ஸ்ரீகளவர் வ்ருந்தாவனத்தை சாஷ்டாங்கமாக வணங்கினார். மூன்று முறை பிரதட்சிணம் செய்தார். தீர்த்தம் கொடுக்கப்பட்டது. ஸ்ரீபிரகலாதாசாரின் உறவினர்கள், ஸ்ரீகளவருக்கு பாதபூஜை செய்தனர். பட்டுத்துணி சமர்ப்பிக்கப்பட்டது. பிறகு, ஸோதெயில் ஆராத்ய தெய்வத்திற்கு மற்றும் ஸ்ரீராஜருக்கு அபிஷேகம் செய்த மற்றும் ஸ்ரீசத்ய தர்ம தீர்த்தரின் வ்ருந்தாவனத்திற்கும் அபிஷேகத்திற்காக சமர்ப்பணம் செய்த, தங்க லட்சுமி நாணயங்களால், ஸ்ரீகளவருக்கு சுவர்ண அபிஷேகம் செய்து, தன்யர் ஆயினர்.

பிறகு, துலாபார சேவையும் நடந்தது. பிறகு, ஸ்ரீகளவரின் பிக்ஷை, பிராமண ஸந்தர்ப்பணம், சிறப்புடன் நடந்தன. மதிய ஓய்வுக்குப் பிறகு, மாலையில் ஸ்ரீசத்ய தர்ம தீர்த்தரின் மகிமை விளக்கம் மற்றும் ஸ்ரீகளவரின் சுவர்ணோத்ஸவத்தைப் பற்றி சொல்லப்பட்டது. மாலையில் பூஜை நிறைவேற்றி, ஸ்ரீகளவர் குருகளின் வ்ருந்தாவனத்தின் முன்பாகத்தின் படிக்கட்டின் மேல் நின்று, கைகுவித்து தீர்த்த பிரபந்தத்தின் கங்காஷ்டகத்தை படித்தார். அர்ச்சகர் உள்ளே நின்று ஆரத்தி காட்டினார். அப்போது, குருகளின் வ்ருந்தாவனத்தின் மேல் தண்ணீர் சொட்டத் துவங்கியது. அனைவருக்கும் ஆச்சரியம். அர்ச்சகர் முதலாக அனைவரும் அதனை பார்த்தனர். நானும் ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவர்களுடன் முன் நின்று பார்த்தேன். அது மழைத் தண்ணீர் அல்ல. காரணம் அன்று மழையே பெய்யவில்லை. அது இரவு நேரம் ஆனதால், மதிய பூஜை சம்பந்தப்பட்ட அபிஷேக நீரும் அல்ல. ஸ்ரீகளவர் சொல்லிக் கொண்டிருந்த ருஜுபுங்கவ ஸ்ரீவாதிராஜரின் மந்திர துல்ய வாணி. அந்த மந்திரத்திற்கு ஈர்க்கப்பட்டு வந்து, தரிசனம் அளித்தாள் பாகிரதி. அதுவும் கூட கங்காதரரே ஆன ஸ்ரீசத்யதர்ம தீர்த்தரின் வ்ருந்தாவனத்தின் மேல். அந்த சன்னிதியில் கங்காஜல தாரை இருந்தது என்பது வரலாறு. ஆனால், நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே அது நின்றிருந்தது என்பதும் வரலாறு.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் தவம், சாதனை மற்றும் மனப்பூர்வமான சரணாகதிக்கு மற்றும் ஸ்ரீராஜரின் கங்காஷ்டகத்திற்கு மகிழ்ந்த ஸ்ரீசத்ய தர்ம தீர்த்தர் தாமாகவே மகிமை காட்டி அருளினார். ஸ்ரீகளவர் மகிழ்ந்தார். கருணைக் கடாக்ஷத்திற்கு தலை வணங்கினார். ஆனந்தக் கண்ணீர் சகஜமாக உருண்டோடின. திரும்பத்திரும்ப பாகீரதி தரிசனம் செய்து தன்யர் ஆனார். மற்றவர்களும் தரிசனம் செய்து மகிழ்ந்தனர். பிறகு, சில நாட்களுக்குப் பிறகு, ஸ்ரீகளவர் ஸ்ரீபிரகலாதாசார்யருக்கு கடிதம் எழுதி 'நம் வாழ்க்கையின் சாதனையின் பலனை, ஸ்ரீராஜரின் கருணையால், ஸ்ரீசத்யதர்ம தீர்த்தரின் சன்னிதியில் கண்டு அனுபவித்தோம். அதற்கு உங்களின் சேவை மிகப்பெரிய உதவியாக இருந்தது' என்று அருளினார்.

## ஹொன்னாளி ஸ்ரீராயரின் தரிசனம்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் சர்வக்ஞ பீடத்தில் 60ம் ஆண்டு துவக்கம் (2002). பூஜ்யரின் ஷஷ்ட்யப்தி உத்ஸவத்தை கொண்டாட வேண்டும் என்று ஸ்ரீ. S.R. பிரகலாதாசர்யருக்கு விருப்பம். சமான மனதுடைய ஸ்ரீராஜரின் பக்தர்களுடன் சேர்ந்து, உற்சவத்தை கொண்டாடும் தீர்மானம் செய்தார். இரண்டாம் மந்திராலயம் என்று புகழ் பெற்ற ஹொன்னாளியில் அதனை கொண்டாட வேண்டும் என்று நினைத்தனர். ஸ்ரீகளவரிடம் கேட்டு தேதியை முடிவு செய்தார். அதில் விசேஷம் என்னவெனில், ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரின் வித்யாசிஷ்யரான கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் திவ்ய தலைமையில், 2002 அக்டோபர் 9ம் தேதி நிகழ்ச்சி நடந்தது. அதற்கு முந்தைய நாள் மாலையில் இரு ஸ்ரீகளவரின் வருகை. ஸ்ரீகளவரை வரவேற்கும் ஏற்பாடு தடபுடலாக நடந்தன. வாத்தியம், வேதகோஷம், பஜனை, புஷ்பவ்ருஷ்டி என

அனைத்தும் சிறப்புடன் நடந்தன. இரு ஸ்ரீகளவரின் ஷோபா யாத்திரை துவங்கியது. முதலில் ஸ்ரீசர்வக்ஞாசார்யரின் மந்திர பிரவேசம். ஆசார்ய மத்வரின் சன்னிதி (பிரதிமை) தரிசனம்.

அங்கத்திய மகிமைகளை கேட்டவாறு, இருவருக்கும் வியப்பு. சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர். ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மடத்தின் பிரவேச த்வாரத்தில் புஷ்பவ்ருஷ்டி வேத கோஷங்களுடன் அற்புத வரவேற்பு நடந்தது. இரு ஸ்ரீகளவரும் ஸ்ரீராயரின் வ்ருந்தாவன தரிசனம் செய்தனர். அங்கத்திய சன்னிதானத்தின் சிறப்பினை கேட்டு மகிழ்ந்தனர். பிறகு, சபா நிகழ்ச்சிகள் துவக்கம். வரவேற்பு, காணிக்கை சமர்ப்பணம் ஆகியவை ஸ்ரீபிரகலாதாசார்யர் மூலமாக நடந்தன. அந்த இடத்தின் வித்வாம்சரான ஸ்ரீகிருஷ்ணாசார்யர், தமது வரவேற்புரையில், துங்கபத்ரா தீரத்தின் அந்த க்ஷேத்திரத்தின் மகிமையை அழகாக விளக்கினார்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் – 'ஹொன்னாளியின் ஸ்ரீஸர்வக்ஞாசார்யரின் மற்றும் ஸ்ரீராயரின் சன்னிதி சிறப்பானது. அந்த சிறப்பினை கேட்டு மெய் சிலிர்க்கிறது. இந்த உற்சவ காரணத்தினால் அனைவரும் சேர்ந்து இந்த தரிசனம் செய்வதற்கு நல்வாய்ப்பு கொடுத்திருக்கிறீர்கள். நீங்கள் அனைவரும் காட்டும் தூய்மையான பக்திக்கு ஸ்ரீஹரி குருகள் மகிழ்ந்து அருளட்டும்' என்று கூறினார். பிறகு கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்தர் 'குருகளுடன் இந்த புண்ணிய சன்னிதிக்கு வந்திருப்பது மிகவும் மகிழ்ச்சி அளிக்கிறது. நதி தீரத்தின் இந்த புண்ய இடம் அருமை. ஷஷ்ட்யப்தி உற்சவம் இங்கு நடப்பது மிகவும் விசேஷமானது. ஸ்ரீபிரகலாதாசார்யர் மற்றும் மற்றவர் சேர்ந்து குருகளின் ஷஷ்ட்யப்தி உற்சவத்தில் பங்குபெறுவதற்கு வாய்ப்பு கொடுத்தீர்கள். ஸ்ரீராஜரின் பக்தரான நீங்கள், ஸ்ரீராஜரின் சலபிரதிமராக இருக்கும் குருகளில் காட்டும் சிரத்தை பக்திகள் மிகவும் அற்புதம். இவை அனைத்தும் ஸ்ரீஹரி குருகளை மகிழ்விப்பதான செயல் ஆகும். நாம் இங்கு உற்சவத்தில் பங்கு கொண்டது நம் பாக்கியம் என்று நினைக்கிறோம். அனைவருக்கும் ஸ்ரீஹரிவாயு குருகள் அருள் கிடைக்கட்டும்' என்றார்.

பிறகு இரவு காலத்தின் பூஜை ஆகியவை வைபவத்துடன் நடந்தன. அடுத்த நாள் காலையில் நதி ஸ்னான, தண்டோதக ப்ரோக்ஷணை ஆன பிறகு, சம்ஸ்தான பூஜை நடந்தது. பிறகு, வ்ருந்தாவன சன்னிதியில் ஹஸ்தோதக சமர்ப்பணம் ஆரத்திகள் நடந்தன. அலங்கரிக்கப்பட்ட மேடையில் அமர்ந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு கனகாபிஷேகம் நடந்தது. அனைவரின் பிரதிநிதியாக ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர், குருகளுக்கு கனகாபிஷேகம் செய்தார். பக்தர் ஒருவர் கொடுத்த 12 தங்க நாணயங்களை சேர்த்து, மொத்தம் 72 தங்க நாணயங்களின் அபிஷேகம் ஆயிற்று. நிர்லிப்த ஸ்வபாரனான ஸ்ரீகளவர், அந்தர்யாமிக்கு அதனை சமர்ப்பித்ததைப் போல தெரிந்தது. ஸ்ரீஹரி குருகளின் சல சன்னிதியைப் போல இருந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு தங்க அபிஷேகம் செய்த ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரின் மகிழ்ச்சி அளவிடமுடியாததாக இருந்தது. இந்த உற்சவத்தில் பங்கு பெற்று அதனை கண்டவர்களே தன்யர். பிறகு, பிக்ஷா ஸ்வீகாரம், சந்தர்பணாதிகள் நடந்தன. அங்கிருந்து புறப்படும் முன்னர், வ்ருந்தாவன சன்னிதிக்கு ஸ்ரீகளவர் நமஸ்காரம் செய்தார். அங்கிருந்த பக்தர்களுக்கு மந்திராட்சதை கொடுத்து அருளினார்.

## வற்றிய கிணற்றில் தண்ணீர் சுரந்தது

மைசூரில் சுப்பராயதாசரின் கோயில் என்று பெயர் பெற்ற கோயில் ஒன்று. ஸ்ரீனிவாஸதேவரின் திவ்ய சன்னிதி. அழகான விக்கிரகம். பிரம்ம கரார்ச்சித என்று சொல்கிறார்கள். ஸ்ரீசுப்பராய தாசர், ஸ்ரீஸோதெ மடத்தின் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் சமகாலீனர் மற்றும் அவரது அருளைப் பெற்றவர். குருகளிடமிருந்து ஆசீர்வதித்துக் கொடுக்கப்பட்ட ஸ்ரீராஜரின் சிறிய பஞ்ச வ்ருந்தாவனம் அங்கு இருந்தது. அங்கு பிரகாரத்தின் மூலையில் ஒரு கிணறு. பூஜைகளுக்கு அங்கிருந்து தண்ணீர் எடுத்து வந்தார். 1994ம் சுமாருக்கு தண்ணீர் அங்கு வற்றத் துவங்கியது. ஆசார்யர்களுக்கு இதனால் பிரச்னை ஏற்பட்டது.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தம் நான்காம் பர்யாயத்திற்கு (1996-97) முன்பாக பயணத்தில் மைசூர் வந்தார். அங்கு நிகழ்ச்சிகள் அனைத்தும் முறையே நடந்தன. ஸ்ரீகளவர் இருந்த இடத்திற்கு அந்த கோயிலின் அர்ச்சகர் வந்தார். ஸ்வாமி தரிசனத்திற்கு தாங்கள் வரவேண்டும் என்று

வேண்டினார். அங்கிருந்த தண்ணீர் பிரச்னையையும் கூறினார். அதற்கு அருளவேண்டும் என்று பிரார்த்தனை செய்தார். மதியத்தில் பூஜ்ய ஸ்ரீகளவர், தமது பரிவாரத்துடன் அந்த கோயிலுக்கு சென்றார். அர்ச்சகர், ஸ்ரீகளவரை வரவேற்று, அந்த கோயிலின் மகிமைகளை விளக்கினார். சுப்பராய தாசரைப் பற்றியும் கூறினார். ஸ்ரீகளவர், ஸ்ரீஹரி குரு சன்னிதி தரிசனம் செய்து தன்யர் ஆனார். ஸ்ரீமத் வ்ருந்தாவனாசார்யர் அருளிய பஞ்ச வ்ருந்தாவன தரிசனம் ஸ்ரீகளவருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.

அங்கிருந்த கிணற்றின் அருகில் ஸ்ரீகளவரை அந்த அர்ச்சகர் அழைத்துக் கொண்டு சென்று, வற்றியிருந்த அந்த கிணற்றைக் காட்டி வேண்டிக் கொண்டார். ஸ்ரீகளவர், கங்காஜனக ஸ்ரீத்ரிவிக்ரம ஸ்வாமியை விசேஷமாக பிரார்த்தனை செய்து, மந்திராட்சதையை கிணற்றில் போட்டார். பலமந்திராட்சதை கொடுத்து அருளி, அங்கிருந்து புறப்பட்டார். ஸ்ரீகளவரின் பிரார்த்தனை வீண் போகவில்லை. கிணற்றின் தண்ணீர் வரத்துவங்கியது. நாளுக்கு நாள் அது வளர்ந்தது. அர்ச்சகர் ஆகியோர் மிகவும் மகிழ்ந்தனர்.

ஆசார்யர் அந்த ஆண்டின் சாதுர்மாத சமயத்தில், ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்திற்கு வந்து, கிணற்றில் தண்ணீர் வந்த விஷயத்தை ஸ்ரீகளவரிடம் கூறினார். இவை அனைத்தும் ஸ்ரீஹரி குருகளின் மகிமை – என்று ஸ்ரீகளவர் கூறினார்.

## தபோவனத்தில் இருந்த குரு ரக்ஷணை

20-25 ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் அப்போது ஸோதெயில் இருந்தார். பெங்களூரில் வசித்து வந்த பெங்கேரி குடும்பத்தினர், தங்கள் உறவினர்களுடன் ஒரு நிகழ்ச்சிக்காக ஸோதெ வந்திருந்தனர். அந்த நிகழ்ச்சி சிறப்பாக நடந்து முடிந்தது. தீர்த்த பிரசாதம் முடிந்தபின், மதியத்தில் தபோவனத்திற்கு செல்லும் திட்டம். வழி தெரிந்தவர்களை அழைத்துப் போயினர். அங்கு போயும் சேர்ந்தனர். சுற்றிலும் காடு. நடுவில் ஷால்மனா நதி. அமைதியான சூழல் அவர்களை மிகவும் ஈர்த்தது. ஸ்ரீராஜர் தவம் செய்த அனேக சிறு குகைகளை பார்த்தவாறு, சிலர் நதியில் ஸ்னானம் செய்ய இறங்கினர்.

பின் புறப்படும்போது பார்த்தால் அந்தக் குழுவினருடன் வந்த ஒரு குழந்தையை காணவில்லை. காட்டில் மாலையில் இருட்டு சூழத் துவங்கியது. அனைவருக்கும் கவலை. குழந்தையின் பெற்றோர்களோ பயந்தனர். அழத் துவங்கினர். இந்த விஷயம், ஜபத்தில் அமர்ந்திருந்த ஸ்ரீகளவருக்கு தெரிந்தது. அந்த உறவினர்களை வரக்கூறினார். அவர்களுக்கு ஸ்ரீபூதராஜரின் சன்னிதியில் பல-சமர்ப்பணம் செய்து பிரார்த்தனை செய்யுமாறு கூறினார். குழந்தையின் ரக்ஷணைக்காக தாமும் பிரார்த்தித்து விசேஷ ஜபம் செய்தார். அனைவரின் மனதிலும் கலக்கம். இரவு முழுக்க யாருக்கும் தூக்கம் இல்லை. இப்படியே இரவும் கழிந்தது.

அடுத்த நாள் காலையில் வழி தெரிந்தவர்களை அழைத்துக்கொண்டு, மறுபடி காட்டுக்குள் சென்றனர். தபோவனம் அருகில் சென்று பார்த்தால், அந்தக் குழந்தை சிரித்தவாறு தண்ணீரில் விளையாடிக் கொண்டிருந்தது. அனைவரும் குழந்தையைப் பார்த்து வியப்படைந்தனர். மடத்திற்கு குழந்தை அழைத்து வந்தபின் அங்கிருந்த அனைவருக்கும் மகிழ்ச்சி, வியப்பு. பெற்றோர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஒரு வயதானவர் தன்னுடன் இருந்து பார்த்துக் கொண்டார், என்று அந்த குழந்தை மழலையில் கூறியது. அவர் ரக்ஷகரான ஸ்ரீபூதராஜர் இல்லாமல் வேறு யாராக இருக்க முடியும்?. அனைவரும் தேவ சன்னிதிக்கு மற்றும் ஸ்ரீகளவருக்கு சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினர். திரும்ப ஸ்ரீபூதராஜரின் சன்னிதியில் விசேஷமாக பல-சமர்ப்பணம் செய்து அவரது அருளைப் பெற்றனர்.

## ஸ்ரீபாத தீர்த்த தரிசனம்

தும்கூரிலிருந்து சுமார் 20 கிமீ தூரத்தில் இருக்கிறது கரிகிரி க்ஷேத்திரம். புராண பிரஸித்தி பெற்ற தலம். மலை மேல் போகா நரசிம்மர் கோயில். துர்வாச முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதற்கு மேல் இன்னொரு மலையில் இன்னொரு யோகா நரசிம்ம சன்னிதி.

பிரம்மதேவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. மேலே இருக்கும் யோகா நரசிம்ம சன்னிதிக்குக் கீழ் ஸ்ரீபாததீர்த்த குகை. மிகவும் பவித்ரமான தீர்த்தம். அங்கிருக்கும் பாறை மேல் ஹயக்ரீவ தேவரின் ஸன்னிதி. ஸ்வாமியின் வலது பக்கத்தில் ஸ்ரீவாதிராஜரின் விக்ரகம். இடது பாகத்தில் கீழே ஸ்ரீமுக்யபிராணதேவர். யோகா நரசிம்ம ஸ்வாமியின் அபிஷேக ஜலம் ஸ்ரீபாததீர்த்தத்தில் வந்து சேர்கிறது. அங்கிருந்து ஜயா மங்கலி என்னும் இரு நதிகள் உற்பத்தி ஆகின்றன. இவை இரண்டும் கீழே 'ஜயமங்கலி' என்னும் சரோவரத்தில் வந்து சேர்கின்றன. அதுவே அந்த நதிகளின் உற்பத்தி ஸ்தானம். அங்கிருந்து மறைந்து பாய்ந்தவாறு, பின் தன்னை வெளிப்படுத்தி பாய்கின்றன அந்த நதிகள். அந்த சரோவரத்தின் பாறையின் மேல் ஸ்ரீவியாஸராஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீமுக்யபிராண தேவரின் சன்னிதி. ஆக மொத்தம், இந்த க்ஷேத்திரம் நித்ய தேவதா ஸன்னிதி எனப்படுகிறது. அந்த குகையில் ஸ்ரீராஜர், தபோ நிரதராக இருந்தார். இத்தகைய க்ஷேத்ரத்தை தரிசிக்க வேண்டும் என்று விரும்பினார் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்.

ஒரு முறை ஸ்ரீகளவர் தமது பூஜா காரியகிரமங்களை தும்கூரில் முடித்துக்கொண்டு கரிகிரி க்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டார். அவருடன் வித்வான் ஸ்ரீபுஷ்கர பிரஸாதாச்சார் (பின்னர் அவரே ஸ்ரீவித்யாவிஜய தீர்த்தர் ஆனார்). அந்த க்ஷேத்திர மகிமையை நன்றாக அறிந்தவர் ஆச்சார். புராணத்தில் சொல்லப்பட்ட அந்த க்ஷேத்திர மகிமைகளை, கட்டுரையாக எழுதி வெளியிட்டவர். ஸ்ரீகளவர், முதலில் போகா நரசிம்ம ஸ்வாமியின் தரிசனம் செய்தார். பிறகு, படிகளில் ஏறி, பிரம்ம கரார்ச்சித யோகா நரசிம்ம ஸ்வாமியின் தரிசனம். அங்கு உயரத்தில் இருந்த பிரம்மதேவரின் யக்ஞ மண்டபத்தை தரிசித்தார். பிறகு, ஸ்ரீபாததீர்த்த சன்னிதிக்கு வந்தார். பவித்ர தீர்த்த ப்ரோக்ஷணை செய்துகொண்டு, மற்றவர்களுக்கும் ப்ரோக்ஷணை செய்தார். அங்கு இருக்கும், சுயம்புவாக வெளிப்பட்ட ஸ்ரீஹயக்ரீவ - முக்யபிராண - வாதிராஜரின் சிலைகளை பார்த்து தன்யர் ஆனார். அந்த சன்னிதியின் விசேஷ மகிமையை ஆசார்யர் விவரித்தார்.

ஸ்ரீகளவருக்கு பரமானந்தம் ஆயிற்று. ஆக்யானத்தின் 'கிரிகவ்ஹரகாஸாரே தப: குர்யாம் ஹரேரிதி' என்னும் வாக்கு நினைவுக்கு வந்தது. அந்த வாக்கிற்கேற்ப தரிசன அனுபவம் பெற்று மகிழ்ந்தார். ஸ்ரீபுஷ்கராசார்யர் அந்த பிரதேசத்தின் புராணோக்த மகிமைகளை விவரித்து குருகளை மகிழ்வித்தார்.

## ஸ்ரீகூர்மத்தில் விப்ர ரூபத்தில் ஸ்வாமியைக் கண்டார்

ஸ்ரீவிஷ்வோத்த தீர்த்தர் ஒரு முறை யாத்திரையில் ஸ்ரீகூர்ம க்ஷேத்திரத்திற்கு வந்தார். அங்கு தேவஸ்தானத்தின் அருகில் வந்தபோது, தரிசனத்திற்காக நின்றிருந்த பக்தர்களின் வரிசை மிகவும் நீளமாக இருந்தது. தரிசனத்திற்கு தாமதம் ஆகும் போல தெரிந்தது. மேலும், தாம் வருவதற்கு முன்னர் தரிசனத்திற்காக எந்தவித (அதிகாரிகளிடம் சொல்லி) ஏற்பாடுகளையும் செய்திருக்கவில்லை. அந்த பிரதேச மொழியும் வேறு. உடனடியாக தரிசனம் ஆவதற்கான வழி இல்லை. ஆகவே, தேவஸ்தானத்தை சுற்றி பிரதட்சிணம் செய்து அங்கிருந்து புறப்படலாம் என்று ஸ்ரீகளவர் தீர்மானித்தார். அப்படியே செய்யும்போது, பிராமணன் ஒருவர் எதிரில் வந்தார். சம்ஸ்கிருதத்தில் பேசினார். ஸ்ரீகளவர் தமது அறிமுகத்தை செய்து, ஸ்வாமி தரிசனம் செய்ய வேண்டும் என்பதை கூறினார். பக்தர்களின் வரிசை நீண்டிருப்பதால், தேவஸ்தான பிரதிட்சணை செய்து, புறப்படப் போகிறோம் என்பதையும் கூறினார். தேவஸ்தானத்தின் பின்புறத்தில் ஒரு வாயில். அர்ச்சகர்கள் ஆகியோருக்கு மட்டுமே சென்று வர அனுமதி. அந்த பிராமணன், ஸ்ரீகளவர் மற்றும் உடன் இருந்தவர்களை அந்த வாயில் மூலமாக அழைத்துக்கொண்டு உள்ளே சென்றான். தேவ தரிசனம் அற்புதமாக ஆனது. அங்கத்திய அர்ச்சகர்கள் நிர்மால்ய மாலையை, ஸ்ரீகளவருக்கு சமர்ப்பித்தனர்.

ஸ்ரீகளவர் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, அதே வாயிலிலிருந்து அனைவருடன் வெளியே வந்தார். ஸ்வாமி தரிசனம் ஆனதில் அனைவருக்கும் மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. எவ்வித தாமதமும் இன்றி அற்புத தரிசனம் செய்வித்த அந்த பிராமணருக்கு ஏதாவது தட்சிணை கொடுக்குமாறு ஸ்ரீகளவர் ஸ்ரீகோவிந்தண்ண அவர்களுக்கு கூறினார். ஆனால், எங்கு தேடியும்

அந்த பிராமணன் கிடைக்கவில்லை. பிராமண ரூபத்தில் வந்து தன் தரிசனத்தை அருளியவன் அந்த ஸ்வாமியே என்று எண்ணி அனைவரும் மகிழ்ந்தனர். இது பூஜ்ய ஸ்ரீகளவரின் உன்னத பக்தியின் பலன் என்றே எண்ணினர். மெய்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் வடித்தனர். பிறகு, தேவஸ்தானத்தை இன்னொரு முறை பிரதட்சிணை செய்து, முன்பாகத்தில் நமஸ்காரம் செய்து, அங்கிருந்து புறப்பட்டார் ஸ்ரீகளவர்.

## வஸுதாராவில்
## ஸ்ரீஹயமொக தேவனின் தரிசனம்

பதரியிலிருந்து சுமார் 8-9 கிமீ. தூரத்தில் உயரத்தில் இருப்பது வசுதாரா க்ஷேத்திரம். பிரம்மதேவர் யக்ஞம் செய்த புண்ய சன்னிதி. அங்கு மொத்தம் ஐந்து அருவிகள். ருகாதி நான்கு வேதங்கள் மற்றும் ஐந்தாவது வேதமான மகாபாரதம் அந்த அருவிகளிலிருந்து கேட்கின்றன என்பது நம்பிக்கை. பிரம்மதேவர் யக்ஞம் செய்தபோது, ஸ்ரீஹயக்ரீவ தேவர் பிரத்யட்ச தரிசனம அளித்தார். அங்கு உயரத்தில் அவரது சன்னிதி இருக்கிறது. இந்த புண்ய சன்னிதியையும், ஹயக்ரீவ ஸ்வாமியையும், ஸ்ரீராஜர், தமது தீர்த்தபிரபந்தத்தில் மிகவும் அற்புதமாக வர்ணித்திருக்கிறார்.

பெங்களூரின் ஸ்ரீஹெஜமாடி ரமேஷராயர், ஸ்ரீராஜரின் அருளுக்கு பாத்திரர் ஆனவர். தொடர்ந்து ஏதாவது ஒரு வழியில் ராஜரின் சேவையை செய்யும் ஸ்வபாவம் அவருடையது. அவர் ஒரு முறை தமது பெற்றோரை, பதரிக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று தீர்மானித்தார். அதற்கு முன்னர், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பதரிக்கு வரவேண்டும் என்று விருப்பம் கொண்டார். பூஜ்ய ஸ்ரீகளவரைக் கண்டு பிரார்த்தனை செய்து அவரது ஒப்புதலைப் பெற்றார். சரியான சமயத்தில் அனைவரும் புறப்பட்டனர். அவர்களுடன் ஸ்ரீ.எஸ்.ஆர்.பிரகலாதாசார்யரும் புறப்பட்டார்.

தில்லி, ஹரித்வார, ஹ்ருஷிகேஷ வழியாக அனைவரும் பதரி க்ஷேத்திரத்திற்கு வந்தனர். வழியில் கண்ட க்ஷேத்திரங்களின் தரிசனம் அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்தியது. பதரியில் பாகிரதி ஸ்னானம், தேவ தரிசனாதிகள் எவ்வித தடையுமின்று நடந்தன. அடுத்த நாள், வஸுதாராவிற்கு செல்லலாம் என்று தீர்மானித்தனர். பதரியிலிருந்து மானத வரைக்கும் வாகனத்தில் சென்று, அங்கிருந்து நடந்து செல்ல வேண்டும். மானஸ்தளத்திற்கு வந்து, ஸ்ரீகளவருக்காக ஒரு மூங்கில் நாற்காலி ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்ரீகளவர் அதில் அமர்ந்தார். அவரை தூக்கிக் கொண்டவர்கள் முன்னால் நடக்க, மற்றவர்கள் பின்னால் தொடர்ந்தனர்.

வஸுதாராவிற்கு வந்த ஸ்ரீகளவர், சன்னிதி தரிசனம் செய்து, ஸ்ரீமத்வ, ராஜரின் விசேஷ ஸ்மரணை செய்து, ஹயக்ரீவ ஸ்தோத்திரம் சொல்லி நமஸ்காரம் செய்தார். தண்ணீர் கொட்டும் அருவிகள். அதிலிருந்து மேல் விழுந்த துளிகளால் அனைவரும் மகிழ்ந்தனர். அங்கு இன்னும் மேலே, ஸ்ரீஹயக்ரீவரின் தரிசனம். மெய் சிலிர்த்தனர். அருகில் மத்வ – ராஜரின் தரிசன அனுபவம். அந்த நொடியில் கிடைத்த அனுபவம் வர்ணிக்க முடியாததாகும். முகத்தில் மகிழ்ச்சி நிரம்பியது. ஆனாலும், அந்த தரிசன அனுபவத்தை அங்கு யாருக்கும் சொல்லவில்லை.

திரும்ப பதரி க்ஷேத்திரத்திற்கு அனைவரும் திரும்பினர். மறுபடி தேவ தரிசனம் செய்து திரும்பினர். பிறகு, ஸோதெயில் ஸ்ரீகளவரைக் கண்டபோது, அவருக்கு அங்கு ஆன அனுபவத்தைப் பற்றி கேட்டேன். ஸ்ரீகளவருக்கு அதனை சொல்வதற்கு கூச்சம். துவக்கத்தில் அது எதுவும் இல்லை என்றார். சுருக்கமாக பதில் சொல்லி, அமைதி ஆனார். க்ஷேத்திரத்தின் அற்புத மகிமைகளை சொல்லத் துவங்கினார். எனக்கு அவருடைய அனுபவத்தை கேட்க வேண்டும் என்று ஆவல். மறுபடி அவரை வணங்கி அதனை கேட்டேன். அப்போது குருகள் ‘வெள்ளை வண்ணத்தில் வந்த ஹயமொக தேவனின் தரிசனம் மற்றும் அருகில் மத்வ ராஜரின் தரிசனம் ஆயிற்று என்றார். ஸ்ரீமத்வ மற்றும் ஸ்ரீராஜர் இருவரும் ஸ்வாமிக்கு அருகில், எதிரில் அமர்ந்திருந்தனர். அந்த நொடியில் அவர்களை மனதில் துதித்தேன். யதாசக்தி துதித்தேன். அந்த சமயத்தில் தேவ குரு சன்னிதியின் காட்சி மறைந்தது - என்று மெய்சிலிர்த்து கூறினார். தம்

சாதனையும் அதிகமானது மற்றும் அதன் பலன்களும் அதிகமானவை என்று வினயத்துடன் கூற, நான் பேச்சடைத்துப் போனேன்.

## கூடை தூக்கியவருக்கு பாரம் ஆகவில்லை

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் வஸுதாராவிற்கு செல்வதற்கு, மான என்னும் இடத்திற்கு வந்தார். அங்கிருந்து ஒரு வழிப்பாதை. வெறும் கல் மண். கால் வைப்பதே பத்திரமாக வைக்க வேண்டும். வயதானவர்களுக்கு மிகக் கஷ்டம். கஷ்டப்பட்டு புறப்பட்டாலும், இலக்கினை அடைவது சந்தேகம்தான். உயரமான இடம் ஆகையால், பிராணவாயு குறைவு. மூச்சு விடுவதற்கும் கஷ்டம். சிலர் பாதி பயணத்திலேயே திரும்பி வந்துவிடுவர். சிலர் நடுவில் அமர்ந்து, அங்கங்கு ஓய்வெடுத்து நிதானமாக செல்வர். அடுத்து, மானத்திலிருந்து மேலும் பாதை, மேலும் குறுகலாக, செங்குத்தாக செல்கிறது.

ஆனால், அங்கேயே வசிப்பவர்கள் எந்தவித பிரச்னைகளும் இன்றி சரசரவென்று நடமாடுகிறார்கள். ஸ்ரீகளவருக்கு ஒரு மூங்கில் நாற்காலி ஏற்பாடு செய்யப்பட்டது. அதனை தூக்கிக் கொண்டு செல்பவர்களும் அங்கு இருக்கின்றனர். ஸ்ரீகளவர் ஒரு நாற்காலில் அமர்ந்தார். ஒருவன் அவரை தூக்கிக் கொண்டு நடந்தான். சிறிது தூரம் பாரத்தை மாற்றிக் கொள்வதற்கு இன்னொருவன். ஆனால், ஸ்ரீகளவர் அமர்ந்திருந்த நாற்காலி அவ்வளவு பாரமாக தெரியவில்லை. ஆகவே, அதனை தூக்கிக் கொண்டவன் சோர்வடைந்ததாக தெரியவில்லை. வேகமாக நடந்து கொண்டிருந்தான். நடுவில் எங்கும் நிற்கவேயில்லை. ஸ்ரீகளவர் வசுதாரா சென்று நாற்காலியிலிருந்து இறங்கினார்.

அந்த மனிதனுக்கு ஏற்பட்ட ஆச்சரியம் மேலும் அதிகமானது. ஸ்ரீகளவர் பயணம் முழுக்க பாரமாகவே தெரியவில்லையே என்று. காலி நாற்காலியையே தூக்கிக் கொண்டு வந்த அனுபவம் அவனுக்கு ஏற்பட்டது. இருவரின் அவசியம் இருந்திருக்கவில்லை என்றான். அனைவரிடமும் இதனை சொல்லி, ஸ்ரீகளவரின் பாதம் தொட்டு வணங்கினான். இதனைக் கேட்டு அனைவரும் மெய் சிலிர்த்தனர். அந்த புண்ய சன்னிதியில் ஸ்ரீகளவரின் அலௌமிக மகிமையைக் கண்டனர். மிகுந்த மகிழ்ச்சியுடன் நமோ நம: என்று கோஷம் செய்து வணங்கினர். நம் ஸ்ரீகளவர், அணிமாதி ஸித்தி ஸம்பன்னர் என்பதற்கு இந்த சம்பவமே சாட்சி ஆயிற்று.

## ஸ்ரீகளவரின் சன்னிதியால் கஷ்டங்கள் பரிகாரம்

ஒரு முறை ஸ்ரீகளவர் பெங்களூரிலிருந்து கண்டகி யாத்திரையை துவக்கினார். புறப்படும் நாளில், ஸ்ரீபத்மனாப புராணிகரின் வீட்டில் ஜப தபங்கள். ஜபத்திற்கு அமர்ந்தபோது மேலே ஒரு ஜ்யோதி தெரிந்தது. பிறகு அது மறைந்தது. பிக்ஷைக்குப் பிறகு, ஸ்ரீகளவரும் மற்றவர்களும் விமான மார்க்கமாக பயணம் செய்தனர். பயணம் செய்த விமானத்தில் ஏதோ கோளாறு. விமானம் ஒரு முறை குட்டிக்கரணம் அடித்தது. பயங்கர சத்தம் ஏதோ கேட்டது. உள்ளே இருந்த அனைவரும் பயம் கொண்டனர். ஆனால், ஸ்ரீகளவருக்கு இது எதுவும் தெரியவில்லை. பூஜ்ய ஸ்ரீகளவர், கண் மூடி தியானத்தில் இருந்தார். 15 நொடிகளுக்குப் பிறகு, அனைத்து பிரச்னைகளும் தானாகவே சரியானது. ஸ்ரீகளவர் கண் திறந்தபோது, அனைவரும் அருகில் இருந்தவர்களுடன் பேச்சில் ஆழ்ந்திருந்தனர். அருகில் இருந்தவர் ஸ்ரீகளவருக்கு அனைத்தையும் விவரித்தார். அவருக்கு ஆச்சரியம். 'கவலைப்படும் நிலையிலிருந்து ஸ்வாமியே நம்மை காப்பாற்றியிருக்கிறான்' என்றார் ஸ்ரீகளவர். 'தொழில்நுட்ப பிரச்னை கொண்ட விமானம், தானாகவே சரியாவதற்கு, அதில் இருந்த ஸ்ரீகளவரின் சன்னிதியே காரணம்' என்று அங்கிருந்த பலர் கூறினர். விமான ஓட்டியும் வியப்படைந்தார். ஆக மொத்தம், நடக்கவிருந்த பெரும் விபத்து நடக்கவில்லை. இதற்கான குறியீடே அன்று அந்த ஜ்யோதி ரூபத்தில் தெரிந்தது என்று நாம் அறிந்து கொள்ளலாமா?

## பிரார்த்தனையின் பலன்

சில சிஷ்யர்களுடன் ஸ்ரீகளவர் நேபாள் பயணம் செய்தார். முக்திநாத் சென்றார். தேவதரிசனம் செய்தார். ஒரு இடத்தில் தங்கினார். அங்கிருந்த கண்டகி நதியில் தண்ணீர் குறைந்திருந்தது.

கால் நனைக்கும் அளவிற்கு தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. அவகாஹன ஸ்னானம் செய்வதற்கு முழங்கால் அளவிற்காவது தண்ணீர் இருக்க வேண்டும். அடுத்த நாள் காலையில் எப்படி இதில் ஸ்னானம் செய்வது என்று கவலை வந்தது. ஸ்ரீஹரிகுருகளில் விசேஷ பிரார்த்தனை செய்து படுத்தார். காலையில் எழுந்து பார்க்கையில், ஆச்சரியம். அருகில் ஓடிய கண்டகி நதியில் வெள்ளம். அதுவும் அதிக வேகத்தில் இல்லை. நிதானமாக ஓடும் தண்ணீர். பூஜ்ய ஸ்ரீகளவரின் ஸ்ரீஹரி குரு பிரார்த்தனை பலித்தது. அனைவரும் மகிழ்ச்சியுடன் அவகாஹன ஸ்னானம் செய்து ஜபாதி நித்ய சத்கர்மங்களை விதிப்படி செய்து முடித்தனர். குருகளை வணங்கி தன்யர் ஆயினர்.

## விஷ்வம்பர ஸாலிகிராமம் கிடைத்தல்

கண்டகி நதி சாலிகிராமங்கள் தோன்றும் இடம். நதி தோன்றும் இடம் தாமோதர குண்ட. அங்கு வஜ்ரகீட என்னும் பூச்சிகள். அவற்றில் பிரம்மதேவரின் சன்னிதி. ஸ்ரீஹரியின் சங்கல்பம் மற்றும் ஆணைப்படி அந்த வஜ்ரகீடங்கள், சிலைகளை துளைத்து, சாலிகிராமத்தை செய்கின்றன. ஒரு அர்த்தத்தில் இது பிரம்மதேவரின் காரியம். அந்த நதியின் தண்ணீரில் நீந்தி வரும் சாலிகிராமங்கள், அடுத்து வேறு இடங்களில் கிடைக்கின்றன. நதியின் நடுவில் அணைகள் கட்டியிருப்பதால், அதற்குப் பின் சாலிகிராமங்கள் கிடைப்பதில்லை என்கிறார்கள். அணைக்கு முன்னர், தண்ணீரின் ஆழம் வேகம் அதிகம். ஆகவே, அங்கு சாலிகிராமங்கள் கிடைப்பது கஷ்டம். ஆக, அந்த அணைக்கட்டில் தண்ணீர் குறைவாக இருக்கும்போது மட்டுமே சாலிகிராமம் கிடைக்கும் என்கிற நிலைமை.

அடுத்த நாள், ஸ்ரீகளவர் அங்கு நதிக்கரையில் இருந்தபோது ஒரு பிரம்மசாரி வந்தான். அவனுடைய பெயர் ஸ்ரீவேதநிதி. அவனே வந்து ஸ்ரீகளவரிடம் சம்ஸ்கிருதத்தில் பேசினான். மகிழ்ந்த ஸ்ரீகளவர், அவனுடன் சம்ஸ்கிருதத்திலேயே பேசினார். அந்த பிரம்மசாரி ஸ்ரீகளவரிடம் ஒரு சாலிகிராமத்தை தந்தான். அவன் கொடுத்தது விஷ்வம்பர சாலிகிராமமாக இருந்தது. ஸ்ரீகளவருக்கு வியப்பு மற்றும் மகிழ்ச்சி. ஸ்ரீகளவருக்கு ஆசிரமம் ஆனத் வினாயக சதுர்த்தியன்று. அந்த விக்னேஷனின் உபாஸ்ய பகவத்ரூபமே விஷ்வம்பர. அதற்காகவே, ஸ்ரீகளவருக்கு விஷ்வம்பர் சாலிகிராமம் கிடைத்தது விசேஷமாக கருதப்பட்டது.

## ருஜுதேவதா பைவபம் கண்ட ஷௌண்டர்

ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸோதெயில் இருந்தார். சாதுர்மாத காலம். ஜப பூஜாதிகள் வழக்கம்போல நடந்து வந்தன. ஸ்ரீகளவரின் மனதில் ஏதோ ஒரு கவலை. ஸ்ரீஹரி ஹயக்ரீவ ரூபத்தினால், பிரம்மாதி ருஜு தேவதைகளுக்கு உபதேசம் செய்கிறான். ஸர்வேஷாம் ருஜுதேவானாம் குருர்தேவோ ஹயானன: என்பது பிரமாணம். அது எவ்வளவு அற்புதமாக இருந்திருக்க வேண்டும். அந்த காட்சிகளை கருணாகரனான ஸ்வாமி, கருணையுடன் நமக்கு காட்ட வேண்டும்'. என்று ஸ்ரீகளவர் நினைத்தார். அதற்காக நித்ய பக்தியுடன் பிரார்த்தனை செய்தார். அத்துடன், ஸ்ரீராஜரின் வ்ருந்தாவனத்திற்கு அதிபதி ஸ்ரீஹயக்ரீவதேவர். 'மய்யைகோக்தி: ததோக்திகா..' என்னும் ஆக்யான பிரமாணத்தைப் போல, வ்ருந்தாவனத்திலும் நூறு ருஜுதேவதா சன்னிதானம் இருக்கிறது. இங்கும் அந்த உபதேசாதி வைபவம் நிரந்தரமாக நடக்கிறது. அந்த வைபவ காரியத்தின் இருப்பிடமே இந்த வ்ருந்தாவனம். இந்த மகிமா ஞானத்தினாலேயே வ்ருந்தாவன சன்னிதியில் தொடர்ந்து ஆராதனை மற்றும் பிரார்த்தனை ஸ்ரீகளவரால் நடந்தது.

அத்தகைய பர்வ காலமும் ஸ்ரீகளவருக்கு வந்தது. ஒரு நாள் ஸ்ரீகளவர் காலையில் ஸ்னானம் செய்து, ஜபத்தில் ஆழ்ந்திருந்தார். ஏகாந்தத்தில் ஒரு மனதுடன் தியானம். வெளியில் என்ன நடக்கிறது என்றே தெரியவில்லை. அது ஸ்வப்ன நிலை அல்ல. தூக்க நிலையும் அல்ல. ஹயக்ரீவ மந்திர ஜப. அதன் மகிமா சிந்தனையும் செய்து கொண்டிருந்தார். பூஜ்யருக்கு நிரந்தர கருணையை காட்டுபவர் ஸ்ரீஹயவதன. அவரே ஸ்ரீகளவருக்கு ருஜுதேவதா வைபவ தரிசனத்தை காட்டினார். ஸ்ரீஹயக்ரீவதேவர், அவருக்கு முன்னால் பிரம்மாதி ருஜுதேவதைகள் அமர்ந்திருக்கின்றனர்.

ஸ்ரீஹயக்ரீவ தேவனின் முகத்திலிருந்து உபதேசவாணி வந்து கொண்டிருக்கிறது. இதனை ஸ்ரீகளவர் கண்டது மிகச் சொற்ப காலமே. அடுத்த நொடி அவை மறைந்தன. இது எப்படி சாத்தியம் என்னும் கேள்வி பலருக்கு வந்தது. வ்ருந்தாவனாக்யானத்தின் 'கர்தும்சாகர்தும்மப்யேமன்யதா கர்துமேவ ச | ஸமர்த்தோsஹம் ந ஸந்தேஹஷ்சேத்வரச்ய ஸதாssக்ஞயா ||'. இது ஸ்ரீராஜரின் அனன்ய மகிமையை விளக்கும் பிரமாணம் ஆகும்.

ஸ்ரீவாதிராஜரின் அருளைப் பெற்ற சாமர்த்தியமே இப்படியென்றால், அவருடைய ஆராத்ய தெய்வமான ஹயமுகதேவனின் சக்தி சாமர்த்தியம் எவ்வளவு என்று எப்படி சொல்வது? அது அபாரமானது மற்றும் ஸர்வஸாதகமானது. நம் ஸ்ரீகளவர் ஸ்ரீவாதீஷவரதனின் நித்ய அனன்ய பாத ஆராதகர். 'ஸர்வஸ்வம் மே வாதிராஜோ தயாலு:' என்னும் சரணாகதி அவருடையது. ஆகையாலேயே, ஸ்ரீவாதீஷ வரததேவ, தன் அலௌகிக, அற்புத மகிமைகளை காட்டியது இவ்வாறாக. இவையெல்லாம் சாமான்யர்களின் சிந்தனைக்கும் எட்டாத விஷயமாகும்.

## கங்காவதரண பார்த்த குரோத்தமர்

ஸ்ரீத்ரிவிக்ரமதேவனின் பாதத்தின் நகம், பிரம்மாண்டத்தின் ஓட்டினை முட்டியது. அது தங்கமயமானது. ஆனாலும் அது பட்டதும், வெளியே இருந்த நீர் உள்ளே பாய்ந்தது. சர்வக்ஞரான பிரம்மதேவர், அந்த தண்ணீரை கமண்டலத்தில் பிடித்து, எதிரில் இருக்கும் அந்த தேவனின் பாதங்களை கழுவினார். அந்த பாதம் கழுவிய தண்ணீரே பவித்ரமான கங்கை ஆனது. பிறகு கங்கை, சிவனின் ஜடையில் சிறைப்பட்டாள். பகீரதன் தன் முன்னோர்களின் உத்தாரத்திற்காக கங்கையை பூமிக்கு கொண்டு வர முற்பட்டான். கங்கை சிவனின் ஜடையில் இருந்ததால், சிவனைக் குறித்து கடுந்தவம் புரிந்தான். அவனால் உலகிற்கே நன்மை ஏற்பட்டது. ருத்ரதேவர் மகிழ்ந்தார். ஒரு நல்ல நாளில், பகீரதனின் விருப்பப்படி தம் ஜடையிலிருந்து கங்கையை இந்த உலகிற்கு அருளினார்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், புராணோக்த இந்த கங்கையின் மகிமையைக் கேட்டு, மனனம் செய்த மஹனீயர். ஏதாவது ஒரு வழியில் அதனைக் காணும் விருப்பம் கொண்டார். ஒரு நாள் அவரது பிரார்த்தனை ஈடேறும் சந்தர்ப்பமும் வந்தது. ஸ்ரீஹரி குரு சன்னிதியில் சரணாகதியின் பிரார்த்தனைக்கு பலன் கிடைத்தது.

ருஜுதேவதா வைபவ தரிசனம் செய்ததைப் போல, ஸ்ரீகளவர் ஒரு முறை ஜபத்தில் அமர்ந்து, ஒரு மனதுடன் தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது, கங்காவதரண தரிசனம் செய்து தன்யர் ஆனார். அவருக்கு தரிசனம் கிடைத்த ரீதி இவ்வாறு என்று அவரே ஆப்தர்களின் முன் சொல்லியிருக்கிறார்.

ஜாங்கடெ, தாள, சங்கு, கொம்பு, ஆகிய மங்கள வாத்தியங்களின் இசை முன்னரும், அதன் பின்னர் ஜடாதாரியாக (தபஸ்வியைப் போல) கை குவித்தவாறு, தியான நிலையில் நிதானமாக வந்து கொண்டிருக்கும் பகீரதன். அவனின் பின்னால், கங்கையின் பிரவாகம். அதன் மேல் கங்கா மாதையின் தரிசனம் ஆயிற்று. நான் இதனை ஏதோ ஒரு பிறவியில் பார்த்திருக்கிறேன் என்று நினைக்கிறேன் – என்று மிகவும் மகிழ்ச்சியுடன் சொல்லியிருக்கிறார்.

இதெல்லாம் எப்படி சாத்தியம் என்னும் கேள்வி வரும் சிலருக்கு – கிமலப்யம் பகவதி பிரஸன்னே ஸ்ரீநிகேதனே – என்பதே பதில். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸ்ரீஹரியின் அபாரமான கருணையைப் பெற்ற மகாமகிமர் ஆவார்.

## திவ்யமான விமானத்தை பார்த்த மான்யர்

ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்தின் 3ம் அத்தியாயத்தில் 'விமானம் திவ்யமானம் ச தீப்யமானம் ஸதாயனம் | வ்ருந்தாவனோபரிகதம் பூஜயந்து ஸதா மம' என்னும் ஸ்லோகம் உள்ளது. ஸ்ரீராஜரின் வ்ருந்தாவனத்தின் மேல் இருக்கும் விமானம் திவ்யமானது. அது ஒளிமயமானது. தேவதைகளுக்கு மற்றும் னிர்மல ஸ்வரூபரான சஜ்ஜனர்களுக்கு கதியாக இருக்கிறது. அதனை பூஜிக்க வேண்டும். இது சாமான்யர்களின் கண்களுக்குத் தெரிவதில்லை. வ்ருந்தாவன சன்னிதியில் எவ்வளவோ ஆண்டுகள் (பல பிறவிகளில்) சேவை செய்ய வேண்டும். உடன் பிரார்த்தனை செய்ய வேண்டும். இதெல்லாம் பக்குவம் ஆகு, வ்ருந்தாவனத்தில் இருக்கும் ஸ்ரீஹரிகுருகள், மகிழ வேண்டும். அப்போது மட்டுமே தரிசனம் கிடைக்கும். 19ம் நூற்றாண்டில் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் அந்த திவ்ய விமான தரிசனம் பெற்ற மகாத்மர் ஆவார்.

ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன சன்னிதியையே அனைத்துமாக எண்ணி ஆராதித்தவர் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். ஒரு முறை ஸோதேயில் சிம்மாசனம் இருக்கும் இடத்தில் ஸ்ரீகளவர் தனியாக இருந்தார். ஸ்ரீகோவிந்தண்ண அவர்களிடம் கேட்டுக்கொண்டு உள்ளே சென்றேன். ஸ்ரீகளவர் கிரந்தத்தை படித்துக் கொண்டிருந்தார். அவரை வணங்கி அமர்ந்தேன். 'ஸ்ரீவாதிராஜர் நூற்றுக்கும் மேற்பட்ட கிரந்தங்களை இயற்றியவர் என்பது அவரது சரித்திரத்திலிருந்து தெரிகிறது. ஆனால், அவ்வளவு கிருதிகள் இன்று கிடைப்பதில்லை. பூஜ்யரான நீங்கள் ஏதாவது கையெழுத்துப் பிரதிகளை பார்த்திருக்கிறீர்களா? என்று கேட்டேன்.

அதற்கு ஸ்ரீகளவர் 'கிரந்த ஆராய்ச்சி அங்கங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இன்னும் அதிகமாக, வேகமாக நடக்க வேண்டும். அப்படி செய்தால், மேலும் பல கிரந்தங்கள் கிடைக்கலாம்' என்றார். பிறகு பல விஷயங்களைப் பற்றி ஸ்ரீகளவர் பேசிக் கொண்டிருந்தார். நடுவில் ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன மகிமை விஷயங்களை மிகவும் ஆர்வத்துடன் கூறினார். பலர் அத்தகைய அம்சங்களை தெரியாமல், அவரது அருளைப் பெறமுடியாமல் இருக்கின்றனர். அது ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் சித்தம் என்று கூறினார்.

எனக்கு அந்த திவ்ய விமானத்தைப் பற்றிய கேள்வி ஒன்று இருந்தது. அருகில் வேறு யாரும் இருந்திருக்கவில்லை என்பதால், அதனை கேட்டேன். குருகள் உடனடியாக பதில் கொடுக்கவில்லை. அதெல்லாம் தெய்வ மகிமை மற்றும் ரகசியம் என்றார். அருகில் சென்று பாதம் தொட்டு நமஸ்கரித்தேன். மறுபடி கேட்டேன். கருணாளுவான ஸ்ரீகளவர் நான்கைந்து வார்த்தைகளில் இவ்வாறு கூறினார். 'ஒரு முறை எழுந்து நின்று, வ்ருந்தாவனம் மேல் இருக்கும் ஸ்ரீஹயக்ரீவ தேவருக்கு ஆரத்தி செய்யும்போது, மேலே பார்த்தபோது விமானம் ஒன்று தென்பட்டது. தங்கமய, கண்ணைப் பறிக்கும் தேஜஸ், அலங்கரிக்கப்பட்ட விமானம், அற்புத தேவதா சன்னிதானம், அழகாக இருந்தது. அங்கும் ஸ்ரீஹயக்ரீவாதி பகவத் ரூபங்கள், பிரம்மாதி ருஜுதேவதா சன்னிதி தென்பட்டது. இதர தேவதா சன்னிதானம் இருந்தது. வணங்கவேண்டும் என்று விருப்பம் வந்தது. ஆனால், கையில் ஆரத்தி தட்டு, மனஸா வணங்கினேன்' என்று மிகவும் மகிழ்ச்சியுடன் கூறினார். இதனை மற்றவர்களுக்கு சொல்லி பிரசாரம் செய்யாதீர்கள் என்றார்.

அது எப்படி 50 யோஜனா பரப்பளவில் இருந்தது? என்றேன். அதற்கு நம் ஸ்ரீகளவர் கூறிய பதில் மிகவும் சமத்காரமாக இருந்தது. முதலில் இது தேவமானமானது. ஆகவே ரகசியம். சாமான்யரின் கணக்கிற்கு கட்டுப்படாத விஷயம் ஆகும். அருள் பலத்தினால் இதனை அறியலாம் – என்று பதில் அளித்தார்.

## ஸ்ரீவிருந்தாவனாக்யான ஷிலா செய்வதற்கு அனுமதி

பாவிசமீர ஸ்ரீவாதிராஜர் பஞ்சதேஜோ ரூபங்களுடன், சஷரீரமாக பஞ்சவ்ருந்தாவனத்தை பிரவேசம் செய்தார். பஞ்சதேஜோரூபங்கள் அனைவருக்கும் தெரியவில்லை. ஸ்ரீவேதவேத்யாதி தகுதி உள்ள பக்தர்கள் மட்டுமே அதனைக் கண்டனர். ஸ்ரீவாதிராஜ மடத்தில் லட்சுமிபதி நாமக பிராமணர்

ஒருவர் இருந்தார். முதலிலிருந்தே ராஜரின் சேவையை செய்து வருபவர். தினமும் ஸ்ரீராஜரிடம் தன்னை அருளுமாறு பிரார்த்தனை செய்பவர். குருகளின் ஸ்வரூபத்தை அறிய வேண்டும் என்னும் விருப்பம். அதற்கும் சேர்த்து பிரார்த்தனை. அனைத்திற்கும் ஸ்ரீராஜர், அபய ஹஸ்தம் காட்டியவாறு, புன்னகையுடன் இருந்தார். வ்ருந்தாவன பிரவேச காலத்திற்கு அந்த பிராமணன் ஸோதெயில் இருந்திருக்கவில்லை. பின்னர் விஷயம் அறிந்து ஓடோடிவந்து, வருந்தி அழுது புரண்டான். மறுபடி சேவையை துவக்கினான்.

கருணாமயியான ஸ்ரீராஜர், அவனின் கனவில் தேஜோரூபத்தினால் தரிசனம் அளித்தார். தமது வ்ருந்தாவன மகிமை, ஸ்வரூப மகிமை, ஸேவா பிரகார, பராபர தத்வ, அந்த பிராமணரின் ஸ்வரூப – ஸாதன – ஸேவா பிரகார, மற்றவர்களுக்கும் உபதேசம் – என அனேக மகிமா மற்றும் உபதேச பிரகாரங்களை ஸ்லோக ரூபமாக கூறினார். தினந்தோறும் காலையில் அந்த பிராமணன், குரு ஸ்ரீவேதநிதிகளின் முன் அதனை கூறினான். அவர் தமது சிஷ்யர் மூலமாக அதனை எழுதினார். அதுவே அற்புதமான ஸ்வப்னவ்ருந்தாவனாக்யான என்னும் கிரந்தம். இதன் ஸாரபூதமானதே அணுவ்ருந்தாவனாக்யான. அது ஷிலா ரூபத்தில் செதுக்கப்பட்டு தினமும் பூஜை செய்யப்படுவதாக ஆகிறது.

இன்னும் மொத்த கிருதியும் ஷிலா ரூபத்தில் செய்யப்படவேண்டும் என்னும் ஆணை அந்த கிரந்தத்தில் இருக்கிறது. அந்த ஷிலா ரூபமும், தனது வ்ருந்தாவனத்தின் முன்பக்கத்திலேயே இருக்க வேண்டும் என்னும் ஆணையும் அதிலேயே சொல்லப்பட்டுள்ளது. அது அப்போது அவருக்கு செய்ய முடியவில்லை.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், மொத்த ஷிலா ரூபத்திற்கு மனம் இசைந்தார். அதற்காக தொடர்ந்து பிரார்த்தனை செய்தார். வேறு பிரகாரமாக அதனை செய்வதற்கு அனுமதி இல்லை. ஆக்யானத்தில் சொல்லப்படாத முறையில் செய்யலாகாது என்றும் கூறினார். பூஜ்யரின் பிரார்த்தனை நான்காம் பர்யாயத்தில் ஈடேறும் சந்தர்ப்பம் வந்தது. அனுமதிக் குறிப்பு, பிரஸாதம் ஆகியவை இல்லாமல் செயல்களை துவக்குவதில்லை. ஸ்ரீகளின் அனன்ய பிரார்த்தனை வீண் ஆகவில்லை.

பூஜ்யருக்கு ஸ்வப்ன சூசனை ஆயிற்று. பிரஸாதம் கிடைத்தது. அடுத்த நாள், ஆக்யான பாராயணம் செய்பவர்களுக்கு விஷயம் தெரிந்தது. உடனே சிலர் தங்களின் சேவையை செய்தனர். (ஹைதராபாத் எஸ்.பி. ராஜாராவ், ஆர்.பி.ராவ் ஆகியோர்). இது ஒரு மிகச்சிறப்பான தேவதா காரியம். தெய்வ பிரசாதத்தின் அருள் இல்லாமல் எப்படி சாத்தியம்?. அதற்காகவே ஸ்ரீகளவர், ஸ்ரீஹரி குருகளிடம் பிரார்த்தனை செய்தார். அவருடைய அபாரமான பக்தி மற்றும் பிரார்த்தனைக்கு ஸ்ரீஹரி குருகள் மகிழ்ந்து பிரஸாதம் அருளினர். ஸ்ரீகிருஷ்ண ஸன்னிதியில் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் வியாஸமுஷ்டி வைத்து ஆக்யானோக்த முறையில், அதாவது, ஸாமானாதிகரண க்ரமத்தினால் பூஜித்தார்.

ஸ்ரீகளவர் அந்த கிரமத்தை அப்படியே பின்பற்றி, ஸ்ரீகிருஷ்ண சன்னிதியில் முன்னெடுத்து, ஸ்ரீவாதிராஜோக்த ஆக்யானத்தின் மகிமா அனுசந்தானத்துடன் ஸ்ரீஹரி குருகளை ப்ரீதி செய்ததாலேயே, ஷிலா லேகனத்திற்கு அனுமதி பெற்றார். ஸ்ரீகுருராஜோக்த ஆக்யான ஷிலா லேகன கார்ய ஸ்ரீகிருஷ்ண முக்யபிராண மற்றும் ஆசார்ய மத்வருக்கும் ஸம்மதம் என்றே பர்யாய காலத்தில் தெய்வ அனுமதி ஸ்ரீகளவருக்கு கிடைத்தது.

## ஷிலா லேகன மற்றும்<br>ஆக்யான மந்திர நிர்மாணம்

ஷிலா லேகனத்திற்கு தெய்வ அனுமதி கிடைத்தது. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், பழைய கையெழுத்துப் பிரதிகளை ஒரு இடத்தில் தொகுத்து வைத்தார். அந்த பிரதிகளில் ஸ்ரீகிருஷ்ண லிங்க யதிகள் என்னும் ஒருவர் எழுதிய பழைய பிரதி ஒன்று இருந்தது. ஸ்ரீவேதநிதி தீர்த்தரின் காலத்தில் இதனை எழுதியிருக்கலாம். சுமார் 1648ம் ஆண்டில் இருக்கலாம். அதனை ஸ்ரீகளவர்

படிக்கத் துவங்கினார். இந்த செயலில் குருகளுக்கு முழு உதவியாக இருந்தவர், ஸ்ரீ.பி. வியாஸாசார்யர். பர்யாயத்திற்குப் பிறகு ஸ்ரீவ்யாஸாசார்யருக்கு - பஞ்சிமாரு, உடுப்பி, ஸோதெ மற்றும் பெங்களூருக்கு திரும்பத்திரும்ப சஞ்சரிக்க வேண்டியிருந்தது.

பிரதியை சரியாகப் படித்து, ஆராய்வதில், கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் உதவி அபாரம் மற்றும் கவனிக்கத்தக்கது. கடைசியில் இந்த பழைய பிரதியை ஆராய்ச்சி செய்து சுத்தமான பாடம் தயார் ஆயிற்று. ஸ்ரீவியாஸாசார்யரின் மேற்பார்வையில் பெங்களூரில் ஷிலா லேகன காரியம் துவங்கியது. இங்கு, ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன முன் பாகத்தில் ஆக்யான மந்திரம் கட்டும் செயல் துவக்கம். அது ஸ்ரீராஜரின் ஆணைப்படியே நடந்தது. ஷிலா லேகன விஷயத்தை அறிந்த ஸ்ரீராஜரின் பக்தர்கள் தாமாகவே முன்வந்து சேவையை செய்யத் துவங்கினர். ஸ்ரீராஜரின் சங்கல்பத்தைப் போல மற்றும் ஸ்ரீபூதராஜரின் அருளால் தேவையான நிதி சேர்ந்தது. அதற்குப் பிறகு அதற்காக காணிக்கைகளை கோருவதையும் ஸ்ரீகளவர் விட்டுவிட்டார்.

அந்த சமயத்தில் ஹைதராபாத் ஸ்ரீ டி. நாகராஜராவ் மற்றும் அவருடைய மனைவி ஸ்ரீமதி. ருகமாபாய் அவர்கள் வந்து ஒரு அத்யாயயத்தின் சேவா காணிக்கையைக் கொடுத்தனர். ஆனால், பூஜ்ய ஸ்ரீகளவர் , நமக்கு தேவையான காணிக்கை வந்துவிட்டது என்று அதனை ஏற்றுக்கொள்ள மறுத்தார். (வேறொருவராக இருந்தால், அதெல்லாம் சிந்திக்காமல், அதனை ஏற்றுக் கொண்டிருப்பார்). தம்பதிகள் திரும்பத்திரும்ப வேண்டிக் கொண்டனர். கடைசியில் இவ்வாறு கூறினர். ருஜுத்வ வ்ருந்தாவனாக்யானாதிகளில் ஸ்ரத்தை உள்ள ஸ்ரீராஜரின் பக்தர் ஆனதால், வேறு வழியின்றி, அதனை ஸ்ரீகளவர் ஏற்றுக்கொண்டார். இது பூஜ்ய ஸ்ரீகளவரின் ருஜு மற்றும் நேர்மையான செயல்பாட்டிற்கு ஒரு மிகச்சிறந்த உதாரணம் ஆகும்.

பெங்களூரில் ஷிலா லேகன செயல் முடிந்தபின், மொத்தமாக அதனை ஒரு முறை பார்க்க வேண்டும் என்று உத்தரவு வந்தது. அந்த சமயத்தில் வித்வான். ஸ்ரீ ஆனந்ததீர்த்த ராவ், பி. ஸ்ரீவ்யாஸாச்சார், பன்னஞ்செ ஸ்ரீகோபாலகிருஷ்ண உபாத்யாய மற்றும் நான் - என அனைவரும் சேர்ந்து பெங்களூரில் அதனை திரும்பத்திரும்ப பலமுறை சரிபார்த்தோம். இது எங்களுக்கு கொடுக்கப்பட்ட மிகப்பெரிய வேலையாகும். உடன், ஆக்யான மந்திர நிர்மாணம் அற்புதமான வகையில் முடிந்தது. செதுக்கப்பட்ட ஷிலா பலகைகளை ஸோதேக்கு கொண்டு வந்து, அத்தியாயங்கள் வரிசைப்படி, ஆக்யான மந்திரத்தில் வைக்கப்பட்டன. பிறகு, 19, 20, 21 ஏப்ரல் 2000ம் ஆண்டில், ஹோம, ஹவன மற்றும் சிறப்பான ஞான ஸத்திரத்துடன் ஆக்யான மந்திரம் ஸ்ரீவாதீஷவரத ஸ்ரீமத்வேஷ ஹயவதனனுக்கு அர்ப்பிக்கப்பட்டது.

## ஆக்யானத்தின் உள் அர்த்தத்தை அறிந்த குரு

ஏதத்ரஹஸ்யம் மம புத்ர பஷ்யன் - என்று ஸ்ரீராஜர் தம் கிருதியை ரகசிய கிருதி என்று கூறியிருக்கிறார். வ்ருந்தாவனாக்யானம் அற்புதமான அர்த்தங்களை உள்ளடக்கியது. இதனை எந்த அகராதியிலும் தேடி கண்டுபிடிக்க முடியாது. இதனை புரிந்துகொள்ள, ஸ்ரீராஜரின் மற்றும் அவருடைய பக்தரின் அருள் வேண்டும். ஆகையாலேயே, ஸ்ரீமுஷ்ணாசார்யர், தாம் இயற்றிய வியாக்யானத்தின் துவக்கத்தில் 'ஸந்த: ஸந்து க்ருபாவந்தோ குருராஜ பதாஸ்ரயா:' என்று பிரார்த்தனை செய்திருக்கிறார்.

வ்ருந்தாவனாக்யானத்தின் ஆணையை, சரியாக நிறைவேற்றி அதனை அற்புத சேவையாக சமர்ப்பித்தவர்கள் ஸ்ரீவேதநிதி தீர்த்தர், ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர் மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். ஸ்ரீவேதநிதி தீர்த்தர் ஸ்வ-ஷாகா- வேத அத்யயனத்தைப் போல ஆக்யானத்தை அத்யயனம் செய்தவர். அதன் பலனாக அவரால் அத்யாயகரண செய்ய முடிந்தது. அணுவ்ருந்தாவனாக்யானத்தை இயற்றி, ஷிலா லேகன செய்து நிறுவினார். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யர், மத்வவாட மடத்திலிருந்து, வியாஸமுஷ்டி கொண்டு வந்து, ஸ்ரீகிருஷ்ண சன்னிதி மற்றும் ஸ்ரீமடத்தின் பரம்பரையின் பீடத்தில் வைத்து, ஸாமானாதிகரண பத்ததியினால் பூஜித்த சம்பிரதாய பிரவர்த்தகர் ஆனார். ஆக்யானத்தின் பாடம் சொல்லி, சிஷ்யர்கள் மூலமாக

வியாக்யானம் எழுத வைத்தார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஒரு தவம் போல, பழைய சுத்த பாடத்தை உலகிற்கு அளித்தார். அதற்கேற்ப, ஷிலா லேகன செய்வித்து, ஸோதெயில் நிறுவி சமர்ப்பித்தார். இவை அனைத்தும் மிகச்சிறப்பான தெய்விக செயல்களே ஆகும்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஆக்யானத்தின் பாட ஆராய்ச்சி செய்யும்போது, நூற்றுக்கணக்கான முறை அதனை படித்திருந்தார். இவை அனைத்தும் ஒரு தவத்தைப் போல நடந்து, தத்வார்த்தத்தை தெரிந்து கொள்ள உதவியாயிற்று. ஒவ்வொரு கட்டத்திலும் மகிமார்த்த மனனம் செய்தார். ஸ்ரீராஜரின் அருளுக்காக அவரிடம் சரணாகதி அடைந்தார். அவரிடமிருந்து அருளைப் பெற்று தன்யர் ஆனார். அங்கங்கு இருக்கும் விஷயங்களின் ரகசிய அர்த்தங்களை அறிந்தார். விஷயம் தெளிவாகத் தெரிந்தது. பின்னணி சுலபமாக புரிந்தது. சம்பந்தம் விளங்கியது. ஸ்ரீராஜரின் விருந்தாவன மகிமா சொல்லும்போது அதன் அருமையை புரிய வைத்தார். அது அந்தர்யாமி உபாசனைக்கு ஒரு உதாரணம் என்று யதார்த்தம் ஆனது. ஒன்றாம், நான்காம், ஐந்தாம், ஏழாம் மற்றும் 17ம் ஆக்யானங்களில் உள்ள உக்திகளால் விளக்கப்பட்ட பிரம்மாண்ட மற்றும் பிண்டாண்டங்களில் இருக்கும் தாத்விக கார்ய விதானம் அறிந்தார். ஆனால், அனேக வித்வாம்சர்கள் மற்றும் மற்றவர்கள் ஸ்ரீகளவரின் ஆக்யான சம்பந்த ஞான- மேருத்வத்தை கவனிக்கவில்லை. இது ஒரு துர்பாக்கியமே. மாறாக, ஆக்யான சம்பந்தமான ஸ்ரீகளவருக்கு அவ்வளவு விஷயம் தெரியவில்லை என்றே நினைத்தனர். பூஜ்யரின் இந்த சிந்தனையினால் அந்த நினைப்பு மறையட்டும் என்றே நினைக்க வேண்டும்.

## மஹிமார்த்தம் சொல்லிய மகிமர்

என் தந்தையான ஸ்ரீகிருஷ்ணாசார்யர் மற்றும் பூஜ்ய தாத்தாவான ஸ்ரீவிஜயீந்திராசார்யர், ஸ்ரீராஜரின் ஏகாந்த பக்தராக இருந்த வாளவேகர் ஸ்ரீவெங்கண்ணாசார்யரின் சிஷ்யர்கள் ஆவர். பல ஆண்டுகள் குருகளிடமிருந்து ஸ்ரீபாகவத ஸாரோத்தார மற்றும் ஆக்யானாதி சம்பந்தபட்ட கிரந்தங்களை கேட்டு அருள் பெற்றனர். இதன் காரணமே ஆக்யானக்ருதி சம்பந்த ஈடுபாட்டினை கொடுத்தது. படன, பாராயணாதிகள் நிரந்தரமாக நடந்தன. பூஜ்ய தந்தை அவர்கள், ஸ்ரீமுஷ்ணாசார்யர் இயற்றிய டிப்பணி சகிதமாக மொத்த ஆக்யான உபதேசத்தை குருகள் உபதேசித்த கிரமத்தில் உபதேசம் செய்தனர். இத்தகையவர்களின் அருளால், ஸ்ரீரகுப்ரவீர தீர்த்தரின் மூலவ்ருந்தாவனா சன்னிதி பீமனகட்டெயில் யதாமதி யதாசக்தி ஆக்யானத்தின் தாத்பர்யத்தை நிவேதிக்கும் சௌபாக்கியம் மற்றும் வாய்ப்பு எனக்கு கிட்டியது.

பூஜ்ய ஸ்ரீபாதங்களவரின் தலைமையில் மற்றும் பற்பல ஸ்ரீராஜரின் பக்தர்களின் எதிரில் தினமும் 7 முதல் 8 மணி வரை 26 நாட்களில் ஸ்ரீவ்ருந்தாவனாக்யானத்தின் சிந்தனையை யதாமதி கூறினேன். இந்த காலத்தில், ஸ்ரீபீமனகட்டெ ஸ்ரீகளவர் செய்வித்த ஏற்பாடுகள், உதவிகள், காட்டிய அருள் ஆகியவை வர்ணனைக்கு அப்பாற்பட்டவை. பூஜ்யர் முழு நேரமும் அங்கேயே வீற்றிருந்தார். கடைசி நாளின் மங்கள மகோத்ஸவத்திற்கு ஸோதெ ஸ்ரீவாதிராஜ மடாதீசராக இருந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதங்களவர் திக்விஜயம் செய்து 'ரத்னம் ஸமாகச்சதி காஞ்சனேன' என்பதை போல ஒளி கூட்டினார். தம் அருளுரையில் ஸோதெயிலும் இத்தகைய பிரவசனம் செய்யக் கூறினார். பிறகு, பௌகாவியில் இருந்த என் வீட்டில் துவங்கி, பல இடங்களில் வ்ருந்தாவனாக்யானத்தின் மகிமானுவாத சேவையை யதாமதி செய்திருக்கிறேன்.

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய காலத்தில் (1996-97) சுமார் 53 நாட்கள் வரை உடுப்பியின் ஸ்ரீகிருஷ்ண மடத்தின் ராஜாங்கணத்தில் பூஜ்யரின் தலைமையில் ஆக்யான பிரவசனம் செய்யும் சந்தர்ப்பம் கிடைத்தது. பிறகு வந்த ஸ்ரீபேஜாவர மற்றும் ஸ்ரீகிருஷ்ணாபுர மடத்தின் பர்யாய காலங்களிலும் ஆக்யான பிரவசன சேவை செய்தேன். ஸ்ரீஹரி வாயு குருராஜ குருகளின் குறிப்பினால், பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மொத்த வ்ருந்தாவனாக்யான பாடத்தை, பழைய கையெழுத்துப் பிரதியுடன் ஒப்பிட்டு, சம்மதமான, ஷுத்த பாடத்தை ஷிலாலேகனம் செய்து ஸ்ரீராஜரின் ஆணைப்படி ஸோதெயில் இருக்கும் பஞ்ச வ்ருந்தாவனத்தின் எதிரில் ஸ்தாபித்து, 'ஆக்யான மந்திர'த்தை வாதீஷவரத மத்வேஷ ஹயவதன தேவனுக்கு சமர்ப்பித்தார். அந்த சமயத்தில் இன்னொரு முறை ஆணை வந்தது.

பிறகு, 2001 முதல் 2005 வரை சாதுர்மாத காலத்தில் ஸ்ரீராஜரின் சன்னிதான ஸோதா க்ஷேத்திரத்தில் பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் தலைமையில் ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்தின் மகிமையை யதாமதி விளக்கினேன். சிறந்த ஸாதகரும், வாதிகளும், சூக்ஷ்ம மதிகளும், ஸ்ரீவாதிராஜரின் சாதுர்ய, ரகசியங்களை முழுமையாக அறிந்தவரும், சம்பிரதாயார்த்த கோவிதரும், ஏகாந்த ப்ரியரும், இலைமறை காயினைப் போல வாழ்க்கையை நடத்தியவருமான ஸ்ரீகளவரின் வ்ருந்தாவனாக்யானத்தின் சம்பந்தமான ஞானநிதி கடல்போல அபாரம் மற்றும் அபரிமிதம். அந்த சமயத்தில் தினமும் இரவில் 9 மணிக்கு தம் இருப்பிடத்திற்கு வருமாறு சொல்லி, அந்த நாளின் பிரவசன சம்பந்தபட்ட அனேக புதிய விஷயங்களை, விசேஷ மகிமார்த்த, சம்பிரதாயார்த்த பின்னணிகளை சொல்வதுடன், பல இடங்களில் விஷயங்களை திருத்தியும் அருளினார்.

பூஜ்ய ஸ்ரீகளவரின் சிந்தனையின் உயரம், ஆழம், அகலங்களை முழுமையாக அறிய முடியாதவன் நான். ஆனாலும், சிரத்தையுடன் டிப்பணிகளை படி எடுத்து, படித்தேன். பூஜ்யரின் புண்ய ஸ்மரணையுடன் செய்த மனனம், என் தகுதிக்கேற்ப என் மனதில் நின்றது. அபாரமான சாகரத்திலிருந்து ஓரிரு துளிகளை மட்டுமே சேகரித்த தகுதி என்னுடையது. ஸ்ரீகளவரின் அனேக சாஸ்திர கிரந்தங்களின் ஆராய்ச்சி அபாரம். ஆக்யான விஷயத்தில் அது மேலும் அதிகம். ஒவ்வொரு மஹிமா அம்சத்தையும் ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன சன்னிதிக்கு அர்ப்பணித்து சொல்லும் பக்தி ஸ்ரீகளவருடையது.

## சமர்ப்பித்த தங்க ஆபரணத்தை திரும்ப கொடுத்தார்

பள்ளாரியில் சத்ய நாராயணபேட்டை என்று ஒரு பகுதி. அங்கு ஸ்ரீசத்ய நாராயண தேவஸ்தானம் இருக்கிறது. அதன் பின்னால் தம்மூர் வம்சத்தினர் வசித்து வந்தனர். ஸ்ரீனிவாஸாசார்யர் என்பவர் அங்கு வசித்தார். சாத்விக தம்பதிகள். தர்மசீலர்கள். பல்லாண்டுகளாக ஸ்ரீஹனுமந்த தேவரின் தேவஸ்தானத்தின் அர்ச்சகராக இருந்தார் அவர். ஸோதே ஸ்ரீராஜரின் விஷயத்தில் விசேஷ மஹிமா ஞானம் கொண்டு அவரை சரணாகதி அடைந்தவர்.

ஒருமுறை அவருடைய மனைவி ஸ்ரீமதி. ராதாபாய் அவர்கள் உறவினர்களுடன் ஸோதெ வந்தார். கிளம்பும்போது கணவருக்கு தெரியாமல் அனைத்து ஆபரணங்களையும் மூட்டை கட்டிக் கொண்டு வந்திருந்தார். அவருடைய சிந்தனை இவ்வாறு இருந்தது. 'இந்த தேகத்திற்கு எவ்வளவு அலங்காரங்களை செய்தாலும், எதுவும் பிரயோஜனம் இல்லை. அந்த சுவர்ணாபரண தாரணையினால் ஐஹிக பாரத்ரிக எந்த சாதனையும் இல்லை. ஸ்ரீஹரிப்ரீதியோ இல்லவே இல்லை. ஆகையால், இவற்றை ஸ்ரீஹரி குருகளின் ப்ரீதிக்காக குருசன்னிதானத்திற்கு சமர்ப்பிப்பதே சிறந்தது'.

இவ்வாறு சிந்தித்து அவர் தனியாக ஸ்ரீகளவரின் சன்னிதிக்குச் சென்று, அனைத்தையும் சமர்ப்பித்தார். ஸ்ரீகளவருக்கு ஆச்சரியம் ஆயிற்று. இந்தப் பெண்ணுடன் கணவன் வரவில்லை. அவருடைய சம்மதத்தைப் பற்றி தெரியவில்லை. அது இல்லாமல், பெண்களுக்கு ஆபரணங்கள் மிகவும் இஷ்டமானவை. இவை அனைத்தும் சமர்ப்பணத்திற்கு அல்ல' என்று சிந்தித்து, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. வேண்டாம் என்று கூறிவிட்டார். கணவரின் அனுமதியின்று செய்யும் இந்த செயல் சரியல்ல என்றார். அந்த பெண்மணியோ கண்ணீர் விட்டு, அவற்றை ஏற்றுக்கொள்ளும்படி திரும்பத்திரும்ப வேண்டிக் கொண்டாள். பின் சிறிது நேரம் கழித்து, அந்த ஆபரணங்களில் ஒன்றை மட்டும் ஏற்றுக்கொண்டு, மற்றவற்றை மந்திராட்சதையுடன் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

## குருஸ்மரணை சரியான வழியைக் காட்டியது

ஒரு முறை பெங்களூரிலிருந்து 4-5 குடும்பத்தினர் சேர்ந்து ஸோதெ வந்தனர். அவர்களில், ஜி. பவமான என்பவர் நேரம் கிடைத்த போதெல்லாம் ஸோதெ வந்து செல்பவர். அவர்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் மிகச்சிறந்த ஆளுமையால் ஈர்க்கப்பட்டவர். ஸ்ரீகளவர் மேல் அபாரமான கௌரவம் வைத்திருத்தார். பல வித சேவைகளை செய்து வந்தார். அவர் பல முறை தபோவனத்திற்கு சென்று வந்தவர். அந்த முறையும் உடன் வந்தவர்களுடன் தபோவனம் செல்வதாக திட்டம். மதியம் பிரசாதத்திற்குப் பிறகு ஸ்ரீபவமான, அனைவரையும் தபோவனத்திற்கு அழைத்துச் சென்றார். வழிகாட்டி வேறு யாரும் இல்லை.

அந்த சன்னிதானம் அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. அங்கு இருந்த ஸ்ரீராஜர் தவம் செய்த பாறை, பஞ்சலிங்க, கோகர்ப்ப மற்றும் ஷிலாலேகன ஆகிய அனைத்தையும் பார்த்தார். மக்கள் தண்ணீரில் இறங்கி விளையாடினர். ஆக, அனைவரும் மிக்க மகிழ்ச்சியில் இருந்தனர். மாலை 4 மணி ஆயிற்று. அனைவரும் திரும்பத் தயாராயினர். காட்டில் ஒத்தையடிப் பாதை (தற்போது இருக்கும் வழி அல்ல). வழி தவறினர். மொத்தம் 19 பேர். வழி தேடி அனைவரும் சோர்வடைந்தனர். காட்டில் அடுத்து என்ன செய்வதென்று தெரியவில்லை. இருட்டு பரவியது.

ஸ்ரீபவமானர், ஒரு முறை மனதில் ஸ்ரீகளவரின் ஸ்மரணை செய்து வேண்டினார். இதனை அனைவரிடமும் கூறினார். அனைவரும் ஒரு முறை உரத்த குரலில் 'பாஹி விஷ்வோத்தமா' என்று கூவினர். அந்த சமயத்தில் ஒரு பசுவின் ஒலி கேட்டதைப் போல தோன்றியது. அனைவரும் மௌனமாக இருக்க, இன்னும் 2 முறை அந்த குரல் கேட்டது. அப்போது அனைவருக்கும் தைரியம் வந்ததைப் போல ஆயிற்று. அந்தக் குரல் சிறிதுசிறிதாக அருகில் வந்தது. குரல் வந்த திசை நோக்கி சென்றபோது, காடு முடிந்து, மடம் வந்தது.

அப்போது மணி 6.30. பூஜாதிகள் துவங்கியிருந்தன. ஸ்ரீபூதராஜருக்கு பல-சமர்ப்பணம் செய்தனர். இரவு போனத்திற்குப் பிறகு, பூஜ்ய ஸ்ரீகளவரைக் கண்டு வணங்கி விவரத்தைக் கூறினர். அவை அனைத்தும் ஸ்ரீபூதராஜரின் மகிமா விஷயங்கள் என்று ஸ்ரீகளவர் கூறினார்.

## தர்ப்பண தீர்த்தம்
## தொழு நோயை குணப்படுத்தியது

சென்னை நங்கநல்லூரில் ஸ்ரீ.ஜி. பிராணேஷ ராவ் என்பவர் வசித்து வந்தார். ஒரு நிறுவனத்தில் மூத்த அதிகாரியாக பணி புரிந்து வந்தவர். நித்ய பூஜாதி கர்மங்களை செய்பவர். அவருக்கு 48 வயதாகும்போது, வலது புறம் கைகளுக்குக் கீழே வெள்ளை பரவியது. கவலை வந்தது. சிகிச்சைக்கு தயார் ஆனார். ஆனால் அந்த சிகிச்சையில் வெண்மை குறையவில்லை.

ஸ்ரீஹரி குருகளின் சேவையை செய்யத் துவங்கினார். நேராக ஸோதெ வந்தார். அது சாதுர்மாத சமயம். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் திவ்ய சன்னிதானம். அடுத்த நாளிலிருந்து சேவை தொடங்கலாம் என்று நினைத்தார். மாலையில் ஸ்ரீகளவரை சந்தித்து முறையிட்டார். அன்று இரவு பிராணேஷராவ் அவர்களுக்கு கனவு. கனவில் அருமையான தேஜஸ்ஸுடன் கூடிய வயதான பிராமணர் ஒருவரின் தரிசனம். 'இதற்கு இது பரிகாரம்' என்று காட்டினார். அது என்னவெனில், வெண்மையைக் காட்டி தர்ப்பண கொடுத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீகளவரை காட்டினார்.

காலையில் அலுவலக சிப்பந்தி ஒருவரின் மூலமாக ஸ்ரீகளவரிடம் அந்த விஷயத்தைக் கூறி வேண்டினார். அது ஸ்ரீபூதராஜரின் ஆணை என்று அறிந்தார். உடனே ஸ்ரீகளவர், அன்று ஸ்ரீதன்வந்திரியை அதிகமாக ஜெபித்தார். சேவையுடன் தர்ப்பண தீர்த்த பிராசனம் ஆயிற்று. ஐந்து நாட்களிலேயே அந்த வெண்மை குறைந்தது. தேகம் முதலில் இருந்ததைப் போலவே ஆயிற்று. சப்தாஹ சேவை செய்து சமர்ப்பித்தார். அங்கிருந்து புறப்படும் முன்னர் ஸ்ரீகளவரிடமிருந்து மந்திராட்சதை ஏற்றுக் கொண்டார்.

ஸ்வாமி. இவை அனைத்தும் தங்களின் கருணையின் பலன் என்றார். அதற்கு ஸ்ரீகளவர் - இவை அனைத்தும் மந்திரத்தின் பலன் மற்றும் ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் கருணை - என்றார். மந்திரட்சதை கொடுக்கும்போது ஸ்ரீகளவர் ஸ்ரீராஜரின் ம்ருத்திகையை கொடுத்து, தினமும் அதனை பிராசனம் செய்யுமாறு கூறினார். ஸ்ரீபிராணேஷராவ் அவர், சென்னைக்குத் திரும்பினார்.

ஸ்ரீகளவரின் மந்திரஸித்தியை கொண்டாடினார். சிகிச்சை அளித்த மருத்துவர் இதனை அறிந்து வியப்படைந்தார்.

பிறகு ஸ்ரீகளவரின் நான்காம் பர்யாய (1996-97) சமயத்தில் ஸ்ரீபிராணேஷராவ் அவர் உடுப்பிக்கு வந்து சேவை செய்து தன்யர் ஆனார்.

## ம்ருத்திகை ஏற்றுக்கொண்டதால் மறதி விலகியது

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய முடிந்தது. ஸ்ரீகளவர் ஸோதெயில் வசித்தார். அது 1998 பிப்ரவரி மாதம். தாவணகெரெ ஸ்ரீபிரகாஷராவ் என்பவர் குடும்பத்துடன் ஸோதெ வந்தார். அவர் பிராமணர் அல்லாதவர். ஸ்ரீகளவரிடம் தமது பிரச்னையை சொல்லி, பலமந்திராட்சதை பெற்றுக் கொள்ள வந்தார். மதியம் 4 மணிக்கு ஸ்ரீகளவர் இருந்த இடத்திற்கு வந்தனர். அப்போது நானும் அங்கு இருந்தேன். அப்போது ஸ்ரீபிரகாஷராவ் கூறியது. 'ஸ்வாமி, தம் பர்யாய காலத்தில் உடுப்பிக்கு வந்திருந்தோம். என் மகனின் (சஞ்சீவ) ஞாபக மரதியைப் பற்றி சொல்லி, அதன் பரிகாரத்தை வேண்டினேன். தாங்கள் ஸ்வாமியிடம் வணங்கி கொடுத்த மந்திராட்சதை மற்றும் மிருத்திகையை நம் மகன் ஏற்றுக் கொண்டான். இப்போது அவனுடைய மறதி தீர்ந்திருக்கிறது. படித்தது மற்றும் மற்றவர்கள் கூறியது அனைத்தையும் நன்றாக நினைவில் வைத்துக் கொள்கிறான். கேட்கும்போது டக்கென்று பதில் சொல்கிறான். இதற்கு தாங்களே காரணம்' என்றார்.

அதற்கு ஸ்ரீகளவர் 'ஸ்ரீராஜர் காமதேனு. பக்தர்களுக்கு கருணையை அளித்து அருளியிருக்கிறார். அவரை நாம் நம்பவேண்டும்' என்றார். அவர்கள் வெளியே வந்தனர். நானும் வெளியே வந்து அவர்களுடன் பேசினேன். 'இவன் (சஞ்சீவ) 9 ஆண்டுகள் வரை சரியாகவே இருந்தான். பிறகு அவனுக்கு மறதி நோய் வந்தது. படித்தது, கேட்டது என அனைத்தையும் மறக்கும் நிலை. இதனால் பள்ளிக்கு செல்வதும் நின்றுவிட்டது. அப்போதே என் நண்பரான ரகூத்தமர் என்பவர், ஸ்ரீஸோதெ சென்று ஸ்ரீவிஷ்வோத்தமரை சரணாகதி அடையவும் என்றர். அந்த பயணமும் கைகூடவில்லை.

அதற்குள் ஸ்ரீகளவரின் பர்யாய சமயம். அவர் உடுப்பியில் இருந்தார். நாங்களும் அங்கு சென்று அவரை வேண்டினோம். அவர் கொடுத்த மிருத்திகையில் இவன் இப்போது நலம் பெற்றுள்ளான். ஸ்ரீகளவர் ஒரு பவாட புருஷர்' என்றார். இப்போது அந்த சஞ்சீவ இஞ்சினியரிங் படிக்கிறார் என்று தெரிய வருகிறது.

## விஷ்ணு தூதர்களை கண்ட விஷ்வோத்தமர்

2002ம் ஆண்டு. உடுப்பியில் ஸ்ரீபலிமாரு மடத்தின் பர்யாய. யாருடைய பர்யாயமாக இருந்தாலும், ஜூன் மாதத்தில் ஸ்ரீவிஷ்வோத்தமர் சுமார் 15 நாட்கள் வரை உடுப்பியில் தங்குவது வழக்கம். அப்போது அவரது ஆராத்ய தெய்வத்தை மற்றும் ஸ்ரீராஜரின் பாதுகா ஸன்னிதானத்தை ஸ்ரீகிருஷ்ண மடத்தில் வைப்பது வழக்கம். அப்போது தினம்தோறும் மத்வ தீர்த்த ஸ்னானம், ஜப தபம், ஸ்ரீகிருஷ்ண சன்னிதியில் ஒரு பூஜை, ஸ்ரீமுக்யபிராண சன்னிதி மற்றும் ஸ்ரீராஜரின் சன்னிதியில் அபிஷேகாதிகள். மத்வ தீர்த்தத்தில் தர்ப்பண, வ்ருந்தாவன தர்சனாதிகள் - இவை அனைத்தையும் முடித்து மடத்திற்கு வருவார். இவை அனைத்தும் காலையில் நடப்பவை.

ஜூன் 22, 2002 அன்று நான் உடுப்பிக்கு சென்றேன். ஸ்னான ஆன்ஹிகங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருடன் வ்ருந்தாவனாதிகளின் தரிசனம் செய்து, அவருடன் மடத்திற்கு வந்தேன். ஸ்ரீகளவர் அன்று, மடத்தில் சிம்மாசனம் இருக்கும் முன்பாகத்தின் இடத்தில் கீழே அமர்ந்து, ஸ்ரீகோவிந்தண்ணா மூலமாக சொல்லி அனுப்பினார். நான் தேவக்ருஹத்தின் முன்பு அமர்ந்து மந்திர ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டிருந்தேன். ஸ்ரீகோவிந்தண்ண ஸ்ரீகளவரின்

ஆணையை கூறினார். சன்னிதிக்குச் சென்று சாஷ்டாங்கமாக வணங்கினேன். வாத்ஸல்ய மூர்த்திகளான ஸ்ரீகளவர், நலன் விசாரித்தார். அனைத்தும் தங்களின் அருள் என்று கூறினேன்.

ஸ்ரீகளவர் பல விஷயங்களைப் பற்றி பேசினார். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யர் இயற்றிய ஹரிகதாம்ருதசார வியாக்யான – வியாஸ தாஸ சித்தாந்த கௌமுதீயின் மங்களாசரண பாகத்தில் இருக்கும் 'மதிமந்தம் ஹனுமந்தம்' என்னும் ஸ்லோகத்தின் பாடத்தைப் பற்றி கேட்டு, பதில் கூறினார். பூஜ்யர் கூறிய பதில் நிம்மதியை அளித்தது. அந்த வியாக்யானத்தை பார்த்து, அது மிகவும் அற்புதமான வியாக்யானம் என்று புகழ்ந்தார். அந்த சமயத்தில் அந்த இடத்தில் வேறு யாரும் இருக்கவில்லை. ஒரு முறை எழுந்து பக்கத்து மற்றும் நேராக இருந்த கதவினை மூடினார்.

பிறகு, அதற்கு முந்தைய நாளில் நடந்த கனவினைப் பற்றி கூறினார். இரவு 3.30 மணிக்கு மேல் வந்த கனவு. கனவில் தெரியும் இடம் – உடுப்பி ஸ்ரீவாதிராஜமடம். இரு விஷ்ணு தூதர்கள் வருகை. சதுர்புஜங்களைக் கொண்டவர்கள். கிரீடதாரிகள். ஆஜானுபாகு. ஊர்த்வ திலக. கழுத்தில் மாலை. பீதாம்பர தாரி. தேஜஸ்விகள். அவர்கள் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு முதலில் கூறியது 'நீங்கள் வந்த காரியம் ஆயிற்று. ஸ்வாமி மகிழ்ந்திருக்கிறான். குரு ஸ்ரீவாதிராஜரின் ஆணையை செய்திருக்கிறீர்கள். ஸ்ரீபூதராஜரின் அருளைப் பெற்று மற்றவர்களுக்கும் சொல்லியிருக்கிறீர்கள். இனி புறப்படலாம்' என்றனர்.

அதற்கு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் 'ஆயிற்று. தயாராக இருக்கிறேன்' என்று பதில் வந்தது. இதனைக் கேட்ட விஷ்ணு தூதர்கள் ஒரு நொடி மௌனம் ஆயினர். பின் ஸ்ரீகளவரிடம் வந்து மகிழ்ந்து இவ்வாறு கூறினர். 'நீங்கள் மகாபாக்யசாலிகள். ஸ்ரீஹரி குருகளின் அபார கருணைக்கு பாத்திரர் ஆகியிருக்கிறீர்கள். இன்னொரு காரியம் உண்டு. (இதை சொல்லும்போது தெரிந்தது ஸோதெயில் இருந்த மடத்து சன்னிதி). இன்னும் ஐந்து ஆண்டுகள் ஸ்ரீராஜரின் சேவையை செய்து தன்யர் ஆகுங்கள்' என்றனர்.

பிறகு, விஷ்ணு தூதர்கள் மறைந்தனர். ஸ்ரீகளவருக்கு உடனடியாக விழிப்பு வந்தது. விஷ்ணு தூதர்களின் பேச்சினை நினைத்துப் பார்த்தார். இதை சொல்லும்போது, ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜர்களை நினைத்துக் கொண்டார். இவற்றைக் கேட்டு, வியப்பு, மகிழ்ச்சி அடைந்தேன். பக்தியுடன் இவ்வாறு கேட்டேன். 'ஸ்வாமி, இன்னொரு காரியம் உண்டு என்று கூறியது மற்றும் ஸோதெ சன்னிதானத்தை காட்டியது என்னவாக இருக்கலாம்?' அதற்கு குருகள் – 'உத்தராதிகாரி ஸ்வீகார காரியம் மற்றும் அது ஸோதெயில் நிறைவேற வேண்டும்'. இவற்றை ஸ்ரீராஜர் நடத்த வேண்டும். ஸ்ரீபூதராஜர் இருக்கிறார். நம் மடத்தில் அனைத்தையும் நடத்துவது அவரே. நாம் மனஸா அவரை வேண்டினால் போதுமானது. அனைத்தும் சுபமாக நிர்விக்னமாக நிறைவேறிவிடும் என்றார்.

அந்த சமயத்தில் ஸ்ரீமடத்தின் காரியாலய சிப்பந்தி கதவைத் தட்டி உள்ளே வந்தார். நான் நமஸ்கரித்து வெளியே வந்தேன். ஸ்ரீவிஷ்ணு தூதர்களின் தரிசனம் மற்றும் அவர்களிடம் செய்தி பெற்ற நம் ஸ்ரீகளவரே தன்யர் என்று நினைத்து மகிழ்ச்சி கொண்டேன். (இவற்றை அன்றே ஒரு குறிப்பாக எழுதி வைத்துக்கொண்டேன்).

பூஜ்ய ஸ்ரீகளவர் வ்ருந்தாவன பிரவேசம் செய்தது 2007 ஆகஸ்டில். கனவில் வந்ததைப் போல, 5 ஆண்டுகள் ஆகியிருந்தது. இன்னும் கனவில் ஸோதெ மடம் காட்டியது, உத்தராதிகாரி ஸ்வீகார காரியம் மற்றும் பூஜ்ய ஸ்ரீகளவர் ஸோதெயில் நிலைக்க வேண்டும் என்று (வ்ருந்தாவனம் ஆக வேண்டும்) ஆசை. அதையும் பிறகு அப்படியே செய்ய வேண்டியதாயிற்று. குருகள் 2006 ஜூன் மாதத்தில் உத்தராதிகாரியை ஏற்றுக்கொண்டார். அந்த அனைத்து கார்யகிரமங்களும் ஸோதெயிலேயே நடந்தன. ஸ்ரீவிஷ்ணுவின் செய்தி, ஆணையை விஷ்ணுதூதர்கள் கனவில் கூறியதைப் போல ஆனது, பூஜ்ய ஸ்ரீகளவரின் விஷயத்தில் அபாரமான மகிமையே ஆகும்.

## மன்னிப்பு கேட்கத் தேவையில்லை

ஸ்ரீஸோதெமடத்தில் தீர்த்தம் ஸ்வீகரிக்கும்போது ‘அணுவ்ருந்தாவனாக்யான’த்தை சொல்லும் வழக்கம் உண்டு. பிறகு, மத்வவிஜயத்தை சொல்வதுண்டு. அணுவ்ருந்தாவனாக்யான சொல்வதற்கு வெறும் 4-5 நிமிடங்களே ஆகும். ஆகையால், முதலில் அதனை சொல்லி, பிறகு மத்வவிஜயம் சொல்வார்கள். இது ஸ்ரீஸோதெ மடத்தின் பர்யாயத்திலும் இப்படியே நடக்கிறது. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய (1996-97), ஸ்ரீஸர்வக்ஞ பீடத்தில் தீர்த்தம் கொடுக்கும்போதும் இதே பழக்கம் இருந்தது. முதலில் அணுவ்ருந்தாவனாக்யானம்; பிறகு மத்வவிஜய பாராயணம். இது சிலருக்குப் பிடிக்கவில்லை. ஸ்ரீராஜரின் ருஜுத்வ மற்றும் பர்யாய ஏற்பாட்டில் பூஜ்யரின் பங்கு ஆகியவற்றை அவர்கள் ஒப்புவதில்லை. வித்வாம்சர் ஒருவர் இதைப் பற்றி எதிர்த்து, ஒரு கட்டுரை எழுதினார். மத்வவிஜயத்தை முதலில் சொல்லாமல், பரம்பரையின் குருஸ்தோத்திரம் சொல்வது சரியல்ல என்று கட்டுரை எழுதி ஒரு பத்திரிக்கையில் அதனை வெளியிட்டார்.

அந்த விஷயம் ஸ்ரீகளவருக்கு தெரிந்தது. அவர் கோபப்படவில்லை. அமைதியாக இருந்தார். சில நாட்களுக்குப் பிறகு, அந்த வித்வாம்சர் (வேறு ஒருவரின் கட்டாயத்தின் பேரில் இருக்கலாம்), ஸ்ரீகளவரைக் கண்டு மன்னிப்பு கேட்க வந்தார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் படகு- மாளிகையில் கொட்டகையில் இருந்தார். வித்வாம்ஸரின் வருகை மற்றும் நோக்கம் அவருக்கு புரிந்தது. அப்போது ஸ்ரீகளவர் கூறியது. ‘அவர் எதிர்வாதம் புரிந்து, அதனை வெளியிட்டது நமக்கு பிரச்னை உண்டாக்கவில்லை. நமக்கு எவ்வித கோபமும் இல்லை. நமக்கு தொந்தரவு உண்டாகியிருந்தால், அவர் மன்னிப்பு கேட்க வேண்டியிருந்தது. இப்போது அதன் தேவையேயில்லை என்று அந்த வித்வாம்ஸருக்கு சொல்லிவிடுமாறு கூறி, சந்திக்கும் மற்றும் மன்னிப்பு கேட்கும் தேவையே இல்லை என்றுவிட்டார்.

## குரு வழங்கிய மிருத்திகை, பயம், தாபம் ஆகியவற்றை விலக்குகிறது

ஆதோனியைச் சேர்ந்த திரு.ஜி.குண்டுராவ் என்னும் கிருஹஸ்தர். ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை ஒப்பிய ஸ்ரீராஜரின் பக்தர். ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் அருளைப் பெற்றவர். வங்கியில் உயர் பதவியில் இருந்தார். 2003ம் ஆண்டில் திடீரென்று இறந்தார். மனைவி, மகன், மகள் ஆகியோரை விட்டுச் சென்றிருந்தார். அவர் இறந்து 1.5 மாதங்கள் ஆகியிருந்த சமயத்தில், ஒரு நாள், ஸ்ரீகுண்டுராயரின் மனைவி படுத்திருந்தபோது, திடீரென்று யாரோ அவரை கழுத்தைப் பிடித்து இறுக்குவதைப் போல இருந்ததாம். மக்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. வீட்டில் வேறு யாரும் இல்லை. அப்பாவை இழந்த நாம், அம்மாவையும் இழந்துவிடுவோமோ என்று பயந்தனர். அம்மா என்று அழைத்தாலும், தாய்க்கு பேச்சே வரவில்லை.

அப்போது அவர்களுக்கு ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் புண்ய ஸ்மரணையை செய்தனர். மகளுக்கு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் கொடுத்த ஸ்ரீராஜரின் மிருத்திகை நினைவுக்கு வந்தது. உடனடியாக உள்ளே சென்று, அந்த மிருத்திகையைக் கொண்டு வந்து, தாயின் கையில் கொடுத்தனர். ஸ்ரீராஜரே முதலான ஸ்வோத்தமரை நினைத்து, பிரார்த்தனை செய்தனர். உடனடியாக தாயின் நிலைமையில் முன்னேற்றம் வந்தது. மக்களின் கவலை குறைந்தது.

அடுத்த நாள், ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் சன்னிதிக்கு சென்று வணங்கினர். தாயின் நிலை பூர்ண குணமானதும், உடனடியாக ஸோதெ சென்றனர். ஸ்ரீகளவரைக் கண்டு, வணங்கி, இந்த சம்பவத்தைக் கூறினர். ஸ்ரீகுருராஜர் – ஸ்ரீபூதராஜரின் மூலமாக, துஷ்ட சக்தியை துரத்தியிருக்கிறார். இனி எந்த பிரச்னையும் இல்லை – என்று ஸ்ரீகளவர் ஆசிர்வதித்தார். சேவை செய்து, பின் அனைவரும் தம் இருப்பிடம் திரும்பினர்.

## வடுவிற்கு செய்த சமாதானம்

ஸ்ரீ நரசிம்ம ஜயந்தியின் காலம். ஸ்ரீகளவர் ஸோதெயில் இருந்தார். அப்போது ஒரு உபநயன நிகழ்ச்சி. அன்று வைசாக சுத்த த்ரயோதசி நாளாகும். வடுவின் பெயர் வாமன. 10 வயது. தந்தையின் பெயர் தெரியவில்லை. பெங்களூரு ராஜாஜி நகரைச் சேர்ந்தவர்கள். ஆசாரவந்தர். இது 1999ல் நடந்ததாகும். உபநயன நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தமது பூஜைகளை முடித்து, தீர்த்தத்தைக் கொடுத்து தம் இடத்தில் இருந்தார். வடு வாமனன் மிகுந்த அறிவாளியாக இருந்தான். நிகழ்ச்சியில் புரோகிதர் சந்த்யாதி கர்மங்களை சொல்லும்போது, செய்யும்போது, கிழக்கு மற்றும் மேற்கு திசைகளை பார்த்தவாறு செய்யவும் என்று கூறினார். வடு கேட்டான். வடக்கு மற்றும் தெற்கு திசைகளைப் பார்த்து ஏன் செய்யக்கூடாது என்று கேட்டான். இதற்கு சரியான காரணங்கள் சாஸ்திரத்தில் உள்ளன, ஆகவே சொன்னபடி செய் என்று சொல்லி அதட்டினார் புரோகிதர். வாமனனும் சரியென்று அமைதியானான்.

ஹரிபக்திலதா'வின் முதலாம் மஞ்சரி, பாகத்தை கேட்பதற்கு நான் உள்ளே இருந்தேன். பாத பூஜை ஆனது. ஸ்ரீகளவர், ஸ்ரீகிருஷ்ணமந்திர உபதேசம் செய்வதற்கு தயார் ஆனார். ஸ்ரீகோவிந்தண்ண வந்து, கிழக்கு நோக்கி அமர்வாயாக என்று கூறினார். உடனே வாமனன், மறுபடி அதே கேள்வியைக் கேட்டான். ஸ்ரீகளவர் வாமனனை அழைத்து இவ்வாறு கூறினார். 'ஸூர்யன் கிழக்கில் உதிக்கிறான். அவன் உதிப்பதால் உலகிற்கெல்லாம் ஒளி கிடைக்கிறது. அவன் மேற்கில் மறையும்போது இருட்டு. நம் அனைவருக்கும் வெளிச்சம் வேண்டும். இருட்டு வேண்டாம். ஸந்த்யாவந்தனை ஒரு சிறப்பு பிரார்த்தனை. வெளிச்சத்தைப் பெறுவதற்கு நாம் கிழக்கு திசையில் அமர்ந்து சூரியனை பிரார்த்தனை செய்ய வேண்டும். சூரியனின் ஒளியினால் நமக்கெல்லாம் ஞானம். சூர்யனின் பாதை வடக்கு நோக்கி (அப்போது உத்தராயணம்). ஆகையால், நாமும் வடக்கு நோக்கி அமர்ந்து, சந்த்யாவந்தனம் செய்தவாறு பிரார்த்திக்க வேண்டும்'. வாமனனுக்கு இந்த விளக்கம் சரி எனப்பட்டது. அனைவருக்கும் மகிழ்ச்சி. ஸ்ரீகிருஷ்ண மந்திர உபதேசம் நடந்தது. கடைசியில், அருளாசியுடன் பல– மந்திராட்சதை வழங்கப்பட்டது.

## அதே கிருஷ்ணாஜின கேட்டார்

1990ம் ஆண்டு. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸோதெயில் இருந்தார். பிரஸாதத்திற்குப் பிறகு, மந்திராட்சதை கொடுத்து வந்தார். அப்போது ஒருவர் வரிசையில் நின்றிருந்தார். அவருடைய கையில் கிருஷ்ணாஜின. அதனை ஸ்ரீகளவருக்கு சமர்ப்பித்து மந்திராட்சதை ஏற்றுக் கொண்டார். ஸ்ரீகளவர் அந்த கிருஷ்ணாஜினத்தை அருகில் இருந்த ஸ்ரீசுப்ரமண்யாசார்யரிடம் கொடுத்து, இது உங்களிடம் இருக்கட்டும் என்றார். சுப்ரமண்யாசார்யர், ஸோதெயில், ஸ்ரீரமா த்ரிவிக்ரம தேவரின் அர்ச்சகர். அது ஆசார்யரிடம் இருந்தது. அதனை அவர் பயன்படுத்தவில்லை. சுமார் 15 ஆண்டுகள் ஆனாலும், அது அப்படியே இருந்தது. ஸ்ரீகளவரோ, ஆசார்யரோ அதைப் பற்றி பேசவேயில்லை.

ஸ்ரீசுப்ரமண்யாசார்யரோ அந்த கிருஷ்ணாஜினத்தைப் பற்றி மறந்தேவிட்டார். 2006ம் ஆண்டில், உத்தராதிகாரிகளுக்கு ஆசிரம பிரதானம் வழங்கும் சமயம். ஒரு நாள், ஸ்ரீசுப்ரமண்யாசார்யரை அழைத்து, அந்த கிருஷ்ணாஜினத்தை கொண்டு வருமாறு ஸ்ரீகளவர் கூறினார். ஆசார்யருக்கு வியப்பு. வீட்டில் எங்கு வைத்தோம் என்பதை யோசிக்க வேண்டியதாயிற்று. அது பயன்படுத்தப்படாமல் அப்படியே இருந்தது. ஆகவே, ஸ்ரீகளவரிடம் அதனை அப்படியே கொடுத்தார். அந்த 15 ஆண்டுகளில், பல கிருஷ்ணாஜினங்களை பலர் சமர்ப்பித்திருக்கலாம். வேறு பல சம்பவங்களும் நடந்திருக்கலாம். ஆனால் அந்த குறிப்பிட்ட கிருஷ்ணாஜினத்தின் சிறப்பினை சொல்லி, அதுவே வேண்டும் என்று கேட்டது ஆச்சரியம். பூஜ்யரின் சிறப்பான நினைவுத் திறனுக்கு நமோ நம: .

## ஸ்ரீகளவர் கூறியதைப் போல பலன்

2002ம் ஆண்டு. சாதுர்மாத சமயம். ஆக்யான பிரவசனத்திற்காக நான் ஸோதெயில் இருந்தேன். தினமும் மதியம் 3.30க்கு ஆரம்பம். அன்று மட்டும் 3.00 மணிக்கே துவக்கிவிடவும் என்று ஸ்ரீகளவர் கூறியிருந்தார். ஆகவே, ஐந்து நிமிடங்கள் முன்னரே அங்கு இருந்தேன். உள்ளே சென்று ஸ்ரீகளவரை வணங்கினேன். அப்போது ஒருவர், தமக்கு ஆன அனுக்கிரகத்தைப் பற்றி கூறிக்கொண்டிருந்தார். அவருடைய பெயர் ஸ்ரீதர ராவ். மும்பை டோம்பிவிலியில் வாசம். அங்கத்திய ராயர் மடத்திற்கு மிக அருகில் இருந்தார். சொந்தமான ஃப்ளாட். அவருடைய மனைவியின் பெயர் ஸ்ரீமதி. ஜானகி. இரு மக்கள். ஒரு ஆண் மற்றும் ஒரு பெண். ஆண் மகனின் பெயர் சமீர. வயது 32. பெண்ணின் பெயர் ஸுதா. வயது 28. திருமணம் ஆகியிருக்கவில்லை. அவளுக்காக அண்ணனும் திருமணம் செய்து கொள்ளவில்லை. இருவரும் நல்ல வேலையில் இருந்தனர். அண்ணன் இஞ்சினியர். தங்கை உபன்யாசம் செய்பவர். இவர்களது பூர்வீகம் சென்னபட்டண. ஸ்ரீதர ராவ் ஒரு வங்கி அதிகாரி. வேலை நிமித்தமாக மகாராஷ்டிராவில் வசித்து வந்தார்.

மகளுக்கு தக்க வரன்களை காட்டும்போதெல்லாம், அவளே அனைவரையும் நிராகரித்து வந்தார். காரணம் எதுவும் சொல்லவில்லை. திருமணம் வேண்டாம் என்றும் சொல்லவில்லை. 20ம் மேற்பட்ட வரன்களை காட்டினாலும் பலன் இல்லை. என்ன செய்வது என்று பெற்றோருக்குப் புரியவில்லை. இவர்கள் 2001ம் ஆண்டு இறுதியில் ஸோதெ வந்தனர். ஸ்ரீகளவரைக் கண்டு தம் கஷ்டத்தை பகிர்ந்தனர். அப்போது ஸ்ரீகளவர் அவர்களுக்குக் கூறிய உபாயம் இது.

தந்தையான ஸ்ரீதர ராவ் தமது நித்ய ஆன்ஹிகங்கள் ஆனபிறகு, அணுவ்ருந்தாவனாக்யான படித்து, 108 பிரதட்சிணை செய்ய வேண்டும். தாய் ஸ்ரீமதி. ஜானகி, ஸ்ரீரமா த்ரிவிக்ரம தேவரின் சன்னிதானத்தில் லட்சுமி ஷோபானெவை நித்யமும் 5 முறை படிக்க வேண்டும். இதற்கு முன், ஸ்ரீபூதராஜரில் பழ சமர்ப்பணம் செய்து, பிரார்த்தனை செய்ய வேண்டும். இந்த சேவை மூன்று நாட்கள் மட்டும் போதும். மகன் மற்றும் மகள் தமக்கு சாத்தியமான சேவையை செய்யட்டும். ஸ்ரீகளவரின் ஆணைப்படி சேவையை நிறைவேற்றி, பல- மந்திராட்சதை ஏற்று, அந்த குடும்பம் திரும்ப மும்பைக்குச் சென்றது.

அங்கு சென்ற பின், மூன்றாம் நாளே மகளைக் காட்டுவதற்கு வரன் வீட்டிற்குச் சென்றனர். மகள் அவரை ஒப்புக் கொண்டாள். வரன், விசாகப்பட்டினத்தில் சீனியர் இஞ்சினியர். தார்மிக குடும்பம். கை நிறைய சம்பளம். வரனின் விருப்பப்படியே எளிமையாக திருமணம் நடந்தது. வரனின் பெயர் அம்பரீஷ. திருமணம் ஆனபிறகு, பூனே வந்து, அங்கு ஒரு கம்பெனியில் சேர்ந்தார். ஸ்ரீகளவர் செய்த உதவியை நினைத்து, ஸ்ரீதர ராவ் குடும்பத்தினர் தன்யர் ஆயினர். அவை அனைத்தும் ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் கருணை என்று ஸ்ரீகளவர் கூறினார்.

ஸ்ரீமதி.சுதா வேறு வரன்களை பார்க்கையில் அவர்கள் அனைவரும் விகாரமாக தெரிந்தனராம். அதற்கே அவர் அவர்களை ஒதுக்கினாராம். அவை பூத- சேஷ்டை. பிறகு, 2008ம் ஆண்டில் அந்த குடும்பத்தினரை மந்திராலயத்தில் சந்தித்தேன். அந்த சமயத்தில் மகளின் திருமணம் ஆகியிருந்தது. அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருந்தது. அவரே வந்து என்னிடம் பேசினார்.

## நோயாளியின் நோய் தீர்ந்தது

ஷிவமொக்காவில் ஒரு பக்தர். அவருடைய மகன், அமெரிக்காவில் புகழ் பெற்ற மருத்துவர். தந்தைக்கு குடலில் பிரச்னை. எப்போதும் வயிற்று வலி. ஊரில் அனைத்து மருத்துவர்களும் பார்த்தாயிற்று. அவர்களின் மருத்துவம் பிரச்னையை தீர்க்கவில்லை. பிறகு, பலர் கூறியதைக் கேட்டு, மணிபால் மருத்துவமனைக்கு சென்றார். அங்கு சோதனைகள் நடத்தப்பட்டன. அங்கு மருத்துவர்கள் அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்று தீர்மானித்தனர். ஆனால் அந்த மனிதரோ அறுவை சிகிச்சை வேண்டாம் என்று நினைத்தார். வீட்டிற்கு திரும்ப வந்தார்.

ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை பார்க்க வேண்டும் என்று நிச்சயித்தார். அப்போது ஸ்ரீகளவர் பஞ்சிமாரில் தங்கியிருந்தார். அங்கு சென்று, ஸ்ரீகளவரைக் கண்டு பிரார்த்தனை செய்தார். ஸ்ரீகளவரும், அவருடைய ஆரோக்கியத்திற்காக விசேஷமாக பிரார்த்தனை செய்து, மந்திராட்சதை கொடுத்து அருளினார்.

இதன் நடுவில், அமெரிக்காவில் இருந்த மகன், மணிபால் மருத்துவரிடம் நிலையை அறிந்து கொண்டான். தந்தைக்கு அறுவை சிகிச்சையே ஆகவேண்டும் என்பதை அறிந்தான். அந்த விஷயத்தை தந்தையிடம் கூறினான். ஆனாலும், அவர் சிகிச்சைக்கு ஒப்பவில்லை. ஸ்ரீகளவரிடமிருந்து மந்திராட்சதை பெற்றுக்கொண்டு ஸோதெக்கு வந்தார். பல-சமர்ப்பணம் செய்து பிரார்த்தனை செய்தார். ஒரு மாத காலத்தில் அவருடைய வயிற்றுவலி முழுமையாக தீர்ந்தது. மணிபாலுக்கு திரும்ப வந்து மருத்துவரை பார்த்தார். அந்த மருத்துவர்களே ஆச்சரியப்பட்டனர். அமெரிக்காவில் இருந்த மகன் இதனைக் கேட்டு வியப்படைந்தான். பின், இந்தியா வந்தபோது, அனைவரும் சேர்ந்து ஸோதெ வந்து, சேவை செய்து தன்யர் ஆயினர். ஸ்ரீகளவரைக் கண்டு தமது நன்றியினை தெரிவித்தனர்.

## மூர்ச்சை மாயம்

பெங்களூரு ஜயநகர் ஏரியா. ஸ்ரீவராகமூர்த்தி அங்கு தன் குடும்பத்தினருடன் வசித்து வந்தார். செல்வந்தர் ஆனாலும் தார்மிக உணர்வு மற்றும் ஸாது ஸ்வபாவம் கொண்டவராக இருந்தார். மனைவியும் அதே போல தார்மிக உணர்வு கொண்டவர். அனைத்திற்கும் ஸ்ரீஹரி குருகளையே வேண்டிக் கொள்வர். திடீரென்று ஒரு முறை, ஸ்ரீவராகமூர்த்திக்கு மூர்ச்சை வரத் துவங்கியது. இதய நோயும் சேர்ந்தது. மக்கள் இருவரும் வேலை நிமித்தமாக வேறு இடத்தில் வசித்து வந்தனர். அந்த பெண்மணிக்கு மிகவும் மனக்கஷ்டம். கணவரை மருத்துவமனையில் சேர்த்து பரிசோதனைகளை செய்வித்தார். வீட்டில் ஸ்ரீஹரி குருகளிடம் மனமுருகி வேண்டிக் கொண்டார்.

அந்தப் பெண்மணிக்கு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடம் அதிக நம்பிக்கை மற்றும் பக்தி. ஸ்ரீகளவர் எங்கு இருக்கிறார் என்று அறிந்து கொண்டார். ஸோதெ என்று தெரிய வந்தது. தம் சொந்த வாகனத்தில் கணவருடன் ஸோதெ வந்தார். தவல தீர்த்த ஸ்னான, வ்ருந்தாவன தரிசனங்கள் முடிந்தன. ஸ்ரீபூதராஜருக்கு விசேஷ பல-சமர்ப்பணம் ஆனது. ஸ்ரீகளவரைக் கண்டு சாஷ்டாங்கமாக வணங்கினார்கள். மூர்ச்சை மற்றும் இதய நோயினைக் குறித்து வேண்டிக் கொண்டனர்.

குருகள் ஒரு நொடி மௌனமாக இருந்தார். பிறகு ‘ராஜர் இருக்கிறார். உங்களை காக்கிறார். விசேஷமாக பிரார்த்தனை செய்யுங்கள்’ என்றார். அடுத்த நாள் காலையில், ஸ்ரீவேதவியாஸ தேவருக்கு பால் மற்றும் தேன் அபிஷேகங்களை செய்து, பிறகு அதனை அந்த தம்பதிகளுக்குக் கொடுத்தார். அது மட்டுமல்லாமல், தக்க மருந்தினையும் கூறினார். தம்பதிகள் பாதபூஜை மற்றும் விசேஷ காணிக்கை சமர்ப்பித்து பெங்களூருக்கு திரும்பினர். அடுத்து அந்த நோயின் குறி தென்படவேயில்லை. இவை அனைத்தும் அவர்களின் மக்களுக்கும் தெரிந்தன. பிறகு, அனைவரும் சேர்ந்து, உடுப்பியில் இருந்த ஸ்ரீகளவரைக் கண்டு அருள் பெற்றனர். அங்கு ஸ்ரீகிருஷ்ண தரிசனம், சமர்ப்பணம் அனைத்தையும் முடித்து, ஸோதெக்கு வந்தனர். ஸ்ரீபூதராஜருக்கு 108 பழ சமர்ப்பணம் மற்றும் சேவை செய்து தன்யர் ஆயினர். அது ஆனபிறகு, ஸ்ரீகளவர் பெங்களூருக்கு வந்தபோதெல்லாம் சன்னிதிக்கு சமர்ப்பணாதிகளை செய்து, அருள் பெற்றனர்.

## ஓட்டுநர் மறுபடி வேலையைப் பெற்றார்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பெங்களூரில் இருந்தார். மடத்தின் வாகனம் ஓட்டுபவருக்கு ஏதோ பிரச்னை. ஸ்ரீவராக மூர்த்தி அவர்களின் ஓட்டுநர் தற்காலிகமாக இங்கு வந்தார். ஸ்ரீகளவரின் சஞ்சாரத்திற்கு உதவியாக இருந்தார். அவன் முதலில் அரசுத் துறையில் ஓட்டுநராக இருந்தான். ஆனால் பணி நிரந்தரம் ஆகியிருக்கவில்லை. அப்படி இருக்கையில், காரணமின்றி அவனை

திடீரென்று வேலையை விட்டு தூக்கிவிட்டனர். அவனுக்கு வேலை போனது. வேறு வழி தெரியவில்லை. ஆகவே, தற்காலிகமாக வேறு இடத்தில் ஓட்டுநராக பணி புரிந்து வந்தான். ஸ்ரீகளவர் பல-மந்திராட்சதையைக் கொடுத்தார். அப்போது அவன் தனது மனக் கஷ்டங்களை சொல்லிக் கொண்டான். ‘அனைத்தும் சரியாகிவிடும்’ என்று சொல்லி, ஸ்ரீகளவர் அவனை அருளினார். அங்கிருந்து உடுப்பிக்கு வந்தார். எட்டு நாட்களுக்குப் பிறகு, அந்த ஓட்டுநரின் விண்ணப்பம் மறுபடி ஏற்றுக் கொள்ளப்பட்டது. மறுபடி பணிக்கு வருமாறு அவனுக்கு அழைப்பு வந்தது. உடனடியாக வேலையை ஒப்புக் கொண்ட அவன், பிறகு ஒரு முறை ஸ்ரீகளவர் பெங்களூருக்கு வந்தபோது, அவரை தரிசித்து தன் நிலையைக் கூறி வணங்கினான்.

## துஷ்ட சக்தி விலகியது

கோடேஷ்வர பிரதேசத்தின் பக்தர் ஒருவர் ஷிவமொக்காவில் இருந்தார். அவருடைய குடும்பத்தில் துஷ்டசக்தியின் பிரச்னை இருந்தது. அதனால் அவருடைய முயற்சிகள் அனைத்தும் வீண் ஆகிக் கொண்டிருந்தன. பல முறை தேவதா ஆராதனைகளை செய்தாலும், பிரச்னைகள் தீரவில்லை. குடும்பத்தினருக்கும் நோய் நொடிகள் வந்தன. லௌகிக உபாயங்கள் அனைத்தையும் செய்துவிட்டார். ஆனால், பிரச்னை தீரவில்லை. அவருக்கு இவை அனைத்தும் அந்த துஷ்ட சக்தியின் பிரச்னைகள் என்றே தெரியவில்லை. கடைசியில் பிரஸ்ன பார்த்தபோதே அது தெரிந்தது. அந்த பக்தர் பயந்தார். குலகுரு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை பார்ப்பதற்கு வந்தார். ஸ்ரீகளவர் ஸோதெயில் இருந்தார். அங்கு சென்று அவரின் பாத கமலங்களில் விழுந்தார். ஸ்ரீகளவர் உடனே ஹரிவாயுகளை பிரார்த்தனை செய்தார். ஸ்ரீபூதராஜருக்கு பழம் சமர்ப்பித்து பிரார்த்தனை செய்யக் கூறினார். அதுவும் நடந்தது. ஸ்ரீகளவர் ஷிவமொக்கா வந்து, ஸ்ரீபூதராஜரின் பூஜை செய்ய வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார் அந்த பக்தர். கருணாமயியான அந்த பக்தர் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டார். அந்த முறை உடுப்பிக்கு வந்தபோது ஷிவமொக்காவிற்கு வருவதாகக் கூறினார். அதைப் போலவே, உடுப்பிக்கு செல்லும் வழியில் ஷிவமொக்கா வந்தார். அந்த பக்தரின் வீட்டில் ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜை செய்தார். அன்றிலிருந்து அந்த துஷ்ட சக்தியின் பிரச்னை இல்லை என்றானது. இவை அனைத்தும் ஸ்ரீகளவரின் பிரார்த்தனை மற்றும் ஸ்ரீபூதராஜரின் கருணையின் பலனே ஆகும்.

## அஸுர மாயை தீர்ந்தது

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பத்ராவதிக்கு வந்திருந்தார். பத்ராவதியில் பூஜை நடக்கவிருந்த எஜமானனின் வீட்டை நெருங்கும்போது, அங்கு அபாரமான மழை பொழிந்தது. அனைத்து இடங்களிலும் வெள்ளம். செல்லும் சாலை பழுதடைந்திருந்தது. மடத்து வண்டி, சேற்றில் சிக்கி சரிந்தது. வண்டியை தள்ள முயன்றாலும், முடியவில்லை. ஸ்ரீகளவருக்கு கவலை. அங்கிருந்து எஜமானனின் வீடு மிக அருகிலேயே இருந்தது. ஸ்ரீஸீதாராம பாயரி அவர்கள் ‘நாம் ஆட்டோவில் முன் செல்வோம். வண்டி பின்னால் வரட்டும். தாம் அதுவரை வாகனத்தில் அமர்ந்திருக்க வேண்டாம்’ என்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீகளவரும் அப்படியே ஆகட்டும் என்றார். பிறகு ஆட்டோ வரவழைக்கப்பட்டு, தேவபெட்டியுடன் ஸ்ரீகளவர் ஆட்டோவில் அமர்ந்தார். ஸீதாராமர் கூட அதில் ஏறினார். புறப்படும்போது, ஆட்டோ ஒரு முறை குலுங்கியது. ஆட்டோவின் ஒரு பாகம், ஸீதாராமரின் காலில் தாக்கியது. ரத்தம் வரத் தொடங்கியது. ஸ்ரீகளவருக்கு இதெல்லாம் ஆச்சரியம். இப்படியாக் ஒன்றன்பின் ஒன்றாக பிரச்னைகள். ஸீதாராமரின் காயம் மற்றும் ரத்தத்தினால், அசுர மாயை தீர்ந்தது என்றார். அதனை பெற்றுக்கொண்டே அந்த சக்தி விலகியது என்றார். பூஜ்ய ஸ்ரீகளவர் அருகிலேயே இருந்ததால், அதிக அபாயம் பிரச்னை ஆகவில்லை என்று அனைவருக்கும் தெரிந்தது.

## ஸ்ரத்தாளுகள் ஸ்ரீகளவரைக் கண்டனர்

ஹோஸ்பெட்டின் ஸ்ரீராஜேஷ்வரஸிங்க அவர்களின் உறவினர்கள், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடம் விசேஷ பக்தி கொண்டிருந்தனர். பல முறை குருகள் அவருடைய வீட்டிற்கு வந்திருக்கிறார். சம்ஸ்தான பூஜை, துலாபாரம், சன்மானம், ஹம்பி நவ வ்ருந்தாவன தரிசன ஏற்பாடுகள்

அனைத்தும் ஒவ்வொரு முறையும் சிறப்புடன் நடந்தன. ஸ்ரீகளவர் அவ்வளவு சிறப்பான ஏற்பாடுகள் தேவையில்லை என்று கூறினாலும், ஸிங்க குடும்பத்தினர் அவற்றை சிரத்தையுடன் சமர்ப்பித்து தன்யர் ஆயினர். ஸ்ரீகளவர் மிகவும் ஈர்ப்பு சக்தி கொண்டவர். முகத்தின் எப்போதும் புன்னகை. கருணை நிரம்பிய கண்கள். ஒரு முறை பார்த்தால் திரும்பத்திரும்ப பார்க்க வேண்டும் என்னும் ஆசை மனதில் தோன்றும். அவரை யார் பாத்தாலும், பக்தி மரியாதையுடன் தலை வணங்குவது சகஜம்.

சிங்க அவருடைய வீட்டிற்கு வரும்போதெல்லாம் ஸ்ரீகளவரின் பூஜாதிகளுக்கு தம் வீட்டையே ஒப்படைத்திருந்தார். வீட்டினர் அனைவரும் தேவ தரிசனம் மற்றும் பிரசாதத்திற்கு மட்டுமே வந்தனர். குடும்பத்தினருக்கு மட்டுமல்ல, வீட்டின் பணியாளர்கள், ஓட்டுநர்களுக்கும்கூட அதீத பக்தி, மரியாதை. அவர்கள் அனைவருக்கும் பல- மந்திராட்சதை கொடுத்து அருளினார் ஸ்ரீகளவர். 2007ல் ஸ்ரீகளவர் வ்ருந்தாவனஸ்தர் ஆனார். பிறகு, பூஜ்யரின் சிஷ்யரான ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தரும் ஸிங்க குடும்பத்தினரின் வீட்டிற்கு வந்து, பூஜாதிகளை செய்து அவர்களை அருளியிருக்கிறார்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், வ்ருந்தாவன பிரவேசம் செய்தபிறகு, ஸிங்க அவர்களின் வீட்டில் வேலை செய்பவர்கள், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை பார்த்திருக்கிறார்கள். பூஜ்யர், வ்ருந்தாவன பிரவேசம் செய்தபிறகும், அவருடைய புகைப்படத்திற்கு நிரந்தரமாக வணங்கும் பழக்கம் அவர்களுக்கு இருந்தது. பிறகு ஒரு முறை கிணற்றுக்கு அருகிலும், இரண்டாம் மாடியில் ஒரு அறையிலும் ஸ்ரீகளவரைக் கண்டு வியப்படைந்திருக்கிறார்கள். அவர்களுடைய பேச்சிலேயே கூறுவதானால், ‘இது ஸ்வாமிகளவரின் வீடு. அவர் இங்கேயே இருக்கிறார்’. அது மட்டுமல்லாமல், இரண்டாம் மாடியிலேயே ஸ்ரீகளவரின் அறை இருந்திருக்கிறது. இன்றைக்கும் அந்த குடும்பத்தினர் இரவு நேரத்தில் அந்த அறைக்கு செல்லும் தைரியம் கொண்டிருக்கவில்லை.

## துஷ்ட செயல்கள் அடங்கின

ஹோஸ்பெட்டின் ஸிங்க அவர்கள் வீட்டின் முதல் மாடியின் வராண்டா பகுதி. அங்கு ஜன்னலின் கீழ் ஒரு சிறிய படுக்கை. ஒரு நாள் அங்கிருந்து ஏதோ சத்தம் வந்தது. அந்த படுக்கையில் நெருப்பு. அங்கு நெருப்பு வருவதற்கு எந்தவொரு பொருளும் இல்லை. மின்சாரம் குறைந்த அழுத்தம் ஆனதற்கும் வாய்ப்பு இல்லை. இது யாரோ வேண்டாதவர்கள் செய்த வேலை என்று வீட்டினர் நினைத்தனர். இந்த விஷயத்தை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு தெரிவித்தனர். அவர் உடனேயே ஸ்ரீபூதராஜரை பிரார்த்தனை செய்தார். பிறகு அங்கு வந்தபோதும் அந்த இடத்தை பார்த்து ‘இனி இந்த பிரச்னை வராது. ஸ்ரீபூதராஜர் காப்பவராக இருக்கிறார். கவலை வேண்டாம்’ என்று சொல்லி அருளினார். அன்றிலிருந்து இன்று வரைக்கும் அத்தகைய எந்தவொரு துஷ்ட செயல்களும் அங்கு நடைபெறவில்லை. அதற்கு யார் காரணம்? என்பது அந்த குடும்பத்தினருக்கு இதுவரை தெரியவில்லை. பூஜ்ய ஸ்ரீகளவரின் புண்ய ஸ்மரணையே தமக்கு அபாரமான பலம் என்று சிந்திக்கின்றனர்.

## வ்ருந்தாவனத்தைப் போல உயரமாகக் கண்டார்

ஸ்ரீ.D. நாகராஜராவ் மற்றும் திருமதி. ருகமாபாய் அவர்கள் ஹைதராபாத் வாசிகள். ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரிடமிருந்து அங்கிதம் பெற்றவர்கள். ஸ்ரீராஜரின் ருஜுத்வ மற்றும் ஆக்யான விஷயத்தில் அபாரமான சிரத்தா பக்தி கொண்டவர்கள். அந்த தம்பதிகள் ஒரு முறை ஸோதெ வந்திருந்தனர். அங்கு அந்த சமயத்தில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் இருந்தார். ஸ்ரீகளவர் என்றால் அந்த தம்பதிகளுக்கு மிகவும் பக்தி & மரியாதை. உத்தாரக குலகுரு என்றே நினைத்தனர். அன்று காலையில் எப்போதும்போல சம்ஸ்தான பூஜை, மகாபூஜைகள் அனைத்தும் முடிந்தது. ஸ்ரீகளவர், ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன சன்னிதிக்கு வந்தார். அங்கும் சங்கல்ப பூர்வக ஸமர்ப்பணாதிகள் நடந்தன. மஹா நீராஜனம் துவங்கியது. கடைசியில் ஸ்ரீகளவர் எழுந்து நின்று

ஆரத்தி சமர்ப்பித்தார். ஸ்ரீமதி. ருக்மாபாய் அவர்கள், ஸ்ரீபூதராஜரின் முன் பாகத்தின் ஜன்னலின் வழியாக தரிசனம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு ஒரு அற்புத விஷயம் தெரிந்தது. ஸ்ரீராஜரின் வ்ருந்தாவனத்தின் உயரம் அதிகமாகிறது. அதனுடன் ஸ்ரீகளவரும் உயரம் ஆகிறார். ஸ்ரீமதி அவர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் இதனை ஏறெடுத்து பார்க்கிறார். அதற்குள் அந்த கடைசி ஆரத்தி முடிந்தது. அடுத்த நொடி அனைத்தும் முன்பு இருந்ததைப் போலவே ஆயிற்று.

மதியம் பிரசாதத்திற்குப் பிறகு, ஸ்ரீகளவரை அவர்கள் சந்தித்தனர். தமக்கு ஆன அனுபவத்தை ஸ்ரீகளவரிடம் கூறினர். அதற்கு ஸ்ரீகளவர் – 'இதெல்லாம் ஸ்ரீராஜரின் அற்புத மகிமை. இதில் நம்முடையது எதுவும் இல்லை. இவற்றை கண்ணாரக் கண்ட நீங்களே தன்யர்' என்றார். பிறகு இரண்டு நாட்கள் இருந்து, சேவை செய்து, பலமந்திராட்சதை ஏற்று, அங்கிருந்து அவர்கள் புறப்பட்டனர். பிறகு ஒரு முறை அவர்களை ஆதோனியில் ஸ்ரீரகுப்ரேம தீர்த்தரின் ஆராதனை சமயத்தில் சந்தித்தபோது, இந்த விஷயத்தை சொல்லி 'நம் ஸ்ரீகளவர் மிகப்பெரியவர்' என்று பக்தியுடன் கூறினர்.

## ஸ்வாமி குழந்தையாக வந்தான்

ஒரு இடத்தில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் சிறப்பான பூஜா கார்யக்ரம நடந்து கொண்டிருந்தது. நிர்மால்ய விசர்ஜனை, பஞ்சாம்ருதங்கள் வழக்கம்போல முடிந்தன. நைவேத்ய சமர்ப்பண சமயம். நைவேத்ய பொருட்கள் கொண்டு வந்து வைத்தனர். நெய், துளஸி தளம் வைத்தனர். தூப த்ரிவர்த்தி தீப சமர்ப்பணம் ஆயிற்று. முன்பு ஒரு பெரிய ஆடையை பிடித்து மந்திரம் சொல்லத் துவங்கினர். தாள நகாரி ஆகியவை தொடங்கியது. பாகவதர்கள் பாடத் துவங்கினர். பூஜ்ய ஸ்ரீகளவர் மூல மந்திரத்தை ஜெபிக்கத் துவங்கினார். அப்போது எங்கிருந்தோ ஒரு சிறிய அழகான குழந்தை வந்தது. குறுக்கே பிடித்திருந்த வஸ்திரத்தை தாண்டிப் போய், நைவேத்ய பாத்திரத்தை தொட்டது. அங்கிருந்தவர்களுக்கு குழப்பம், கவலை. ஸ்ரீகளவர் மட்டும் அமைதியாக இருந்தார். அந்த குறுக்குத் துணியை எடுத்தபின், அனைவரும் ஸ்ரீகளவரையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

இந்த குழப்பத்தில், நைவேத்யத்தை தொட்ட அந்தக் குழந்தை மாயம். எங்கும் காணவில்லை. நைவேத்ய விதானம் தொடர்ந்து நடந்தது. ஆர்த்திகள் நடந்தன. சமர்ப்பித்த நைவேத்யத்தை குருகள் ஏற்றுக் கொண்டார். பிராமண சந்தர்ப்பணை ஆயிற்று. குழந்தை தொட்டுவிட்டதால், நைவேத்யம் விழுப்பு ஆகிவிட்டதோ என்று அனைவரும் நினைத்தனர். ஆனால், ஸ்ரீகளவரின் சிந்தனை இப்படி இல்லை. பிறகு அனைவரும் அந்த சந்தேகத்தை அவரிடம் கேட்க, ஸ்ரீகளவர் கூறியது – அந்த குழந்தை பாலரூபியான ஸ்வாமியே ஆகும்.

## ஓம்கார ஸ்ரவண

ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யர் ஸ்ரீவாதிராஜரின் ஏகாந்த பக்தர். ஸ்ரீராஜரின் ருஜுத்வ தத்வத்தை நிறுவியவர். ஸ்ரீவியாஸ தாஸ ஸித்தாந்த மண்டன பண்டிதர். அனைத்தையும் தானம் செய்த அவதூத ஷிரோமணிகள். பூஜ்ய ஆசார்யர் இவ்வுலகை நீத்தது 1896ம் ஆண்டில். 1996ம் ஆண்டில் ஆசார்யரின் ஆராதனா ஷதமானோத்ஸவ. ஹம்பியில் ஸ்ரீரகுநந்தன தீர்த்தரின் பிருந்தாவனத்தின் அருகில் ஆசார்யரின் சன்னிதி இருக்கிறது. ஆசார்யரின் வம்சத்தவர்கள் மற்றும் மற்ற பக்தர்கள் மூலமாக, ஆசார்யரின் ஷதமானோத்ஸவத்தை விமரிசையாக கொண்டாட தீர்மானித்தனர். 1995 நவம்பர் 23, 24, 25 & 26ம் தேதிகளில் ஏற்பாடு ஆனது. இந்த நிகழ்ச்சிக்கு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மற்றும் கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யா ஸாகர தீர்த்த ஸ்ரீபாதர் வந்திருந்தனர். இரு ஸ்ரீகளவரின் சம்ஸ்தான பூஜை, ஸ்ரீரகுநந்தன தீர்த்தரின் சன்னிதானத்தில் நடந்தது. பிறகு சன்னிதானத்தில் ஷதமானோத்ஸவ துவக்க விழா நடந்தது. இரு ஸ்ரீகளவரும், ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் ஸித்தாந்த தீக்ஷை, அலௌகிக மகிமைகளை கூறினர். அன்றே மாலையில் பள்ளாரியிலும் நான்கு நாட்களின் உத்ஸவங்கள் துவங்கின. இவ்வாறாக பிக்ஷைக்குப் பிறகு, ஸ்ரீகளவர் சீக்கிரமாக புறப்படுவதாக இருந்தது. ஸ்ரீரகுநந்தன தீர்த்தரின் சன்னிதியிலிருந்து புறப்பட்டு ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் சன்னிதிக்கு வந்தார். அன்று அங்கு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. ஆசார்யரின் யோக்யதை, மகிமை அறிந்தவர் ஆகையால், ஸ்ரீவிஷ்வோத்தம

தீர்த்த ஸ்ரீகளவர் வணங்கி அவரை நமஸ்கரித்தார். அப்போது அவருக்கு ஓம்காரம் கேட்டது. ஆச்சரியத்துடன் மகிழ்ச்சியும் கொண்டார் ஸ்ரீகளவர்.

## கங்காதேவியின் தரிசனம்

ஒரு முறை தும்கூர் நாராயண மூர்த்தி அவர்களின் வீட்டிற்கு ஸ்ரீகளவர் வந்திருந்தார். அப்போது ஸ்ரீவிஷ்வோத்தமரைக் குறித்து அவர் 'ஸ்வாமி, ஹொளெஹொன்னூரின் ஸ்ரீஸத்யதர்மரின் சன்னிதியில் நடந்த விசேஷத்தை கேட்டிருக்கிறேன். சிறிது அதனை சொல்ல வேண்டும்' என்றார். அதற்கு ஸ்ரீகளவர் – 'ஹொளெஹொன்னூரில் பாகீரதி ஸ்தோத்திரத்தை சொல்லியவாறு, ஸ்ரீசத்ய தர்மரின் பிருந்தாவன தரிசனத்திற்குச் சென்றேன். அப்போதே மேலிருந்து கங்கை விழுந்தது. நீங்களும் தினமும் பாகீரதி ஸ்தோத்திரம் சொல்லுங்கள், உங்களுக்கும் அருள்கிறாள்' என்றார். அதன்படியே இவரும் பாகீரதி ஸ்தோத்திரத்தை தினமும் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு முறை ஸோதெக்குச் சென்று, இரவு படுத்திருந்தபோது, வேகமாக காற்று அடித்து, அறையின் கதவு திறந்தது. கீழே சரியான குளிர். கதவை சரியாக மூடிவிட்டு மறுபடி படுத்தார். மறுபடி சத்தம். மறுபடி கதவு திறந்தது. இவ்வாறாக நடந்து, மூன்றாம் முறையாக கதவு திறந்தது. பார்த்தால் அங்கு ஒரு சிறுமி – சீக்கிரம் போய் ஸ்னானம் செய்யுங்கள் – என்றாள். அப்போது மணி 5. சரியென்று போய் ஸ்னானம் செய்து கொண்டு வந்து பின் நடந்ததை யோசித்தார். ஸ்ரீகளவரிடம் சென்று கூறினார். அதற்கு ஸ்ரீகளவர் 'பாகீரதி ஸ்தோத்திரத்தின் பலன் இதுவே. அந்த சிறுமி வேறு யாரும் அல்ல. கங்கையே தரிசனம் அளித்திருக்கிறாள்' என்றார். குருகளின் வதன வாணியே தேவதா தரிசனத்திற்கு காரணம் ஆயிற்று. இன்றைக்கும் பாகீரதி ஸ்தோத்திரத்தை சொல்லி, அப்போது நடந்தவற்றை நினைத்தவாறு, குருகளின் கருணையைப் பற்றி நான் என்ன சொல்வது? என்றார்.

ஸர்வஸ்வம் மே வாதிராஜோ தயாலு:
பூதராஜ பிரபோsவ மாம் ||

## ராஜரே சர்வஸ்வ என்று நம்பி சாதித்த ஸித்த புருஷர்.

'ஹரெள குரு குரெள பக்திபாரம் தீர பராத்பரே |
கோரஸம்ஸாரபாரம் த்வம் திதீர்ஷுஷ்சேத் க்ருபாகரே || (12-28)

ஹரிகுருகளின் மேல் பாரத்தை வைத்து சம்சாரத்தை தாண்டுங்கள் என்று ஆக்யானத்தில் ஸ்ரீராஜர் கூறியிருக்கிறார். இதையே முழுமூச்சாக நம்பியவர் ஸ்ரீவிஷ்வோத்தமர். என்ன செய்ய வேண்டும் என்றாலும், பூதராஜர், ராஜர் செய்விக்கின்றனர் என்னும் நம்பிக்கை. ஒரு முறை ஸோதெயில் ராஜாங்கண நிர்மாணம் செய்ய வேண்டும் என்னும் சங்கல்பம். தும்கூரின் நாராயண மூர்த்தி, காண்ட்ராக்டர் அவர்களை அழைத்து அந்த செயலை அவரிடம் ஒப்படைத்தார். அவரோ அந்த இடத்தைப் பார்த்து, இது ஆகாத காரியம் என்றார்.

ஆனால், ஸ்ரீவிஷ்வோத்தமர் பூதராஜர் இருக்கிறார். அவரே ராஜரின் சேவை செய்பவர். நாமெல்லாம் வெறும் பெயருக்கு மட்டுமே. பூதராஜர் இருக்கிறார். இதனை தைரியத்துடன் செய்யுங்கள் என்றார். குரு ஆணையை மீறாமல், அதனை ஒப்புக்கொண்டு வேலையை துவக்கினார் நாராயண மூர்த்தி அவர்கள். வேலை துவங்கிய சில நாட்கள் கழித்து, ஷீட் போடும் வேலையை செய்பவர்கள், வேறு இடத்திலிருந்து ஸோதெ வந்தனர். ஆனால் 16 தூண்கள் நிரம்பிய கான்க்ரீட் வேலையே இன்னும் முடியவில்லை. மாலை 6 மணி சமயம்.

நாராயணமூர்த்தி அவர்கள் ஸ்ரீகளவரிடம், 'ஸ்வாமி, வேலைக்காரர்கள் வந்துவிட்டனர். ஆனால் கான்க்ரீட் போடும் வேலையே இன்னும் முடியவில்லை. என்ன செய்வது?' என்றார். ஸ்ரீகளவரோ, 'யோசனை வேண்டாம். பூதராஜர் இருக்கிறார்' என்றார். அதே சமயத்தில் திடீரென்று அங்கு ஒரு

பேருந்து மூலமாக 50 பேர் வந்தனர். நாங்கள் உதவி செய்கிறோம் என்று அவர்களே கான்கிரீட் கலக்கி போடத் துவங்கினார். வெறும் 7 மணியிலிருந்து 9 மணிக்குள் (3 மணி நேர வேலை), 16 கம்பங்களின் வேலை முடிந்தேவிட்டது. வாரக்கணக்கில் ஆகவேண்டிய வேலை, வெறும் 3 மணி நேரத்தில் முடிந்தபின், கை கழுவுவதற்கு தவள கங்கைக்கு சென்றவர்கள் ஒருவரும் திரும்ப வரவில்லை. ஸோதெ முழுக்க தேடினாலும் அவர்களைக் காணவில்லை. அனைவருக்கும் வியப்பு. ஸ்ரீகளவர் அனைத்தும் பூதராஜரின் செயல்கள் என்றார். அனைத்து ஷீட் வேலைகள் முடிந்தபிறகு, ஸ்ரீகளவர், இது எவ்வளவு நாட்கள் தாங்கும் என்றார். அவர்கள் இது 50 ஆண்டுகள் வரை தாங்கும் என்று கூறினர். 50 ஆண்டுகளுக்குப் பிறகு, பூதராஜரின் சித்தத்தைப் போல ஆகட்டும் என்றார் ஸ்ரீகளவர். இது நடந்தது 1967ம் ஆண்டில். இப்போது 2017 சரியாக 50 ஆண்டுகள் ஆனது. அங்கு (பழைய ராஜாங்கணத்தில்) புதிய கட்டிடத்தின் வேலைகள் துவங்கியிருக்கின்றன. இவை அனைத்தும் பூதராஜரின் கருணை என்றே நாம் அறிய வேண்டும்.

## த்ரிவிக்ரம தேவர்

ராஜாங்கணத்தின் வேலைகள் அனைத்தும் முடிந்தபின், ஒரு முறை ஸ்வாமிகளின் இடபல சேவையின் தந்த்ரிகள் படுத்திருந்தனர். இரவில் அவர்களுக்கு ஒரு கனவு வருகிறது. கனவில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், த்ரிவிக்ரமனின் கோயிலுக்கு பிரதட்சிணை செய்கிறார். இவ்வாறு பிரதட்சிணை செய்தபோது, கோயில் உள்ளேயிருந்து வெள்ளை பீதாம்பரத்தை உடுத்திக்கொண்டு, த்ரிவிக்ரமரூபி வந்து வாயிலில் எதிரில் நின்றான். ஸ்வாமிகள் த்ரிவிக்ரமனை வணங்கினார். த்ரிவிக்ரமன் 'மிகவும் நன்றாக இருக்கிறது' என்று சொல்லி அங்கிருந்து மறைந்தார். ஸ்வாமிகளுக்கு இந்த கனவை காலையில் கூறியபோது அனைத்தும் அவனின் கருணையே என்று அருளினார் ஸ்ரீகளவர்.

## கர ஸ்பர்ஷம் அருளிய தேவ ஸன்னிதி

ஒரு முறை நாராயண மூர்த்தி அவர்கள் பூஜைக்காக ஒரு பிரதிமைக்காக ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடம் பிரார்த்தனை செய்தார். சில நாட்கள் ஆனபிறகு, ஸ்ரீகளவர், ஒரு அழகான தவழும் கிருஷ்ண பிரதிமையை தாம் பூஜித்து, அவருக்கும் அருளினார். அதனை தம் வீட்டில் வைத்து, தினமும் பூஜித்து வந்தார் நாராயண மூர்த்தி அவர்கள். ஒரு முறை தன் வேலை விஷயமாக, வெளியில் சென்று வரும்போது, எம்.ஜி. ரோட்டில் ஒரு சவ ஊர்வலம் எதிரில் வந்தது. நாராயண மூர்த்தி அவர்கள் விசாரிக்கையில், இறந்திருந்தவர் அவருடைய நண்பரே என தெரிய வந்தது. உடனே, அந்த சவத்தின் பின்னே சிறிது தூரம் சென்று, யாரையும் தொடாமல் இருந்தாலும், வீட்டிற்கு வந்து ஸ்னானம் செய்து படுத்தார்.

அடுத்த நாள் வழக்கம்போல ஸ்னானம் செய்து கிருஷ்ணனை பூஜித்தார். அன்றிரவு கனவில் கிருஷ்ணன் இவரின் எதிரில் வந்து, கோபம் கொண்டவனைப் போல முதுகு காட்டி நின்றான். இவர் அருகில் செல்ல, கிருஷ்ணன் விலகி நடந்தான். இப்படியே நடந்தவாறு கிருஷ்ணன் ஸோதெ வரை வந்து, த்ரிவிக்ரமனின் கோயிலில் நுழைந்து மறைந்தான். அவனுடைய அழகான முகத்தை காட்டவே இல்லை. கனவில் ஏன் இப்படி ஆயிற்று என்று யோசித்தபோது, சிறிது நாட்கள் கழித்து, அவருடைய அண்ணன் எழுதிய ஒரு புத்தகம் அவருக்கு கிடைத்தது. சவ ஊர்வலத்தை தொடர்ந்து சென்றாலும், அது அஷௌசமே. ஸ்னானம் செய்து, பூணல் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று இருந்தது.

உடனே இவருக்கு தாம் அன்று ஸ்னானம் செய்தாலும், பூணல் மாற்றிக் கொள்ளவில்லை. அப்படியே பூஜை செய்தேன். இதனால் அஷௌச ஆகி, கிருஷ்ணன் எங்கிருந்து வந்தானோ, அங்கேயே திரும்ப சென்றுவிட்டான் என்று புரிந்தது. மறுபடி இவர் ஸ்ரீகளவரை அழைத்து, அவரிடமிருந்து ஸ்பர்ஷ, பூஜைகளை செய்த பிறகு, இன்றைக்கும் ஸ்ரீகிருஷ்ணன் அவரை புன்னகையுடன் அருள்கிறான். இதனை பார்த்தால்,, கேரள நடாவர முக்யபிராண தேவஸ்தானத்தில் இருந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மூலமாக வைக்கப்பட்ட பூதராஜரின் கவசத்தைப் பற்றி கேள்வி கேட்டபோது – யாரோ ஒரு பெரிய ஞானிகள் இதனை

தொட்டிருக்கிறார்கள். அன்றிலிருந்தே இதில் ஜாக்ருத சன்னிதானம் இருக்கிறது என்று பதில் வந்தது. இதனை பார்த்தால், அவருடைய ஸ்பர்ஷமே தேவதைகளின் ஆவாகனம் – சன்னிதானம் என்பது நிச்சயம் என்று புரிகிறது.

## ஸமபூஜாதி ஸம்பிரதாயம்

ஸ்ரீவாதிராஜ குருசார்வபௌமர் லாதவ்ய ருஜுதேவதை ஆவார். இந்த கல்பத்திலேயே, பகவத் ஆணைக்கேற்ப வாயுதேவரைப் போல பிராணாதி பஞ்சரூப வைபவ பாவ்யர். இந்த அனைத்து சிறப்பினையும் ஸ்ரீவாதிராஜரே, ஸ்வப்ன உபதேசத்தினால் சொல்லியிருக்கும் ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்தில் சொல்லியிருக்கிறார். ஸ்ரீராஜரின் ஆராதனா கிரமத்திற்கு இதுவே பிரமாணம். 'இதமேவ மஹத்கார்யம் பவதாம் மம பூஜனம் | இதமேவ மஹாப்ரீதிஸாதனம் பவதாம் மதம்' - என்பது அந்த ஸ்லோகம். இந்த உபதேசம் 'ஸமானாம் விஷயா பூஜா விஷமானாம் ஸமா ததா | க்ரியதே யேன தேவேன ஸ்வபதாத் ப்ருஷ்யதே ஹி ஸ:' என்னும் பிரமாணத்திற்கு தக்கதாக இருக்கிறது. இது ஸ்ரீராஜரின் ஆராதனைக்கு இருக்கும் யதார்த்த பூஜாவிதி ஆகும். இதுவே குருராஜரின் அருள் உடனான ப்ரீதிக்கு வழியாகும். இந்த கிரமம் பல மடத்தின் பரம்பரைகளில் மற்றும் அருள் பெற்ற பல சிஷ்ய வீடுகளில் பல நூற்றாண்டுகளாக வந்து கொண்டிருக்கும் வழியாகும்.

ஸ்ரீவாயு உடனான ருஜுத்வ அனுசந்தானத்தின் பின்னணியில் ஸ்ரீராஜரின் ஆராதனை செய்பவர்கள் இருந்தால், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு மிகவும் அபிமானம். அழைக்கப்பட்டோ, விவரம் தெரிந்தாலோ அத்தகைய பக்தர்கள் இருக்கும் இடத்திற்கு சென்று, சம்ஸ்தான பூஜாதி காரியகிரமங்களை செய்வது அவரது வழக்கம். அத்தகைய இடங்களில் அவருடைய மகிழ்ச்சி மிக்க அதிகமாக இருக்கும். அத்தகைய இடங்களில், ஆத்யாத்மிகாதி தாபத்ரயங்கள் தீருமாறு விசேஷமாக அருளியது கவனிக்கத்தக்க விஷயமாகும். ஆனால் எதற்கும் எப்போதும் யாரையும் ஸ்ரீகளவர் த்வேஷித்தவர் அல்ல. மற்ற இடங்களுக்கு போகும் சந்தர்ப்பம் வந்தால், முடிந்தவரை அதிலிருந்து தப்பித்துக் கொள்வார். ருஜுத்வ தத்வ விரோதிகளிடமிருந்து முடிந்தவரை தூரமாகவே இருந்து விடுவது அவரது வழக்கம்.

## ஸ்ரீஹரிகுரு சிந்தனை

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நடத்தை / செயல்கள் மிகவும் அபூர்வமானவை. பக்தர்கள் மந்திராட்சதையை பிரார்த்திக்கும்போதோ, மஹிமா சம்பந்தமாக பேசும்போதோ, அவருடைய வாக்கினில் நிரந்தர ஹரிகுரு ஸ்மரணை இருக்கும். ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் மறதியோ அவருக்கு என்றும் இருந்ததில்லை. அந்த ஸ்மரணை இல்லாமல் பேச்சே இல்லை. எவ்வளவோ பக்தர்களுக்கு ஸ்ரீஹரி குருகளின் நாமஸ்மரணையின் பெருமையை சொல்லி, அதனை சொல்ல வைத்தது அனைவரும் அறிந்ததே. சிப்பகிரி, மந்திராலய ஆகிய சன்னிதிகளுக்கு சென்றபோது மஹிமா அனுசந்தானத்துடன் குரு ஸ்மரணை செய்தவர். சீகலபரவியில் ஸ்ரீமோகனதாசரின் மகிமைகளை அங்கு கேட்ட உடன், பூஜ்யர் மெய்சிலிர்த்து 'ஸ்ரீஹரி குருஸ்மரணை சிறந்த பாகவத தர்மம் ஆகும். மேலாக அனைத்து பக்தர்களுக்கும் இது சுலபமானது மற்றும் நிரந்தரமாக அனைவரும் செய்ய வேண்டியது' என்றார்.

ஷ்ருண்வன் க்ருணன் ஸம்ஸ்மரயன்ஸ்ச.. என்னும் பாகவத வசனம் அவரிடமிருந்து வந்தது. தேஷ கால சம்பந்தப்பட்ட ரூபம், எல்லா காலத்திலும் நினைவுக்கு வராமல் இருந்தாலும், ராம கிருஷ்ணாதி பகவத் நாமங்கள் மற்றும் குருகளின் மகிமையை சொல்லும் நாமஸ்மரணை அனைத்து காலங்களிலும் செய்யத்தக்கது என்று அவருடைய அபிப்பிராயம்.

ஹரிஸ்ம்ருதி: ஸர்வவிபத்விமோக்ஷிணி | குருஸ்ம்ருதி: ஸர்வஸமத்திதாயினி || என்னும் குறிப்பினை பூஜ்யர் அனேக முறை சொல்லியிருக்கிறார். இதற்காக ஸ்ரீகளவர் இரு உதாரணங்களை அவ்வப்போது கொடுத்துக் கொண்டிருந்தார். ஸ்ரீவாதிராஜரின் நாமஸ்மரணை செய்து, மந்தபுத்தி கொண்ட ஒருவன் அபூர்வ புத்தியைப் பெற்று வாதம் செய்து துர்வாதிகளை

வென்று வந்தான். (சித்ரம் ஸ்ரீவாதிராஜாக்ய ஷஸ்திரம் ஸ்வாந்தர் நிதாய ச | துர்வதி வைரிணோ ஜக்யே கஷ்சின் மந்தோऽபி ஹி கவசித் ||). அதைப் போலவே, ஸ்ரீமோகனதாசரின் மனைவியானவர், ஸ்ரீவிஜயதாசரை ஸ்மரணை செய்து, தன் கணவரை மறுபடி மீட்டது. ஸ்ரீஹரி குருகளின் ஸ்மரணை அனைத்து கஷ்டங்களையும் பரிகரிக்கத்தக்கது மற்றும் விசேஷமாக மானசிக மகிழ்ச்சியை தரத்தக்கது.

## ஷாந்தசீலரான ஸ்ரீகளவர்

ஸ்ரீஹரி குருகளின் விருப்பம் மற்றும் சங்கல்பத்திற்கேற்ப, ஜீவர்களின் வாழ்க்கை ஒரு சுழற்சி என்னும் தத்வத்தை நன்றாக அறிந்தவர் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். 'ஈஷ்வரஸ்யைவ ஸங்கல்போ யதா சாஸ்தி ததா பவேத் |' என்னும் ஸ்ரீராஜரின் வாக்கியத்தில் நம்பிக்கை கொண்டவர். 'மானாமானௌ ஹார்யதீனௌ லோபாலோபௌ ச தேஹின:' என்னும் வாக்கு ராஜரின் பக்தர்களுக்கு பொருந்துகிறது. ஸ்ரீகளவர் ஸோதெ மடத்தின் பீடத்திற்கு வந்தபிறகு, அவ்வப்போது அவரது மனதை கலக்கும் சம்பவங்கள் நடந்தே வந்தன. சிலர் ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை நிராகரிக்க வேண்டும் என்னும் நோக்கத்தில் கண்டன கிரந்தத்தை இயற்றினர். பலர் பிரவசனாதிகளுக்கு செல்லும் இடங்களிலெல்லாம் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ சரியல்ல மற்றும் ஸ்வாப்ன வருந்தாவனாக்யான கிரந்தம் அப்ரமாணம் என்றும் சொல்லி வந்தனர். மேலும் சிலர் சமபூஜாதி சம்பிரதாயத்திற்கு எதிராக பேசி வந்தனர்.

பர்யாய சமயத்தில், அணுவ்ருந்தாவனாக்யான படனத்திற்கும் எதிராகக் கொடி பிடித்தனர். மேலும் சிலர் பொய் குற்றச்சாட்டுகளை சுமத்தத் துவங்கினர். இந்த அனைத்து சமயங்களிலும் ஸ்ரீகளவர் சிறிதளவும் கவலைப்படவில்லை. வித்வாம்சர்கள் மூலமாக, சித்தாந்த மண்டன கிருதிகளை, கட்டுரைகளை, எழுத வைத்தார். ஸ்ரீராஜரில் மற்றும் ஸ்ரீபூதராஜரில் விசேஷமாக பிரார்த்தனை செய்து 'அனைத்தையும் ஸ்ரீபூதராஜர் பார்த்துக் கொள்வார்' என்று சொல்லி சமாதானம் செய்து கொண்டார்.

எனக்கு ஒரு முறை தாக்குதல் நடந்தபோது மிகவும் வருத்தமடைந்தார். இரு மாதங்களுக்குப் பிறகு, நான் ஸ்ரீ ஜீ.கிருஷ்ணமூர்த்தி அவர்களுடன் பஞ்சிமாரில் இருந்த குருகளை பார்ப்பதற்கு சென்றபோது, ஸ்ரீகளவர் இவ்வாறு கூறினார் - ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை நிராகரிப்பது, மற்ற பரம்பரையின் சிஷ்ய சம்பிரதாயத்தை குறை கூறுவது என சமீபத்தில் இந்த சம்பவங்கள் அதிகமாகி உள்ளன. உங்கள் மேல் நடந்த தாக்குதல் மிகவும் கவலை அளிக்கிறது. நீங்கள் எந்தவொரு எதிர்வினைகளையும் எடுக்காதீர்கள். உங்கள் இஷ்டப்படி நீங்கள் இருந்துவிடுங்கள். அனைத்தையும் ஸ்ரீபூதராஜர் பார்த்துக் கொள்வார். உங்கள் தொடர்ச்சியான கிரந்த சேவையை செய்து கொண்டிருங்கள்' என்று சொல்லி அருளி மந்திராட்சதை கொடுத்தார்.

பர்யாய சம்பந்தப்பட்ட கட்டுரைக்கும், இது ஸ்ரீகிருஷ்ணனின் சித்த என்று சொல்லி அருளினார். மடத்தை சேர்ந்தவர்கள் தவறு செய்தாலும் கோபம் கொள்ளாமல், அமைதியாக அதனை திருத்திக் கொண்டே இருந்தார். இவ்வாறு பூஜ்ய ஸ்ரீகளவர், தம்முடைய வாழ்க்கை முழுவதற்கும் அமைதியாக விரதத்தை அனுசரித்து வந்தார்.

## பக்த வாத்ஸல்யம்

ஸ்ரீஸோதெ மடத்திற்கு பக்தவர்க்க ஏராளம். அவர்களில் ஷிவள்ளி முதலான பல வம்சத்தவர்கள், கோடேஷ்வர வீட்டினர், தெய்வக்ஞ சமாஜத்தை சேர்ந்தவர்கள், மட்டு கிராமத்தவர்கள் ஆகியோர் ஸ்ரீவாதிராஜரின் அருளைப் பெற்று, ருஜுத்வத்தை உபாசிக்கும் கட்டத்திற்கு மேலானவர்கள். இவர்கள் அனைவரும் ஸ்ரீராஜரின் அருளால், பக்தர்கள் ஆகியிருக்கின்றனர். மடம் - கட்டெ என்பது, தத்வத்தை அறிந்து மேம்படும் இடம். ஸ்ரீஸோதெ மடத்தின் பர்யாய காலமோ, விசேஷ உற்சவமோ அல்லது ஜீர்ணோத்தார முதலான நிகழ்ச்சிகளோ, அந்தந்த சமாஜத்தவர்கள் ஒன்றாக சேர்ந்து விசேஷ சேவை செய்கின்றனர். சில முறை தனித்தனியாகவும் சேவை செய்திருக்கின்றனர்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு பூரகபைபோடி என்னும் பக்த வர்க்கத்தின் மேல் அபாரமான வாத்ஸல்யம் இருந்தது. பக்தர்களின் பிரார்த்தனையின்படி ஸ்ரீராஜரின் சேவைக்கு நேரம் ஒதுக்கிக் கொடுத்தார். எதுவும் புதுப்புது திட்டங்களை கொண்டு வந்து அவர்களிடமிருந்து காணிக்கைகளை பெற விரும்பியவர் இல்லை. அப்படி ஏதாவது திட்டம் வந்தால், அதைப் பற்றிய அறிவிப்பு கொடுக்கவும் குருகள் தயங்கினார்.

பக்தர்களின் துக்க கஷ்டங்களை, சமாதானம் செய்து, அதன் பரிகாரத்திற்காக குருகளிடம் பிரார்த்தனை செய்து, அருளுடன் மந்திராட்சதை கொடுத்து வந்தார். பூஜ்யரின் பாவன தரிசனமே துக்கத்தினை பரிகரிக்கும் வழியாக இருந்தது. அவருடைய ஆறுதலே மனதிற்கு அமைதியை கொடுத்தது. அவர் கொடுத்த மந்திராட்சதையினால் கஷ்டங்கள் விலகின. ஸ்ரீராஜர் போதித்த தாழ்மை குணத்தை பின்பற்றிய குருகள் அவர். ஆகையாலேயே ஸ்ரீகளவர் தாய் உள்ளம் கொண்டவர். பிறரின் துக்கங்களைக் கேட்டு, அவற்றை தன்னுடைய துக்கமாக கருதியவர். வாத்ஸலயத்தைக் காட்டி பரிகாரம் கொடுத்தவர். பக்தர்களுக்கு தம் கஷ்ட நஷ்ட பரிகாரத்தின் அனுபவம் ஆகிக் கொண்டிருந்தன.

## ஜீர்ணோத்தாரங்கள் செய்தார்

ஸ்ரீஸோதெ வாதிராஜ மடத்திற்கு ஸ்ரீராஜரின் காலத்தில் 120 ஷாகா மடங்கள் இருந்தன என்னும் தகவலை, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் சொல்லிவந்தார். ஸ்ரீகுருராஜர் 120 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்பதன் குறிப்பாக இது இருக்கலாம். அவை அனைத்தும் ஒரே மாதிரியாக இருந்திருக்கவில்லை. காலகிரமத்தில் அவற்றிலிருந்து மேலும் பல ஷாகா மடங்கள் உருவாகியிருக்கலாம். ஸ்ரீமடத்தின் நிர்வாகத்திற்கு உட்பட்ட ஷாகா மடங்களுக்கு மூலமாக உடுப்பி மற்றும் ஸோதெ மடங்களே இருந்தன.

ஷாகா மடங்கள்: கும்பாஸி, ஹூவினகெரெ, உண்டாரு, நாரள, உத்யாவர, ரெஞ்சாள, கெஞ்சகாரு, மத்யவாட, பேளகி, கோகர்ண, அரிதோடு, தீர்த்தஹள்ளி, பஞ்சிமாரு, நடாவரம், சென்னை.

இவற்றில் பல மடங்களில், சிதிலமடைந்து இருந்த முக்கிய கட்டட பாகம் மற்றும் தேவதா குரு சன்னிதியின் முதல் கட்டத்தின் ஜீர்ணோத்தார காரியத்தை மேற்கொண்டு அதனை முடித்தவர் – ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர். ஸோதெயில் இருக்கும் ஸ்ரீராஜரின் சன்னிதி, நடுவில் இருக்கும் கோயில், த்ரிவிக்ர தாம, சமையல் அறை, போஜன ஷாலெ ஆகியவற்றையும் புதுப்பித்தவர் ஸ்ரீகளவரே. இதைப் போலவே கும்பாஸி, ஹூவினகெரெ, பேளகி, மத்யவாட, நாரள, உடுப்பி ஆகிய அனைத்து இடங்களிலும் ஜீர்ணோத்தார காரியத்தை குருகளே செய்திருக்கிறார். இந்த அனைத்து காரியங்களுக்கும் பக்தர்கள் தாமாகவே முன்வந்து தக்க பொருளுதவி முதல் அனைத்து சேவைகளையும் செய்து தன்யர் ஆகியிருக்கின்றனர். எந்தவொரு ஜீர்ணோத்தாரமாக இருக்கட்டும், பூஜ்ய ஸ்ரீகளவர் அதற்காக எந்தவொரு பொருளுதவியையும் யாரிடமும் வேண்டவில்லை. பல இடங்களில் மடங்களிலிருந்தே முழு பொறுப்பினையும் ஏற்று வேலைகளை முடித்ததுண்டு.

ஸ்ரீகளவர், குருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தர், இன்னஞ்செ'யில் துவக்கிய உயர்நிலைப்பள்ளியை மேம்படுத்தி, அந்த கிராமத்து மக்களின் கல்விக்கு உதவியது மிகவும் அற்புதமான செயல். அந்தப் பள்ளி இன்று விசேஷமான நிறுவனமாக வளர்ந்து புகழ் பெற்று நிற்கிறது. அங்கு படிக்கும் மாணவர்களுக்கு இலவச உணவு, தேவையான நூலகம் ஆகிய தேவைகளை ஸ்ரீகளவர் செய்திருக்கிறார்.

## பா⁴விஸமீர குருகுல ஸ்தாபனை

ஞானேனைவ அம்ருதீபவதி – என்பது ஞானத்தின் பெருமையை விளக்குகிறது. மோட்சத்தை கொடுக்கக்கூடிய ஞானத்தை சம்பாதிப்பதற்கு சாஸ்திர அத்யயனம் தேவை. அதன் மகிமையை அறிந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பா⁴விஸமீர குருகுலத்தை ஸோதெயில் 2006ம் ஆண்டில்

நிறுவினார். வேத, வேதாந்த, வ்யாகரண, ந்யாய, ஸாஹித்யாதி பிரகாரங்களின் சிறந்த அத்யயனத்திற்கு ஏற்பாடு செய்தார். தக்க ஆசிரியர்களை நியமித்து, அனைத்து வசதிகளையும் ஏற்படுத்திக் கொடுத்தார். வித்யார்த்திகளுக்கும் இலவச உணவு, இருப்பிடம், நூலகம் ஆகிய தேவைகளை செய்து கொடுத்தார். வித்யார்த்திகளின் அத்யயனம் முடிந்தபின், அவர்களுடைய வாழ்க்கைக்கும் உதவியாக சில ஏற்பாடுகளை செய்து கொடுத்தார்.

பூஜ்யரே அந்த வித்யார்த்திகளுக்கு உபதேசம் செய்து, ஸ்ரீஹரிகுருகளில் விசேஷமாக பிரார்த்தனை செய்து, அவர்களை விசேஷமாக ஆசிர்வதித்தார். இந்த குருகுலத்தில் சர்வமூலாதி கிரந்தங்களுடன் ஸ்ரீவாதிராஜரின் கிரந்தங்களை படிப்பதிலும் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. வித்வத் பிரபஞ்சத்தில், ஸ்ரீவாதிராஜரின் கிரந்த அத்யயனம் விசேஷமாக நடப்பதில்லை என்பதைக் கண்டு, அதற்கு சம்பந்தமான பாட கிரமத்தை இங்கு வைத்துள்ளார். ஆக மொத்தம், குருகுலத்தில் அத்யயன காலம் 12 ஆண்டுகள். சாஸ்திர அத்யயனத்துடன், ஹரிதாச சாகித்ய போதனை மற்றும் நவீன கல்வியையும் போதிக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

## திதி நிர்ணய ஆசரணை

ஜகத்குரு ஸ்ரீமன் மத்வாசார்யர் பரம விஷ்ணு விரதமான ஏகாதசிக்கு கொடுத்த சிறப்பினை, மரியாதையை வேறு யாரும் கொடுத்திருக்கவில்லை. அதனை அறிந்து கொண்டு, தினத்ரய திதியை சரியாக பின்பற்ற வேண்டும். 'வ்ரதகளெல்ல ஏகாதஷி விரதத ஹிந்தெ', 'ஹரிதினக்கெ மருதினக்கெ ஸரியில்லவெந்தெந்து, ஹரிவ ஹாவனு ஹிடியலோ' - என்பது வாக்கு. இவ்வாறு திதிகளுக்கு சம்பந்தப்பட்டவாறு கொண்டாடப்படும் பண்டிகைகள் ஆகிய விஷயங்களில் வேறுபாடுகள் இருந்தால் அதில் மகா அனர்த்தம் உண்டாகின்றன.

தினத்ரய திதிகளின் சம்பந்தப்பட்ட வேறுபாடுகளை, பிரமாணத்துடன் விமர்சித்து முடிவெடுக்க வேண்டியதாகிறது. இதனை நிர்ணயிப்பதற்கு உபதேச ரூபமாக வந்திருப்பதே 'திதி நிர்ணய' நாம பிரமாண கிரந்தம் ஆகும். இதனை அனுசரித்து பா⁴விஸமீர ஸ்ரீவாதிராஜர் 'ஏகாதசி நிர்ணய' கிரந்தத்தை இயற்றியுள்ளார். இந்த கிருதியில் சொல்லப்பட்ட கணித விதானங்களால், ஏகாதசி முதலான திதிகளை நிர்ணயித்து பின்பற்றினால், ஸ்ரீஹரிவாயு குருகளுக்கு அது சம்மதமே ஆகிறது என்பது ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் கருத்து. 20.4.2007 அன்று உடுப்பி ஸ்ரீகிருஷ்ண மடத்தில் லோகார்ப்பணம் செய்த 'திதி நிர்ணய' கிரந்தத்திற்கு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் கொடுத்த அருளுரை இவ்வாறு இருந்தது.

## ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் அருளுரை

மத்வமத பிரவர்த்தகரான ஸ்ரீமத்வாசார்யர் உபதேசம் செய்திருக்கும் 'திதி நிர்ணய' ஒரு அற்புத கிருதி. இதில் அக்ஷர ஸங்க்யா பத்ததியில் திதி கணிதத்தின் ஸ்லோகங்கள் உள்ளன. உடுப்பியில் சில மடங்களில் இதன் பிரதிகள் இருந்தாலும், வெளியில் எங்கும் கிடைக்காத இந்த கிருதி, முதல்முறையாக 1974ல் அகில பாரத மாத்வ மஹா மண்டலத்திலிருந்து, சர்வக்ஞாசார்யரின் சர்வமூல கிருதிகளுடன் வெளிவந்தது. இதன் ஒரு பிரதி நம் மடத்தில் உள்ளது. 1993ம் ஆண்டில் த்ருக் கணித பஞ்சாங்கம் துவங்கியபின், அஷ்ட மடங்களின் மாத்வ சிஷ்யர்களில் ஏகாதசியின் ஆரசணையைக் குறித்து சந்தேகம், குழப்பங்கள் நிவாரணம் ஆகியிருக்கிறது. சில இடங்களில் ஒரே இடத்தில் வசிக்கும் ஒரே குடும்பத்தினர் வெவ்வேறு நாட்களில் ஏகாதசியை பின்பற்றுவது கண்டு வந்திருக்கிறது.

தற்போதைய, பழமை முறையிலான பத்ததிகள் அல்லது த்ருக் கணித பத்ததியை பின்பற்றும் மாத்வர்கள் அனைவருக்கும் மாத்வ சம்பிரதாய பிரவர்த்தகரான ஸ்ரீமத்வாசார்யரே மூல புருஷர். இந்த இருவருக்கும் இந்த திதி நிர்ணயம், பிரமாணம் ஆவதால், இதில் ஆசார்யர் உபதேசித்திருக்கும் கணக்கிலேயே திதிகளை நிர்ணயித்து பஞ்சாங்கம் செய்தால், ஏகாதசி

விஷயங்களில் உண்டாகியிருக்கும் குழப்பங்கள் பரிகாரம் ஆகி, மாத்வ சமாஜத்தின் ஒற்றுமை, வளர்ச்சி ஆகியவை சாத்தியம் ஆகிறது.

## கண் மூடியிருந்தாலும் முகம் ஒளிர்கிறது

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு, மிகவும் பவித்ரமான ஸோதா க்ஷேத்திரம் என்றால் மிகவும் பிடித்தமான இடம் ஆகும். சாதுர்மாஸ்யாதி பர்வகாலங்களில் அங்கேயே இருந்து, விசேஷ அனுஷ்டானங்களுடன் ஸ்ரீகுருராஜ, ஸ்ரீபூதராஜரின் அருளுக்கு பாத்திரர் ஆனவர் ஸ்ரீகளவர்.

கால நாமக ஹரியின் கருணாபாத்ரரான ஸ்ரீகளவரின் நேரம் தவறாமை மற்றும் ஒழுங்கு ஆகியவை மெச்சத்தக்கது. 73 வசந்தங்களைக் கண்டு வாழ்ந்த அவருடைய வாழ்க்கையில், ஆசிரம காலமே 64 ஆண்டுகள். குருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்த ஸ்ரீபாதர், சிஷ்யரின் ஆசிரமம் ஆனபிறகு பல காலம் இருந்திருக்கவில்லை. வெறும் 35 நாட்கள் மட்டுமே இருந்தார். அன்றிலிருந்து சுமார் 63 ஆண்டுகள் காலம், வேறு யாருடைய உதவியும் இல்லாமல், பூஜாதி கைங்கர்யங்களை தான் ஒருவரே விதிப்படி, நேரத்திற்கேற்ப நடத்திக் கொண்டு வந்தார் ஸ்ரீகளவர்.

லௌகிக நிமித்தத்தினால், பூஜை, ஜபங்களை என்றும் காலம் தவறி, மீறி செய்ததில்லை. யாருக்கும் தொந்தரவு ஆகாதவாறே இவற்றை செய்து கொண்டு வந்திருந்தார். சிஷ்ய பக்தர்களின் அனுகூலமே அவருடைய சிந்தனையாக இருந்தது. சிஷ்யரை ஏற்றுக் கொண்டபிறகும், முழுமையான பொறுப்பினை ஒப்படைக்கவில்லை. அந்த ஆண்டும், ஸோதெயில் சாதுர்மாதத்தில் அமர்ந்தார். தினப்படி தார்மிக நடவடிக்கைகள் வழக்கம்போல நடந்தன. சிஷ்யரான ஸ்ரீவிஷ்வவல்லப தீர்த்தர் உடுப்பியில் பர்யாய பீடத்தில் இருந்த ஸ்ரீஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவருக்கு பூஜாதி கைங்கர்யங்களில் உதவியாக இருந்தார்.

அன்று சிராவண சுத்த பஞ்சமி. சனிக்கிழமை. வழக்கம்போல காலை ஸ்னானாதிகளை முடித்து, ஆராத்ய தெய்வத்தை சிறப்புடன் பூஜித்து, ஸ்ரீராஜரின் பஞ்சவ்ருந்தாவனம் மற்றும் ஸ்ரீபூதராஜாதி தேவஸ்தான சன்னிதியில் பூஜைகளை செய்து முடித்தார். வந்திருந்த 400க்கும் மேற்பட்ட பக்தர்களுக்கு தீர்த்தம் கொடுத்தார். பிறகு ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசரின் ஆராதனா ரஜதோத்ஸவத்தை துவக்கி வைப்பதற்கு ராஜாங்கண மேடைக்கு வந்தார். வேதகோஷ - பிரார்த்தனைக்குப் பிறகு, தீபம் ஏற்றி, நிகழ்ச்சிகளை துவக்கி வைத்தார்.

ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர் இயற்றிய ஸ்ரீராஜரின் ருஜுத்வ மஹிமா சேவா பாக்கியத்தை மேற்கோள் காட்டியவாறு 'அனைவரும் ஸ்ரீராஜரின் ருஜுத்வ மஹிமா பிரஸாரத்தை வாழ்க்கையில் ஏதோ ஒரு விதத்தில் செய்து வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளவேண்டும்' என்றார். அன்றைய ஸ்ரீகளவரின் அந்த உபதேசம் பூஜ்யரின் ஆணையாகவே இருந்தது. பிறகு வித்வான், ஸ்ரீபுஷ்கர பிரஸாதாச்சார்ய, அற்புத உபன்யாசத்தை அருளி, ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை விளக்கினார். அருமையாக உபன்யாசத்தை செய்து அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுத்தார். அங்கு வந்திருந்த பக்தர்கள் அனைவரும் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ மஹிமா ஞானஸம்பன்ன சமூகமே ஆகியிருந்தனர். அங்கேயே ஒரு இடத்தில் ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யான ஹோமமும் நடந்தது. மதியத்திற்குப் பிறகும், வெவ்வேறு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

பிக்ஷை ஏற்றுக் கொண்டு, பக்தர்கள் அனைவரின் பிரஸாதம் ஆனபிறகு, நூற்றுக்கணக்கான பக்தர்களுக்கு மந்திராட்சதையைக் கொடுத்து அருளினார். கடைசியில், ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரின் சிஷ்யரான மாண்ட்யா ஸ்ரீவராஹஹரி விட்டல தாசர், தம் குருகளின் யுக்திமல்லிகா பத்யானுவாத (ஒரு பகுதி மட்டும்) பிரதியை ஸ்ரீகளவருக்குக் கொடுத்தார். அதனை ஒரு முறை புரட்டிப் பார்த்த ஸ்ரீகளவர், இதனை பிரசுரிக்கும் முன்னர், நிப்பாணி ஆசார்யரிடம் ஒரு முறை காட்டுங்கள் - என்று சொல்லி, மந்திராட்சதையுடன் அந்த புத்தகத்தை திரும்ப தாசரிடம் கொடுத்தார் ஸ்ரீகளவர்.

உடனே, அவர்கள் அனைவரின் எதிரிலேயே, இரு கைகளையும் மேலே தூக்கி 'ராம, ராம, ராம' என்று உரக்க நாமஸ்மரணம் செய்தவாறு எந்தவொரு பிரச்னைகளும் இல்லாமல், புன்னகையுடன் கூடிய முகத்துடன் ஸ்ரீகளவர் ஹரிபாதம் அடைந்தார். பிறகும்கூட, அந்த புன்னகை முகம் வாடவேயில்லை. விகாரம் அடையவில்லை. அகண்ட தியானத்தில் இருப்பவரைப் போலவே தெரிந்தார்.

நிறைந்த சபை பாய்ந்து வந்து, திவ்யமூர்த்தியின் தரிசனம் பெற்று, கண்ணீர் விட்டு, அலௌகிக மஹிமைகளை கொண்டாடி தன்யர் ஆயினர். வெகு தூரத்திலிருந்து வந்திருந்த பக்தர்கள் வணங்கி பவித்ரமாயினர். சிஷ்ய ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர் உடுப்பியிலிருந்து ஸ்ரீமடத்தின் சிஷ்யர்களுடன் வந்து ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். சிஷ்யர்களுக்கு அனைத்தையுமே இழந்ததைப் போல ஆயிற்று. ஷிரூரு மடத்தின் ஸ்ரீகளவரும் வந்திருந்தார். பிறகு, விதிப்படி, பூஜ்ய ஸ்ரீகளவரின் பாவன பார்த்திவ சரீரத்தை வைபவத்துடன், தவல தீர்த்தத்திற்கு கொண்டு வந்தனர். அபிஷேக ஸ்னானாதிகளுக்குப் பிறகு, மறுபடி ஊர்வலத்தில் ஸ்ரீத்ரிவிக்ரம தேவரின், ஆராத்ய தெய்வத்தின் மற்றும் ஸ்ரீராஜரின் பஞ்ச வ்ருந்தாவனத்தின் எதிரில் வந்து ஆரத்திகளைக் காட்டினர். துளஸி மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட சரீரத்தை வேத மந்திர பத பத்ய பராகுகளின் கோஷணைகளுடன் அங்கிருந்த ஒன்பது வ்ருந்தாவனங்களின் அருகில் ஸ்ரீவராஹ தீர்த்தரின் வ்ருந்தாவனத்தின் அருகில், ஸ்தாபனை செய்தனர்.

73 வஸந்தங்களை முடித்த பூஜ்ய ஸ்ரீகளவரின் வாழ்க்கை, அர்த்தபூர்ணமானது. அபிமானங்களைக் கொண்டது. பக்தர்களை அவர் என்றும், எவ்வித பிரதேச வேறுபாடுகளுடன் கண்டதில்லை. அவர்கள் அனைவரும், ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ மகிமையில் அசைக்கமுடியாத நம்பிக்கை, சிரத்தை உள்ளவர் என்றும், தம்மவர் என்றும் அவர் நினைத்தார். அத்தகைய பக்தர்கள் அனைவரின் ஆத்யாத்மிகாதி தாபத்ரயங்களின் பரிகாரத்திற்கு மற்றும் நலனுக்கு நிரந்தரமாக பிரார்த்தனை செய்தவாறு, அவர்களுக்கு பரிகார உபாயத்தை கொடுக்கத்தக்க தன்வந்திரியாக இருந்தார். ஸ்ரீகளவருக்கு ஸ்ரீஷனின் அருளால் அனேக சாஸ்திரங்களின் மற்றும் கலைகளின் ஞானம் இருந்தது. வேதாந்த, ஸாகித்ய, ஸங்கீத, ஆயுர்வேத, ஹோமியோபதி, ஆலோபதி, ஷில்ப, யோக, தர்மசாஸ்திர ஆகியவற்றில் அபாரமான பாண்டித்யம் அவருக்கு இருந்தது.

யதீந்திரசந்திர அஸ்தமித்தான். தத்வஞான சூரியன் மறைந்தான். ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ மகிமாஞான ஸம்பன்னர் மறைந்தார். அனுஷ்டான நிரதர் தூரமானார். ஸ்ரீவாதிராட் ப்ரியரான ஸ்ரீகளவர், ஸ்ரீவாதிராஜ பதகஞ்ச மதுவ்ரதரானார். பார்ப்பதற்கு வந்த பக்தர்கள் குழு, தழுதழுத்த குரலைக் கொண்டவர்களாக சன்னிதியில் சரணாகதி அடைந்தனர். குருகள் த்ருஷ்ய ரூபத்தினால் தெரியாமல் இருந்தாலும், தேஜோ ரூபத்தினால் நம்மிடையே இருக்கிறார். மனித உருவில் தெரியாமல் இருந்தாலும், சக்தியாக நம்மிடையே இருக்கிறார். நினைக்கும் பக்தர்களின் மனதில், வாஸனா ரூபத்திலும் தெரிகிறார்.

பூஜ்ய ஸ்ரீகளவர், ஸ்ரீவாதிராஜரின் கருணையைப் பெற்ற குழந்தை என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. போலவே, நிரந்தரமான ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யான ஷிலாலேகன ஸேவையை ஸ்ரீராஜர், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த குருகளின் மூலமாக நிறைவேற்றி, ஏற்றுக்கொண்டு, இதய கமலத்தில் இருக்கும் ஹயமுக தேவனுக்கு சமர்ப்பித்து அருளினார். 'இமாம் க்ருதிம் ஷிலாயாம் து லேகயித்வா ஸமாக்ரத: || ஸ்தாபயேதத்ர தாம் த்ருஷ்ட்வா ஸந்த: சந்தோஷ மாப்னுயு:' (ஸ்ரீ ஸ்வா.வ்ரு.ஆ – அத். 73). என்னும் ஸ்ரீராஜரின் ஆணைக்கேற்ப ஸ்வப்ன மூலமாக ஸ்ரீராஜரால் ஆக்யான கேட்டு, ஸ்ரீவ்ருந்தாவனாசார்ய ரூபத்தினால் வந்த அந்த மஹனீயரே, பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரில் மூர்த்திமந்தராக நிலைத்து நின்று, ஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யான ஷிலாலேகனத்தை செய்து, அருளினார் என்பது உண்மை. இந்த செயல் அப்படியே நடந்துவிடவில்லை. வேறு யாராலும் அப்படி ஏதாவது நடந்திருப்பதையும் நாம் பார்க்கவில்லை. இதெல்லாம் ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யானத்திலேயே இருக்கும் ஆணைக்கேற்ப (அ.73) ஆகியிருப்பது. இது ஸ்ரீராஜரின் மஹாப்ரீதிகரமான சேவை. இந்த சேவையினை செய்த குருகள் – குரூத்தமர். தன்யர். ப்ராத:ஸ்மரணீயர்.

இனி பூதாத்ம ஸ்ரீகளவரின் புண்ய ஸ்மரணை, நம் மூச்சாகட்டும். இந்த மஹாத்மரின் மஹிமா குணகானம் நித்ய ஆன்ஹிகமாகட்டும். அவருடைய சன்னிதி தரிசனத்தைக் காண வேண்டும் என்னும் விருப்பம், வாழ்க்கையில் இருக்கட்டும். அனைத்து லட்சணங்களையும் கொண்ட ரூப சிந்தனை, தத்வ சிந்தனைக்கு முன்னோடியாக இருக்கட்டும். அவர் கொடுத்த உபதேசங்கள் அப்படியே பின்பற்றப்படட்டும். மந்த்ரோபதேசம் மந்திர ஸித்தி ஆகட்டும். மந்திராட்சதை அபயத்தைக் கொடுத்து, அக்ஷய பலன் கொடுக்கட்டும்.

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதரின் கரகஞ்ச ஸஞ்சாதரும், கருணாபாத்திரரும், ஸன்னிதானத்தின் சலபிரதிமை ஸ்தானத்தில் இருப்பவருமான ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர், நம் அனைவரையும் அருள்பவராக இருக்கட்டும். பூஜ்யரிடமிருந்து ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ மஹிமா பிரச்சாராதி காரியங்கள் ஊகிக்க முடியாத அளவிற்கு பரவட்டும். குருகளின் கனவான 'குருகுலம்' பூஜ்யரின் வழிகாட்டுதலில் நிறைவேறட்டும்.

இனி நாம் அனைவரும் குருஸ்ரீ விஷ்வோத்தம தீர்த்தரை பூஜ்யரிலேயே காண்போம்.

இந்த அற்புத ஞான நிதிக்கு, கருணாளுவிற்கு, மனனஷீல முனிக்கு, அனந்தானந்த சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.
|| ப்ரீதோஸ்து கிருஷ்ணப்ரபு: ||

## III. ஞானதிருஷ்டி

பரமபூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் ஞானதிருஷ்டி ஊகிக்க முடியாதது. அந்த ஸித்தியை தம் சொந்தத்திற்காக அவர் பயன்படுத்தியதே இல்லை. அந்த ஸித்தியின் பலனை மற்றவர்களுக்காக அருளியவாறே இருந்தார். அத்தகைய அருளை கணக்கெடுக்கவே முடியாது. அவை அனைத்தும் அந்தர்யாமி மற்றும் தத்வாபிமானிகளின் ப்ரேரணா கார்யம் ஆகும். அவை அனைத்தும் தாமாகவே ஆகவில்லை. அந்தர்யாமி மற்றும் தேவதைகளை தக்க ஜப தப ஸ்துதிகளுடன் பிரார்த்தனை செய்தவாறு, மகிழ்ச்சிப்படுத்த வேண்டும். அப்போது மட்டும், இத்தகைய ஸித்தி கிடைக்கிறது. அத்துடன், இத்தகைய ஸித்தி தொடர்ச்சியான உபாசனையின் பலன். ஆகையாலேயே, விரும்பிய அனைத்தும் உடனடியான நடந்தன.

## பதரி யாத்திரை:

2000ம் ஆண்டு. நாங்கள் அனைவரும் பதரி யாத்திரையை செய்ய வேண்டும் என்று நினைத்தோம். அந்த யாத்திரை நல்லபடியாக நடக்க வேண்டி, பல மந்திராட்சதை பெறுவதற்கு, ஸோதெ சென்றோம். ஸ்ரீத்ரிவிக்ரம ஸ்வாமியின், ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் தரிசனம் ஆயிற்று. பல-சேவை சமர்ப்பித்தோம். பூஜ்ய ஸ்ரீகளவர் அங்கேயே தங்கியிருந்தார். அவரிடம் பிரார்த்தனை செய்து, நிர்விக்ன யாத்திரைக்காக ஸ்ரீகளவரிடமிருந்து மந்திராட்சதை பெற்றோம். நமக்குப் பிறகு, மைஸூரின் ஸ்ரீ B.R.ராவ் என்பவரும் பதரி யாத்திரைக்காக மந்திராட்சதை பெற வந்தார். அவருக்கு மந்திராட்சதை கொடுக்கும்போது ஸ்ரீகளவர் கூறியது இது.

பதரி வழியில் ஜாக்கிரதையாக இருக்கவும். நடுவில் மலைச்சரிவு உண்டாகலாம். ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரிடம் விசேஷமாக பிரார்த்தனை செய்யவும் – என்றார். நாங்கள் புறப்படும் நாள், ஸ்ரீராவ் அவருக்கு தெரியவில்லை. அவர் புறப்படும் சமயம் எங்களுக்கும் தெரியவில்லை. ஆனால் தற்செயலாக ஹரித்வாரத்தில் நாங்கள் இருவரும் சந்தித்துக் கொண்டோம். அதன் பிறகு, அவர் எங்களை பின் தொடர்ந்தே வந்துகொண்டிருந்தார். பதரியிலிருந்து திரும்பும்போது நமக்கும் அவருக்கும் 5-6 மணி நேர வித்தியாசம் இருந்தது. நாங்கள் மதியத்தில் ஹரித்வாரத்தை அடைந்தால், அவர் இரவில் வந்து சேர்ந்தார். அப்போது நம்மைக் கண்டு ஸ்ரீகளவரின் கருணையை கொண்டாடினார்.

அதற்கான காரணத்தையும் கூறினார். வழியின் நடுவில் மலைச்சரிவு ஏற்பட்டு, 4-5 மணி நேரங்கள் பயணம் தடைப்பட்டது என்றும் மிகவும் மயிரிழையில் உயிர் தப்பினோம் என்றும்

கூறினார். பூஜ்ய ஸ்ரீகளவர் முதலில் குறிப்பிட்டதைப் போல நடந்தது. அவர் கொடுத்த மந்திராட்சதையினாலேயே நாங்கள் பிழைத்தோம் என்று சொல்லி மகிழ்ந்தார்.

## ஸ்ரீவ்ருந்தாவனாக்யான ஷிலா லேகன:

ஸ்ரீவ்ருந்தாவனாக்யானத்தில் ஷிலா லேகனத்தைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது. ஆனால், அந்த லேகன செய்யப்படவில்லை. 1994ம் ஆண்டு. நான் மற்றும் ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் வம்சத்தவரான ஸ்ரீனிவாஸாச்சார். இருவரும் சேர்ந்து ஸோதெ சென்றிருந்தோம். பூஜ்ய ஸ்ரீகளவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, அந்த லேகனத்தைப் பற்றிய பேச்சு வந்தது. 'அது உத்தம சேவை. ஆக்யானத்தின் ஆணை. ஆகையால், ஸ்ரீஹரிகுருகளின் பிரஸாதம் / குறிப்பு ஆகவேண்டும். நாம் பிரார்த்தனை செய்கிறோம். நீங்களும் பிரார்த்தனை செய்யுங்கள்' என்று ஸ்ரீகளவர் கூறினார்.

அப்படியெனில், பித்தளை பலகைகளின் மேல் ஆக்யானத்தின் ஸ்லோகங்களை பொறித்து (emboss), வ்ருந்தாவன சன்னிதியின் சுற்றிலும் உள்ள சுவற்றில் பதிக்கலாம் என்று பக்தியுடன் கூறினோம். அப்படியே செய்யலாம் என்று சொல்லி, ஸ்ரீகளவர் நீள, அகல அளவுகளை எடுக்கவும் என்று கூறினார். அத்தகைய அளவுகளை ஸ்ரீனிவாஸாச்சார் அவர் எடுத்தார். பெங்களூரின் ஸ்ரீ K.R. ஹரிசர்வோத்தம அவர், துவக்க ஸ்லோகங்களை பதித்த சில பலகைகளை தயாரித்துக் கொண்டு வந்தார். இவை அனைத்தையும் ஸ்ரீகளவர் பாராட்டினாலும், 'ஆக்யானத்தில் ஸ்ரீராஜரின் ஆணை - ஷிலாலேகன என்று இருக்கிறது. அது நிச்சயமாக ஆகும்' என்றார். அது சர்வக்ஞ சங்கல்பம். அது நிறைவேறினால், ஆக்யானத்தின் ஆணையை பின்பற்றியதைப் போல ஆகிறது. அதிக புண்ணியம். மேலும் அது சூர்ய சந்திரர்கள் இருக்கும் வரை இருக்கக்கூடியது' என்றார்.

நம் ஸ்ரீகளவர் ஊகிக்கவும் முடியாத ஸித்திகளைப் பெற்றவர். அது மட்டுமல்லாமல், ஸ்ரீராஜரின் சங்கல்பத்தை அறிந்தவர் என்று அறிந்தோம். பிறகு, பூஜ்யர் சொல்லியதைப் போல மொத்த ஆக்யானமும், கிரமப்படி, எழுதப்பட்டு வாதீஷ வரதனுக்கு சமர்ப்பிக்கப்பட்டது.

## ஸ்ரீலட்சுமி ஸ்வரூபம்:

ஸ்தோத்திரம் ஒன்றில் ஸ்ரீராஜர் - ஹயக்ரீவ சதுரூப ஸ்ரீயோபேத - என்று கூறுகிறார். இங்கு சதுரூப, ஸ்ரீயோபேத - என்று தனித்தனியாக படித்தால் அர்த்தம் சொல்வது சுலபம். ஆனால், ஸ்ரீகளவர் 'சதுரூபஸ்ரீயா' என்று பதச்சேதம் செய்து சிந்தனை செய்வார். அப்போது 'சதுரூப' என்பது ஸ்ரீலட்சுமிதேவியைக் குறிப்பதாக ஆகிறது. ஒரு முறை ஸ்ரீகளவர், அந்த விஷயத்தை வித்வான் ஸ்ரீராகவேந்திர புராணிகரிடம் கூறினார். பிறகு, அவர் பஞ்சராத்ரத்தின் துளு லிபியின் பிரதிகளை படித்தபோது 'ஸ்ரீயோளயா ததா காந்த்யா வாகீஷ்வர்யா ததைவ ச' என்னும் பத்தியைக் கண்டார். ஸ்ரீ, இளா, ஷாந்தி மற்றும் வாகீஷ்வரி என்னும் நான்கு ரூபங்களால் லட்சுமிதேவி, ஸ்ரீஹயக்ரீவ ரூபி பகவந்தனை உபாசனை செய்கிறாள் என்று தெரிந்தது. ஸ்ரீகளவர் இந்த விஷயத்தை அறிந்தபோது மிகவும் மகிழ்ந்தார்.

## வழி மாற்றி நலம் பெற்றது.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாயத்திற்கு (1996-97) முன்பான சஞ்சாரம். மந்திராலயத்தில் ஸ்ரீராகவேந்திர குரு சார்வபௌமரின் தரிசன பாக்கியம் பெற்று அங்கிருந்து புறப்படத் தயாரானார். அங்கிருந்து பள்ளாரி வழியாக ஹரிஹரத்திற்கு வரவேண்டியிருந்தது. மந்திராலயத்திலிருந்து பள்ளாரிக்கு வந்து அங்கு இரவு பூஜை முடித்து (ஸ்ரீகளவர் இரவில் பயணம் செய்வதில்லை. மிகவும் தவிர்க்கமுடியாத பட்சத்தில் மட்டுமே இரவு பயணம்) புறப்பட்டார். ஹுவினஹடகலி - ஹாவேரி வழியாக போவதாக இருந்தது. ஸ்ரீகளவரின் வாகனம் ஹூவினஹடகலியின் சமீபத்தில் வந்தது. ஓட்டுனரை வண்டியை நிறுத்துமாறு கூறினார். வேறு வழியாக செல்லுமாறு கூறினார். ஓட்டுனர் மறுபேச்சு பேசவில்லை. அங்கு நிறுத்தி வழி கேட்டனர். புது வழி கிடைத்தது. அதன் மூலம் ஹாவேரி சென்று, அங்கிருந்து ஹரிஹர

செல்லலாம் என்று தெரிந்தது. ஹரிஹரவில் ஒரு பக்தரின் வீட்டில் அன்றைய பிக்ஷை. செல்லும்போது, ஹாவேரியில் மற்றும் ஹரிஹரவில் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டு காலையில் 5 மணிக்கு அந்த எஜமானனின் வீட்டில் சென்று சேர்ந்தனர். பிறகு, பூஜாதி கார்யகிரமங்கள் அனைத்தும் முறைப்படி நடந்து முடிந்தது.

அன்று முக்கிய விஷயம் என்னவென்றால், முந்தைய இரவில், ஹூவினஹடகலி – ஹாவேரி வழியில், கொள்ளையர்களின் தொல்லை இருந்ததாம். மூன்று நான்கு வாகனங்களை நிறுத்தி, பயணம் செய்தவர்களை தாக்கி, செல்வங்களை கவர்ந்தனராம். இந்த செய்தி பத்திரிக்கையில் வந்திருந்தது. பூஜ்ய ஸ்ரீகளவரின் சக்தி அப்போதே அனைவருக்கும் புரிந்தது.

## ஆசிரமம் வழங்குதல்:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தம் உத்தராதிகாரிகளை நியமிக்கும் தீர்மானத்தை செய்தது, 1996க்கு முன்னரே. அவருடைய மனதில், நம் நான்காம் பர்யாயத்திற்கு முன்னரே இந்த நியமனம் ஆகவேண்டும் என்னும் விருப்பம் மட்டும் இருந்தது. பர்யாயத்திலும் சில ஜாதகங்களை பார்த்தார். (ஸ்ரீஸோதெ வாதிராஜ மடத்தின் பரம்பரையில் ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் பிரஸாத / குறிப்பு கிடைக்காதவரை, உத்தராதிகாரிகளின் நியமனம் இல்லை). அந்த ஜாதகங்கள் எவற்றிற்கும் பிரஸாதம் / குறிப்பு கிடைக்கவில்லை. பூஜ்யர் அதற்காக கவலைப்படவில்லை. இந்த விஷயத்தின் பாரத்தை ஸ்ரீபூதராஜரிடம் ஒப்படைத்து நிம்மதியாக இருந்தார்.

பிறகு, 2006ம் ஆண்டில் வித்வான். பாடிகாரு ஸ்ரீனிவாஸ தந்த்ரி அவர்களின் மகனான ஸ்ரீராகவ தந்த்ரி அவரின் (அவரே தற்போதைய ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர்) ஜாதகத்தை பார்த்து, பிரஸாதத்திற்கு பிரார்த்தனை செய்தபோது, அதற்கான தக்க அனுமதி கிடைத்தது. ஜூன் 1 2006 அன்று நியமன நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. இதனை அறிந்த நான் ஸோதேக்கு சென்றேன். ஸ்ரீகளவரைக் கண்டு வணங்கி இவ்வாறு கூறினேன்.

‘ஸ்வாமி, ஸ்ரீமடத்தின் பரம்பரையில் இது ஒரு வரலாற்றுச் சம்பவம். ஸ்ரீராஜரின் பக்தர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியான நிகழ்ச்சி. ஆகையால், இந்த ஆசிரம நியமன விஷயத்தை விளக்கும் பத்திரிக்கை ஒன்று தயாரானால் நல்லது. அது ஒரு ஆவணமாக ஆகிறது’ என்றேன். அதற்கு ஸ்ரீகளவர் கொடுத்த பதில் இவ்வாறு.

‘நீங்கள் சொல்வது சரியே. ஆனால், பாடிகாரு தந்த்ரிகளின் குடும்பம் மிகப்பெரியது. அந்த சமயத்தில் ஏதேனும் விழுப்பு (ஜாத–அஷௌச) ஆகியவை வந்துவிட்டால், நிகழ்ச்சியை தள்ளிப் போட வேண்டியிருக்கும். பேச்சுவாக்கில் விஷயம் ஸ்ரீராஜரின் பக்தர்களை சேர்ந்திருக்கிறது. வசதி, நேரம் இருப்பவர்கள் கண்டிப்பாக வந்துவிடுவார்கள். ஆகையால், பத்திரிக்கை ஆகியவை தேவையில்லை’ என்றார்.

நானும் எதுவும் பேசாமல் அமைதியானேன். பிறகு, ஸ்ரீகளவரின் வாக்குக்கேற்ப தந்த்ரிகளின் குடும்பத்திற்கு விழுப்பு வந்து, நிச்சயிக்கப்பட்ட நாளன்று ஆசிரமம் ஆகவில்லை. அது அடுத்து 13-6-2006 அன்று மிகச்சிறப்புடன் நடைபெற்றது. ஸ்ரீராகவ தந்த்ரிகளுக்கு துர்யாசிரமம் வழங்கி ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர் என்று நாமகரணம் செய்தார் குரு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர்.

## வாழை மரத் தோரண விபத்திலிருந்து காத்தார்

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் மூன்றாம் பர்யாயத்தில் (1980-81) ஒரு நாள் மாலை பூஜை. சாமர சேவை, ஆரத்திகள் முடிந்து, தீர்த்த மண்டபத்தில் தொட்டில் பூஜை. உடன், அஷ்டாவதானம் ஆயிற்று. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தீர்த்த மண்டபத்தின் எதிரில் கம்பத்தின் அருகில் அமர்ந்திருந்தார். ஸ்ரீஷிரூரு ஸ்ரீலட்சுமிதர தீர்த்தர் தீர்த்த மண்டபத்தில் ஆரத்திகளை செய்வதற்கு அமர்ந்தார். அந்த சமயத்தில் ஸ்ரீவிட்டலாசார்யர் (ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவரின் பூர்வாசிரம தந்தை) வந்து, ஸ்ரீகளவரை நமஸ்கரித்து, அருகில் அமர்ந்தார்.

அப்போது ஸ்ரீகளவர் கூறியது - ‘அங்கு அமர்வது வேண்டாம். அருகில் வாருங்கள்’. பூஜயரின் வாக்கிற்கேறப ஸ்ரீவிட்டலாசார்யர் அருகில் நகர்ந்து அமர்ந்தார். அடுத்த நொடி, மேலே கட்டப்பட்டிருந்த வாழைத் தோரணம் அறுந்து கீழே விழுந்தது. அனைவரும் வியப்படைந்தனர். அந்த நாளில் உற்சவங்கள் நடந்ததால், வாழை மர, புஷ்ப தோரண, அலங்காரங்கள் செய்யப்பட்டிருந்தன. அந்த கம்பத்தின் கீழேயே அமர்ந்திருந்தால், அவர் தலைமேலேயே அது விழுந்திருக்கும். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் அதனை அறிந்தவராக, நடக்கவிருந்த விபத்தினை தடுத்தார்.

## இரு கிணறுகளின் நிலையை அறிந்தார்

ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்தில் பஞ்சகங்கைகள் இருக்கின்றன. 1. ஆகாஷகங்கா. 2. அந்தரகங்கா 3. ஷீதலகங்கா 4. தவலகங்கா 5. பாதாலகங்கா (பாபவிமோசன தீர்த்த).

இவற்றில் ஆகாஷகங்கா ஸ்ரீத்ரிவிக்ரம தேவாலயத்தில் இருக்கிறது. அந்தரகங்கை மத்யமடத்தின் பிரகாரத்தில் இருக்கிறது. இந்த இரண்டு கிணற்றிலும் ஒரு முறை தண்ணீர் குறைந்தது. பூஜைக்கு பிரச்னை உண்டாயிற்று. ஆகையால், அவை இரண்டையும் மூடிவிட்டனர். தவல தீர்த்தத்தின் தண்ணீரையே பயன்படுத்தும் வழக்கம் தொடங்கியது.

அப்போது ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் இதைப் பற்றி இவ்வாறு கூறினார். ‘இந்த இரு கிணறுகளின் உள்பாகம் உடைந்திருக்கிறது. அது முழுவதுமாக உடைந்து விழுவதற்குள் இதனை சரிப்படுத்த வேண்டும்’. அதற்காக மூடியிருந்த கிணறை திறந்து பார்த்தபோது, ஸ்ரீகளவர் கூறியதைப் போல, கிணறு உள்ளே உடைந்திருந்தது. அதில் இருக்கும் ஆகாஷகங்கை, ஸ்ரீத்ரிவிக்ரம தேவாலயத்தின் கீழ்ப்பாகத்தை அடையுமாறு இருந்தது. ஸ்ரீகளவரின் ஆணைப்படி, அந்த இரண்டு கிணற்றின் நிலையை உடனடியாக சரிசெய்தனர். தண்ணீர் வற்றியிருந்த கிணறு, உள்ளே உடைந்திருப்பதை கண்டுபிடித்து, அதனை சரியான நேரத்தில் சொல்லி சரிப்படுத்தியவர் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதர்.

## அபூர்வமான பாடத்தைக் கூறினார்.

ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யர் 19ம் நூற்றாண்டின் ஞானி. வியாஸ மற்றும் தாஸ சாகித்யங்களில் அறிஞர். ஸ்ரீஜகன்னாததாசரின் மேரு கிருதியான ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்திற்கு இருக்கும் வியாக்யானங்களில் சிறந்தது, இவர் எழுதிய ஸ்ரீவியாஸ தாஸ ஸித்தாந்த கௌமுதி. ஆசார்யரின் விஷயத்தில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தக்க கௌரவத்தைக் கொண்டிருந்தார்.

ஸ்ரீவியாஸ தாஸ ஸித்தாந்த கௌமுதியின் மங்களாசரணையின் பாகத்தில் ஒரு ஸ்லோகம்:

மதிமந்தம் ஹனுமந்தம் பீமம் பைஷ்மிபதி ப்ரியம் |
மத்வம் த்வஸ்தகுணாபாவ முரஹந்து:ப்ரியம் பஜே ||

இதில் ஹனும பீம மத்வஸ்துதி இருக்கிறது. அடுத்த ஸ்லோகத்தில் ஸ்ரீராஜரின் ஸ்துதி இல்லை. ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யர் ஸ்ரீவாதிராஜரை துதிக்காமல் கிரந்த ரசனை செய்கிறார் என்பதை ஊகிக்கவும் முடியாது. மேலும் இந்த ஸ்லோகத்தில் இருக்கும் இரண்டாம் சரணம் ‘மத்வம் த்வஸ்தகுணாபாவ முரஹந்து:ப்ரியம் பஜே’ என்பதில் ஸ்ரீவாதிராஜரை குறிப்பிட்டதாக தெரியவில்லை. இதைப் பற்றி பல வித்வாம்சர்களை விசாரித்தாலும், சரியான பதில் கிடைக்கவில்லை. இதற்கு கிடைத்த உரைகளும் தெளிவாக இல்லை.

ஒரு முறை ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் கவனத்திற்கு இதனை கொண்டு வந்தேன். பூஜ்யர் உடனடியாக இதற்கு தக்கதான ஒரு பாடத்தையே கூறிவிட்டார். ‘இது எனக்கு புரிந்தது. நீங்கள் வேறு கையெழுத்துப் பிரதிகளை பார்த்து தீர்மானிக்கலாம்’ என்றும் கூறினார். அவர் கூறிய இரண்டாம் சரணத்தின் பாடம் இவ்வாறு:

மத்வம் த்வஸ்தகுணாபாவம் மதுஹந்து:ப்ரியம் பஜே ||

இதில் முதலாம் பாகத்தினால் ‘நிர்குணவாதத்தை த்வம்சம் செய்த மத்வரை’ மற்றும் இரண்டாம் பாகத்தினால் ‘மது நாமக தைத்யனை கொன்ற ஸ்ரீஹயவதன ஸ்வாமிக்கு ப்ரியரான ஸ்ரீவாதிராஜரை’ என்று கூறினால், பஜே என்பதற்கு சரியாக பொருந்துகிறது. இது ஸோதெயின், வ்ருந்தாவன சன்னிதியின் கிரமத்திற்கும் சரியாக இருக்கிறது. இதனால், ஸ்ரீஹனும பீம மத்வ வாதிராஜரின் ஸ்துதி ஆயிற்று. பிறகு, வேறு கையெழுத்துப் பிரதிகளை பார்த்தபோது, ஒன்றில் இந்த பாடத்தைக் கண்டது, அது ஸ்ரீகளவரின் ஞானத்ருஷ்டிக்கு தக்க சாட்சி ஆனது அற்புதம்.

## IV - மகிமைகளின் தொகுப்பு

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பிருந்தாவன பிரவேசம் செய்தபிறகு வந்த பல புத்தகங்களிலிருந்து அவருடைய பல மகிமைகள் தெரிய வருகின்றன. அவற்றை இங்கு தொகுத்திருக்கிறோம்.

* நாத்திகராக இருந்த ஜில்லா அதிகாரி ஒருவர், ஸ்ரீகளவரைக் கண்டபோது, அவருக்குப் பின்னால் ஒரு ஒளிவட்டம் தெரிந்ததைக் கண்டார். ஸ்ரீகளவரிடம் சரணடைந்து, மடத்து ஜமீனை அடையும் தன் நோக்கத்தை விட்டு, பல மந்திராட்சதை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சென்றார்.

* உடுப்பியின் SLN.பட் அவர்கள் (சிண்டிகேட் வங்கி அதிகாரி), அவர் தமது பாட்டியின் அறிவுரைப்படி, பர்யாய பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடமிருந்து தொடர்ந்து 41 நாட்கள் தீர்த்தம் பெற்றுக்கொண்டு, மற்றவர்களால் தீர்க்க முடியாமல் இருந்த அவருடைய நோயினை போக்கிக் கொண்டார்.

* ஸ்ரீகளவரின் மாத்ருபக்தி அபாரமாக இருந்தது. பூஜ்யரின் மாத்ருஸ்ரீ அவர்கள் ஸ்வர்க்கஸ்தராவதற்கு முன், பூர்வாசிரம அண்ணனான ஸ்ரீராமசந்திராசார்யரின் வீட்டிற்குச் சென்று, தாய் படுத்திருந்த படுக்கைக்கு பிரதட்சிணம் செய்து நமஸ்காரம் செய்தார்.

* மட்டு கிராமத்தில் சில ஆண்டுகளாக மழை பொழியவில்லை. கிராமத்தவர்களுக்கு கவலை. அவர்கள் ஸ்ரீகளவரை பிரார்த்தனை செய்தனர். குருகள், ஸ்ரீஹரி குருகளை பிரார்த்தனை செய்தவாறு, ஸ்ரீஹரிக்கு பூர்ண-பலத்தை சமர்ப்பணம் செய்தார். பிறகு அபரிமிதமான மழை பெய்தது. அனைவரும் ஸ்ரீபாதங்களவருக்கு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தனர்.

* மந்திராலயத்தில் மடத்தின் மருத்துவமனை. ஸ்ரீகளவர் உள்ளே நுழையும்போது, உடம்பு முடியாமல் படுத்திருந்த ஒரு மனிதர், ஸ்ரீகளவரைப் பார்த்து ‘நரகத்திற்கு வந்த நாரதர்’ இவர் என்று கூவினார். ‘தர்ஷனாதேவ ஸாதவ:’ என்பது இதிலிருந்து தெரிகிறது.

* பெங்களூரு டி.ஆர். நகரில் ‘ஹயவதன க்ருபா’ இல்லத்தில் இருந்தவர், ஸ்ரீகளவரிடம் பிரார்த்தனை செய்தபோது, மந்திராட்சதையுடன், இரட்டை வாழைப்பழத்தைக் கொடுத்து ஆசிர்வாதம் செய்தார். அடுத்த ஒரே வாரத்தில், நீதிமன்றத்தில் விவாகரத்துக்காக விண்ணப்பத்திருந்த அந்தப் பெண்மணியின் கணவன் தானாகவே வந்து மறுபடி அவருடன் வாழ்வதாக கூறி மனம் திருந்தினார்.

* உடம்புக்கு முடியாமல் இருந்த பெண் ஒருவர், ஸோதெயில் குரு கர-ஸ்ப்ருஷ்ட ம்ருத்திகையை பக்தியுடன் பெற்று, உடல் நலம் பெற்று, முடிந்த அளவிற்கு பிரதட்சிணாதி சேவைகளை மற்றும் பிற சேவாதி செயல்களை செய்யும் அளவிற்கு முன்னேறினார்.

* ஸ்ரீகளவரின் வருகையால் ஹாரனள்ளியின் ஸ்ரீலட்சுமி நாராயணரின் வீட்டுக் கிணற்றில் இருந்த உப்பு நீர், சுத்தமான நீர் ஆனது. (7-6-1993).

* மடத்து சிப்பந்தி நக்ஷத்ரி தம்பதிகளின் குழந்தை அதிக ஜுரத்தினால் பாதிக்கப்பட்டபோது, ஸ்ரீகளவரின் ஹஸ்த ஸ்பர்ஷ மற்றும் மந்திராட்சதைகளால், உடல் நலம் முன்னேறி, உயிர் பிழைத்தார்.

* ஒரு முறை மடத்து வாகனம் புறப்பட்டபோது, உண்மையான ஓட்டுநர் அந்த ஆசனத்தில் இல்லாமல், ஸ்ரீபூதராஜரே ஒரு அம்சத்தால் அங்கு அமர்ந்து, வாகனத்தை ஓட்டி பத்திரமாக கொண்டு சேர்த்தார். ஸ்ரீபூதராஜர் 'ஹம்ஸாரூடரின் ஸத்வம்ஷபோஷகர்' அல்லவா?

* பள்ளாரிலியிருந்து வரும்போது, ஸ்ரீகளவரின் வாகனத்தை ஒரு கும்பல் தடுத்து நிறுத்தி, சூழ்ந்துகொண்டது. ஸ்ரீகளவர், அந்த நொடியில், பூதராஜரை வணங்க, எதிரில் ஒரு பேருந்து வந்தது. அதில் நிறைய ஆட்கள். இதனால் பயந்த இந்த கும்பல் ஓடியது. பிறகு அந்த பேருந்து அங்கிருந்து மறைந்தது, ஸ்ரீபூதராஜரின் மகிமையே ஆகும்.

* ஸ்ரீசென்ன கேஷவனை தரிசனம் செய்வதற்காக, ஸ்ரீகளவர் பேலூருக்கு சென்றபோது, யாரும் எந்த ஏற்பாட்டினையும் செய்திருக்கவில்லை. ஆனால், தெய்வயோகத்தினால் அனைத்து ஏற்பாடுகளும் தானாகவே ஆகிவிட்டன. அனைவருக்கும் வியப்பு ஏற்பட்டது.

* கடும் நோய்க்கு ஆளாகியிருந்த நேபாளி தம்பதிகளுக்காக, விசேஷமாக பிரார்த்தனை செய்து, ஸ்ரீராஜரின் மிருத்திகையைக் கொடுத்து அந்த நோயினை உடனடியாக குணப்படுத்தினார்.

* ஸ்ரீரமேஷ் ஹத்தார் அவர்கள் அவருடைய தொழிலில் ஏற்பட்ட நஷ்டத்தின் காரணமாக, மனம் பேதலித்துப் போனார். பின் ஸ்ரீகளவரிடம் சரணடைந்து, அவருடைய அருளால், ஹத்தார் அவருடைய மன நலம், தேக நலம் முன்னேறி, பின்னர் நல்ல நிலைமைக்கும் வந்தார். அவர் சதாசார சம்பன்னராகவும் ஆனார்.

* ஸ்ரீபி.பி.ராவ் அவர்களுடைய சிறு வயதிலிருந்து இருந்து வந்த நோயினை பரிகரித்து அவருக்கு அருளினார். பிறகும், அவருக்கு வந்துகொண்டிருந்த கெட்ட கனவுகளை பரிகரித்து, அவரை நல்ல நிலைக்கு கொண்டு வந்து, காயத்ரி மந்திர அனுஷ்டானத்தில் அவரை ஈடுபடுத்தினார்.

* டாக்டர். கே. நரஹரிதாஸ் அவர்களுக்கு கங்காவதரணத்தின் அனுபவத்தைக் கொடுத்து, சர்வமூல ஆத்யந்த ஸ்லோகங்களை அவருக்கு உபதேசம் செய்து, பாராயணம் செய்வதற்கு ஆணையிட்டார்.

* பூத-தயையைக் கொண்டிருந்த ஸ்ரீகளவர், பஞ்சிமாரின் மடத்தில் இருந்தபோது, நோய்வாய்ப்பட்டிருந்த ஒரு நாய்க்கு தக்க மருந்தினைக் கொடுத்தார். அதனை எடுத்துக்கொண்டு, அந்த நாய் விரைவில் குணமடைந்தது.

* பீஜாடி கிருஷ்ணமூர்த்தி அவர்கள், கோடி லிங்கேஷ்வர தரிசனத்திற்காக வந்திருந்து, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் இதய பாகத்தில் ஷ்வேதவர்ண ஹயக்ரீவ தேவரைக் கண்டார்.

* கிரிபாலெ அங்கிதம் உள்ள ஸ்ரீமதி சரஸ்வதி பாய் அவர்கள் கனவில், ஸோதே மடத்தின் முன்பாகத்தில், தவகோலத்தில் அமர்ந்திருந்த ஸ்ரீவிஷ்வோத்தமரைக் கண்டார்.

* தத்வ நீதிகளை சொல்லும் பல ஸ்லோகங்கள், தெய்வீகமாக, தற்செயலாக ஸ்ரீகளவரின் காதில் விழுந்தது. அவற்றில் சில ஸ்லோகங்கள் பதிப்பிக்கப்பட்டு உள்ளன.

* வித்வான். ஸ்ரீஆனந்ததீர்த்தாசார், ஆத்மகூர் அவர்களுக்கு கனவில் ஒரு குறிப்பு வந்தது. அதன்படி அவர் ஸ்ரீஸ்வப்னவ்ருந்தாவனாக்யாத்தில் இருக்கும் பற்பல ஸ்ருதி வாக்கியங்களுக்கு விவரணையுடன் கூடிய பாஷ்யத்தை எழுதினார்.

* கடிகாசலத்தில் ஸ்ரீபூதராஜர், அதிகாரியின் ரூபத்தில் வெளிப்பட்டு, அர்ச்சகரை ஆணையிட்டு, ஸ்ரீ நரசிம்ம தேவரின் தரிசனத்தை செய்வித்தார்.

* பாண்டவபுரத்தின் கௌட ஒருவருக்கு, ஸ்ரீராஜரின் ஸ்தோத்திரத்தை படிக்கச் செய்து, அதன் பலனாக, தெரியாமல் இருந்த ஒரு கண்ணை தெரியச்செய்து, பிரச்னை இருந்த இன்னொரு

கண்ணையும் குணப்படுத்தினார். அந்த மனிதர், பிராமணன் ஆவதற்கு விரும்பி பிரார்த்தனை செய்தபோது, அடுத்த பிறவியில் அது நிறைவேறும் என்று ஆசிர்வதித்தார்.

* ஆடிட்டர் ஸ்ரீ.எச்.வி. கௌதமரின் நோயின் காரணத்தை அறிந்து, அவருக்காக விசேஷமாக பிரார்த்தனை செய்து, மந்திராட்சதை அருளி, அவருடைய ஆபத்தினை பரிகாரம் செய்தார். இது நடந்தது 1994ம் ஆண்டில்.

* ஸ்ரீகே.எஸ். வாதிராஜ் அவர்கள் காசநோயால் வாடியபோது, அவருக்காக விசேஷமாக பிரார்த்தனை செய்து, மந்திராட்சதை அருளி மற்றும் ஆயுர்வேதத்தின் மருந்துகளை பரிந்துரைத்து அவரை குணமாக்கினார்.

* அரஸிகெரெயின் ஸ்ரீபுரந்தரதாஸ் என்பவருக்கு ஒரு விபத்தில் கால் முறிவு ஏற்பட்டிருந்தது. அவர் விரைவில் குணமாக வேண்டும் என்று ஸ்ரீகளவர் விசேஷமாக பிரார்த்தனை செய்து, மந்திராட்சதை அருளியதன் பலனாக, தாஸர் இன்றும் நலமாக நடமாடிக் கொண்டிருக்கிறார்.

* இன்னொரு முறை தாஸருக்கு வாயுத்தொல்லை ஏற்பட்டு, ரத்த வாந்தி எடுத்திருந்தார். ஸ்ரீகளவரிடம் பிரார்த்தனை செய்தபோது, ஸ்ரீராஜரின் மிருத்திகை கொடுத்து அருளி, 48 நாட்கள் அதனை எடுத்துக்கொள்ளுமாறு ஆணையிட்டார். இதனை செய்த தாஸர் முன்னர் இருந்ததைப் போலவே, உடல் நலம் பெற்றார்.

* ஸ்ரீ.பி.பி. நாகபூஷண் அவருக்கு நோய் தீவிரமாகி, டயாலிஸிஸ் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதற்கு ஸ்ரீகளவர் அவருக்கு அடுத்த ஆறு வாரங்கள் ஸ்ரீகிருஷ்ண பிரசாதத்தை ஏற்பாடு செய்து, அவருக்கு ஏற்பட்ட நோயினை குணப்படுத்தினார்.

* பாகில்கோட்டையின் மார்கோடு ஸ்ரீலட்சுமி நாராயணன் அவர்கள் கேன்சர் நோயினால் துன்பப்பட்டபோது, ஸ்ரீகளவர் அவருக்கு மந்திராட்சதை கொடுத்து அருளினார். பின்னர், அவர் அடுத்து 22 ஆண்டுகள் வரை உயிர் வாழ்ந்தார்.

* பெங்களூரு குமாரஸ்வாமி லே-அவுட்டில் ராஜரின் பக்தர் ஒருவரின் வீட்டில் அவருடைய குழந்தை நடமாட முடியாமல் நோய்வாய்ப்பட்டிருந்ததைப் பார்த்து, ஸ்ரீகளவர் மந்திராட்சதை கொடுத்து அருளினார். சிறிது நாட்களிலேயே அந்தக் குழந்தை அனைவரைப் போலவே நடமாடத் தொடங்கியது.

* கோடேஸ்வரத்தில் நோயினால் அவஸ்தைப்பட்டிருந்த ஒரு நாய்க்கு அபிமந்த்ரணம் செய்த ஜலத்தை ப்ரோக்ஷணம் செய்து, அந்த நோயினை குணப்படுத்தினார். இது ஸ்ரீகளவரின் கருணையைக் காட்டுகிறது.

* மீனவர்கள் தங்களின் வியாபரத்திற்காக பிரார்த்தனை செய்தபோது, அந்தந்த நொடி இறக்கப்போகும் மீன்கள் மட்டும் கிடைக்கட்டும் என்று விசேஷ அனுசந்தானத்துடன் மந்த்ராட்சதை கொடுத்து அருளினார்.

* ஹோத்ராளி கிராமத்தின் ஸ்ரீநாகேந்திர பட்டரின் பசு, பத்து ஆண்டுகளாக கன்று ஈனவில்லை. இதனை தாமாகவே அறிந்த ஸ்ரீகளவர், ஸ்வாமியிடம் பிரார்த்தனை செய்து, இரு வாழைப்பழங்களை தாமே அந்த பசுவுக்கு கொடுத்தார். பிறகு, அந்த பசு சீக்கிரத்தில் கன்று ஒன்றை ஈன்றது.

* மூடஹங்லூர் விஷ்வநாத ராயரின் தாய்மாமன் வீட்டை விட்டு 12 ஆண்டுகள் ஆகியிருந்தன. உறவினர் அனைவரும் குருகளின் பிரார்த்தனை செய்தனர். அந்த மனிதரின் கனவில், ஸ்ரீகளவரின் ரூபத்தில், ஸ்ரீராஜர் திரும்பத்திரும்ப குறிப்பால் உணர்த்தி, அவரை வீட்டிற்கு திரும்பி வருமாறு செய்தார். இவை அனைத்தும் பூஜ்யரின் பிரார்த்தனையின் பலன்.

* ஸ்ரீகளவரின் ஆணைப்படி மூடஹங்லூரில் ஸ்ரீகோபாலகிருஷ்ண தேவஸ்தானத்தை ஜீர்ணோத்தாரண செய்தபிறகே, ஸ்ரீவிஷ்வநாத ராயருக்கு பெங்களூரில் ஒரு சொந்த வீடு ஆயிற்று. சிதிலமடைந்த தேவஸ்தானத்தை ஸ்ரீகளவர் முன்னர் பார்த்திருக்கவில்லை. ஆனாலும், ஜீர்ணோத்தாரணம் ஆகவேண்டும் என்று அவரிடம் சொல்லி, செய்வித்தார்.

* வெள்ளியில் ஸ்ரீராஜரின் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது. அதனை ஸ்ரீகளவர் தூரத்திலிருந்தே பார்த்து, அதில் இருந்த தோஷங்களைக் கூறினார்.

* ஒரு நாள் இரவில் பயணம் செய்தபோது, ஹாவேரியைத் தாண்டி, சிர்ஸிக்கு வரும்போது, வண்டியை மறித்த கொள்ளைக்காரர்களிடம் 'வண்டியில் ஸ்ரீபூதராஜரின் பூஜைக்காக இளநீர் இருக்கிறது' என்று சொல்ல, அவர்களும் அதையே வண்டியில் பார்க்க; வேறெதும் தொந்தரவு செய்யாமல் வழி செய்து கொடுத்தனர்.

* மடத்தின் ஊழியர் ஒருவர் சிப்பகிரியிலிருந்து, குண்டகல்லுக்கு சென்று, அபிஷேகத்திற்கு பால் கொண்டு வரும்போது, ஓட்டுநர் மட்டுமே இருந்த பேருந்து அவருக்கு கிடைத்தது. இது ஸ்ரீபூதராஜரின் உதவி / ஏற்பாடு என்று ஸ்ரீகளவர் கூறினார்.

* தேவரபெட்டியுடன் பூஜைக்காக, கடூரில் ஒரு சிஷ்யரின் வீட்டிற்குள் ஸ்ரீகளவர் பிரவேசம் செய்தபோது, அந்த வீட்டின் பின்கதவை ஸ்வாமிகளே திறந்தார். அப்படியே அங்கு நிழலுக்காக போடப்பட்டிருந்த கூரை பிய்த்துக்கொண்டு பறந்து போனது. அப்போது ஸ்ரீகளவர் எஜமானனுக்கு இவ்வாறு கூறினார். 'இனி எந்த துஷ்ட சக்தியின் தொல்லையும் உனக்கு இருக்காது. இதுவே குறிப்பு. ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீபூதராஜர் உன்னை காப்பாற்றுவார்கள்'. ஸ்ரீகளவர் கூறியபடியே, அவருடைய கஷ்ட துக்கங்கள் தீர்ந்தன.

* ஒரு முறை பத்ராவதியிலிருந்து பிரயாணம் செய்யும்போது, ஆயுதங்களுடன் வந்த திருடர்கள் ஸ்ரீகளவரின் வண்டியை சூழ்ந்தனர். வாகனம் நின்றது. வண்டியின் கதவைத் திறந்து ஸ்ரீகளவரைப் பார்த்த அக்குழுவில் ஒருவன், உடனடியாக அனைவரையும் விலகுமாறு சொல்லி, வண்டிக்கு வழி விட்டான்.

* ஒரு முறை கும்பாஸியில் மில் ஓனர் ஒருவரது வீட்டில் பூஜை. பிக்ஷை நடந்தது. இரவு பூஜை முடிந்தபின், ஸ்ரீகளவர் மடத்திற்கு திரும்பினார். இரவில் அந்த வீட்டில் படுத்திருந்த ஐந்து வயது சிறுமியை திருடர்கள் கடத்திக்கொண்டு போகையில், அவளது எடை திடீரென்று கூடிக்கொண்டே போனது. வழியில் வந்த ஒரு முதியவரிடம் அந்த சிறுமியை ஒப்படைத்துவிட்டு அவர்கள் ஓடிப்போயினர். அந்த முதியவர் அவளை அவள் வீட்டின் அருகில் வந்து விட்டுச் சென்றார். இந்த சம்பவத்தை அடுத்த நாள், ஸ்ரீகளவரிடம் சொல்ல, அவரோ 'அந்த முதியவர் ஸ்ரீபூதராஜரே' என்றார்.

* ஒரு முறை ஸோதெயில் ஏழு ஆட்களாலும் தூக்க முடியாத ஒரு மார்பிள் கல்லினை, ஸ்ரீகளவரின் பிரார்த்தனையின்படி, வெறும் மூவரால் மட்டுமே தூக்கப்பட்டு, ஸ்ரீபூதராஜரின் கர்ப்பகிருஹத்தில் வைக்கப்பட்டது. பிறகு, அதன் மேல் ஸ்ரீபூதராஜரின் பிரதிமையை வைத்தார்.

* ஒரு முறை அரசாங்கம், காளி நதியில் அணை கட்ட முற்பட்டது. அப்படி கட்டினால், ஸ்வர்ணத்தில் இருக்கும் மடம் மற்றும் ஸோதே ஸ்ரீராஜரின் பிருந்தாவன சன்னிதி ஆகியவை தண்ணீரில் மூழ்கும் அபாயம் இருந்தது. அப்போது ஸ்ரீகளவர் இவ்வாறு கூறினார். '400 ஆண்டுகளுக்கு முன், முக்காலமும் உணர்ந்த ராஜர், தாமாகவே இந்த இடத்தை தேர்ந்தெடுத்து, வ்ருந்தாவனத்தில் பிரவேசம் செய்திருக்கிறார். ஆகவே இந்த இடம் மூழ்காது. அப்படி ஆகாமல் இருப்பது, ஸ்ரீராஜருடைய சங்கல்பமே ஆகும். ஆகையால், நாம் இதற்காக போராடத் தேவையில்லை. அனைத்தையும் ஸ்ரீராஜரே பார்த்துக் கொள்வார்' என்றார். பிறகு அரசாங்கம் அந்த திட்டத்தையே கைவிட்டது.

* ஸ்ரீராயஸம் திருமலராயருக்கு புத்திர வாரிசு இல்லாதபோது, ஸ்ரீகளவரிடம் பிரார்த்தனை செய்தார். 'ஸ்ரீகுருராஜரின் சேவை செய்யுங்கள்' என்றார். அதைப் போலவே சேவை செய்து, சத்புத்திரனை அவர் பெற்றார். அவரே ராயஸம் ஸ்ரீதர் அவர்கள். நிரந்தர பாட பிரவசனங்களை அவர் செய்து வருகிறார். பின் தன் மகனது வேலைக்காக, ஸ்ரீகளவரிடம் பிரார்த்தனை செய்தபோது, ஸ்ரீகளவரின் ஆசியினால் அவருக்கு ஒரு நல்ல வேலையும் கிடைத்தது.

* ஹைதராபாத் ஸ்ரீ.ஹெச். ஹனுமந்தராவ் அவர்கள், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரிடமிருந்து அருளாசியும், மந்திராட்சதையும் பெற்று, ஸ்ரீபுரந்தர ஆசிரமத்தின் வளர்ச்சியைக் கண்டார்.

* சாதுர்மாஸ்யாதி பர்வ காலங்களில் ஸ்ரீகளவர் காலையில் 4.30கே ஸ்னானம் முடித்து, விசேஷ ஜபங்களை செய்து வந்தார். எவ்வளவோ மந்திரங்களை லட்சம் முறை ஜெபித்து, மந்திர பிரதிபாத்ய ஸ்ரீஹரி குரு தேவதைகளின் அருளைப் பெற்று ஸித்தியை சம்பாதித்தார்.

## ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் பர்யாய வைபவம்

### முதல் பர்யாய (1948-49)

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஆசிரமம் பெற்றபிறகு, 1948-49ம் ஆண்டில் ஸோதெ மடத்தின் பர்யாய காலம் வந்தது. ஸ்ரீகளவருக்கு 14 வயது. சர்வக்ஞ பீடத்தில் ஏறி, ஸ்ரீகிருஷ்ண பூஜையை செய்யும் சௌபாக்கியம். இரு ஆண்டுகள் குருகளில் உபய-மத்வரின் ஸன்னிதானம் – ஆசார்ய மத்வரின் மற்றும் பா[4]வி-மத்வ-ஸ்ரீவாதிராஜரின். முதலாம் பர்யாயத்தின் அங்கமாக 1948 ஜனவரி புரபிரவேசம் செய்தார். பிறகு, உடுப்பியிலேயே இருந்து, அக்கம்பக்கம் இருந்த கிராமத்து மக்கள் சமர்ப்பித்த காணிக்கைகளை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு அருளினார். 18ம் தேதியன்று, காலையில் 4 மணிக்கு, ஜோடு கட்டெயிலிருந்து வைபவத்தின் ஊர்வலத்தில் ஆராத்ய தெய்வத்துடன் மற்ற மடாதிபதிகளுடன் வந்து, ரதவீதியில் நடந்து, கனகன கிண்டி வழியாக ஸ்ரீகிருஷ்ண தரிசனம் செய்தார். பிறகு, ஸ்ரீசந்திரமௌலீஷ்வர, அனந்தேஷ்வரின் தரிசனம் செய்து வணங்கினார்.

ஸ்ரீகிருஷ்ண மடத்தின் பிரவேச த்வாரத்தில், பர்யாயத்தை முடித்த ஷிரூரு ஸ்ரீகளவரால் வரவேற்கப்பட்டார். பிரதட்சிணமாக வந்து, நவக்ரக கிண்டியினால் ஸ்ரீகிருஷ்ண தரிசனம் செய்தார். பிறகு, ஸ்ரீமுக்யபிராண மற்றும் ஸ்ரீகருட தேவரின் தரிசனம் பெற்று, கர்ப்பகிரகத்தில் நுழைந்தார். அங்கு ஆசார்ய மத்வரின் தரிசனம் செய்து வணங்கினார். அங்கேயே பூஜை அதிகாரத்தின் குறிப்பாக, அக்ஷயபாத்திர மற்றும் சட்டுக (கரண்டி) ஆகியவற்றை ஏற்றுக்கொண்டார். பின், ஷிரூரு ஸ்ரீகளவருடன் சர்வக்ஞபீட (மத்வபீட) சன்னிதிக்கு வந்து, சுமுஹூர்த்தத்தில் பீடாரோஹண செய்தார். பிறகு, இருவரும் சேர்ந்து படகு-மாளிகைக்கு வந்தனர். அங்கு பீடாதிபதிகளின் சன்னிதானத்தில், கந்தாதி உபசாரங்கள் நடந்தன. பர்யாய தர்பாரில் நிர்வாக அறிவிப்பு நடந்தது. அங்கு வீற்றிருந்த ஸ்ரீகளவர், அருளுரை செய்த பிறகு, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பர்யாய செய்தியினை வழங்கினார். 'ஸ்ரீகிருஷ்ண சன்னிதி மிகவும் உயர்ந்தது. ஸ்ரீகிருஷ்ண பூஜா பாக்கியம் அனேக ஜென்மங்களில் செய்த புண்ணியத்தின் பலன் ஆகும். ஸ்ரீமத்வ – வாதிராஜ குருகளே அனைவரையும் அருளி, பர்யாயத்தை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். அனைத்து ஸ்ரீகளவரின் தக்க உதவிகள் இருக்கட்டும். ஸ்ரீகிருஷ்ண முக்யபிராணர்கள் அனைவருக்கும் சன்மங்களத்தை கொடுக்கட்டும்' என்றார். பிறகு, மதிய மகாபூஜை, விசேஷ சந்தர்ப்பணை மற்றும் மாலையின் உற்சவாதிகள் சிறப்புடன் நடந்தன.

இரண்டாண்டு காலம், ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஸ்ரீகிருஷ்ண மடத்தில் தக்க காலத்தில் நடக்கும் பண்டிகை, விரத, ஹரிதினங்கள், உற்சவங்கள் என அனைத்தையும் வெகு சிறப்புடன் ஸ்ரீகிருஷ்ண பூஜாத்மகமாக நடத்தி, சமர்ப்பணம் செய்து தன்யர் ஆனார். நிரந்தர வேத பாராயணம், பிரவசனாதிகள் ஸ்ரீஹரி குருப்ரீதிகரமாக நடந்தன. ஸோதெ மடத்தின் பர்யாய ஆனதால், ஸ்ரீவாகீஷ தீர்த்தரின் ஆராதனை, ஸ்ரீவாதிராஜரின் ஜயந்தி, ஸ்ரீவாதிராஜரின் ஆராதனை, ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜை மற்றும் ஸ்ரீவிருந்தாவனாசார்யரின் ஆராதனாதிகள்

மிகச்சிறப்புடன் கொண்டாடப்பட்டன. ஸ்ரீகளவர் தமது முதலாம் பர்யாயத்தில், வயதில் சிறியவராக இருந்தாலும், பர்யாய ஸத்ர (யக்ஞ) ரூப ஸத்கர்மத்தை அற்புதமாக நடத்தி, ஸ்ரீமத்வ வாதிராஜவரத ஸ்ரீகிருஷ்ணதேவனுக்கு சமர்ப்பித்து அவர்களின் அருளைப் பெற்றார்.

## இரண்டாம் பர்யாய (1964-65)

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் இரண்டாம் ஸ்ரீகிருஷ்ண பூஜா பர்யாய நடந்தது 1964-65ம் ஆண்டில். ஸ்ரீகளவர் பவித்ர நத – நதி – தீர்த்த – க்ஷேத்திரங்களை சஞ்சரித்து, 1964 ஜனவரி துவக்கத்தில் புரபிரவேசம் செய்தார். 18 ஜனவரி 1964 அன்று, ஊர்வலம், அதிகார மாற்றம், சர்வக்ஞ பீடாவரோஹண, தர்பார், மகாபூஜை, சந்தர்ப்பணை மற்றும் இரவு உற்சவாதிகள் ஆகியவை மிகச் சிறப்பாக நடைபெற்றன. நிரந்தர ஞானகார்ய, அன்னதான, உற்சவாதிகள் அனைத்தும் அற்புதமாக இருந்தன. 1954-55ம் ஆண்டுகளில் ஸ்ரீவாதிராஜ கிரந்த பிரகாஷன சமிதியிடமிருந்து துவக்கப்பட்ட கிரந்த சேகரித்தல் மற்றும் அச்சிடும் செயல்கள் தொடர்ந்து நடந்தன. 1965ம் ஆண்டின் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் (ஸ்ரீவிஷ்வப்ரிய தீர்த்தர்) நூற்றாண்டு ஆராதனை உற்சவத்தை, பூஜ்ய ஸ்ரீகளவர் சிறப்பாக நிறைவேற்றினார். மூல வ்ருந்தாவன சன்னிதியில் விசேஷ அலங்காரம், பாராயணாதிகள் நடந்தன. ஸ்ரீகிருஷ்ண சன்னிதியில் விசேஷ அலங்கார சந்தர்ப்பணை நடந்தது. அன்று அஷ்ட மடத்தின் அனேக யதிகள் மதியம் பிரசாதத்திற்கு அழைக்கப்பட்டிருந்தது சிறப்பான விஷயம் ஆகும்.

உத்யாவரத்தின் ஸ்ரீமுக்யபிராணாசார்ய குடும்பத்தினர் விசேஷ சேவையை செய்தனர். சாதுர்மாதம் ஆனதால், புற உற்சவங்கள் இருந்திருக்கவில்லை. மாலையில் குரு ஸ்ரீ வ்ருந்தாவனாசார்யரின் மகிமா ஸ்மரணையை செய்தனர். மாலையில் சந்திரஷாலையில் புராணத்திற்குப் பிறகு, ஸ்ரீகளவர், ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் மகிமைகளை கொண்டாடினார். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் மூல வ்ருந்தாவனத்தின் சன்னிதியின் பிரகாரத்தை மற்றும் அதன் அனைத்து ரகசியங்களையும் அனைவருக்கும் தெரிவித்தார். பரம்பரையின் மகிமைகளை அட்டே ஸ்ரீவேதவியாஸாசார்யர் விளக்கினார். ஆராதனை நிமித்தமாக, ஸ்ரீகளவர், வித்வத் ஸம்பாவனை மற்றும் தக்ஷிணைகளை வழங்கினார். அன்று பா.வெ. ஆசார்யர் அன்று உபஸ்திதராக இருந்தார்.

இந்த இரு ஆண்டு காலத்தில் நடந்த உற்சவாதிகள் மற்றும் ஸ்ரீவாதிராஜ ஜயந்தி, ஆராதனாதி கார்யகிரமங்களும் மிகவும் வைபவத்துடன், சிறப்பாக கொண்டாடப்பட்டன.

## மூன்றாம் பர்யாய (1980-81)

பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் மூன்றாம் பர்யாய மிகச் சிறப்பு வாய்ந்தது. ஏனெனில், பா[4]வி–ஸமீர ஸ்ரீவாதிராஜ குருஸார்வபௌமரின் அவதாரத்தின் 500ம் ஆண்டு விழாவும் அப்போதே வந்தது. பர்யாய பீடம் ஏறும் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர், ஜனவரி 1980ம் ஆண்டு, முதல் வாரத்தில் புரபிரவேசம் செய்தார். ஜோடுகட்டெயிலிருந்து சிறப்பான ஊர்வலம். ரதவீதிக்கு வந்து, ஸ்ரீகிருஷ்ணதேவரின் தரிசனத்தை செய்து, ஆராத்ய தெய்வத்துடன் தம் மடத்தில் நுழைந்தார்.

அன்றிலிருந்து உடுப்பியின் அருகில் மட்டுமே சஞ்சாரம். ஜனவரி 8 1980யிலிருந்து, ஷிரூரு மடத்தின் ஸப்போத்ஸவ துவக்கம். பர்யாயத்தின் பூஜையின் தயார் நிலை. முழு உடுப்பியுமே அலங்காரம் செய்யப்பட்டது. மகர சங்கராந்தியின் உற்சவாதிகள் சிறப்புடன் நடந்தேறின. 17 ஜனவரி 1980 அன்று, பர்யாய விட்டுக் கொடுக்கும் ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவருக்கு நன்றி மற்றும் பர்யாய பீடாரோஹண செய்யவிருக்கும் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவருக்கு வரவேற்பு நிகழ்ச்சிகள், ரதவீதியின் மண்டபத்தில் நடந்தன.

இரவு நேரங்களிலும் பகலைப் போல மக்கள் நடமாட்டம் இருந்தது. அன்று இரவு, 3 மணிக்கு ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் பர்யாய பீடாரோஹண நிமித்த தண்ட தீர்த்தத்திற்கு சென்று, தீர்த்தஸ்னானம் செய்தார். பிறகு, ஜோடுகட்டெக்கு வந்தார். சரியாக 4 மணிக்கு பர்யாய ஊர்வலம் துவங்கியது. ஆராத்ய தெய்வத்தின் பல்லக்கு, அதன் பின்னால் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர். அவருக்குப் பின்னால் மற்ற அனைத்து ஸ்ரீகளவர்கள். அதற்கும் முன்னால், ஊர்வலத்தில் நடன, நாட்டிய,

கலைஞர்கள் மற்றும் அவரது கலைவண்ணங்கள் நிறைந்த வண்டிகள். உடுப்பியின் பண்பாடு, ஸ்ரீமத்வாசார்யரின் மற்றும் ஸ்ரீவாதிராஜரின் மகிமைகளை வெளிப்படுத்துவதான மற்றும் புராணிக செய்திகளை விளக்கும் பதாகைகள் அந்த ஊர்வலத்தில் வந்தன.
இந்த ஊர்வலம், கடைசியில் ரதவீதிக்கு வந்தது. ஸ்ரீகளவர் பல்லக்கிலிருந்து இறங்கி, கனகன கிண்டி மூலமாக ஸ்ரீகிருஷ்ண தரிசனம் செய்தார். பிறகு, ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் சந்திரமௌலீஷ்வர மற்றும் அனந்தேஷ்வரனின் தரிசனம் செய்து, ஸ்ரீகிருஷ்ண மடத்தின் த்வாரத்திற்கு வர, ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவர் அவரை வரவேற்றார். மத்வ தீர்த்தத்திற்குச் சென்று, பாத பிரட்சாளனம் செய்து, பின், ஸ்ரீகிருஷ்ண மடத்தில் நுழைந்து, நவகிரக கிண்டியினால் ஸ்ரீகிருஷ்ண தரிசனம் செய்தார். ஸ்ரீமுக்யபிராண, கருட தேவரின் தரிசனம் செய்து, ஸ்ரீமத்வாசார்யரின் சன்னிதிக்கு வந்தார்.

அங்கேயே ஷிரூரு ஸ்ரீகளவர், பர்யாய குறியீடாக அக்ஷயபாத்ரெ மற்றும் ஸட்டுக (கரண்டி)யினை ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவருக்குக் கொடுத்தார். பிறகு, மத்வபீடத்திற்கு வந்து, ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவர் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரை கரம் கொடுத்து, சர்வக்ஞ பீடத்தில் அமர்த்தினார். பிறகு, இரு ஸ்வாமிகளும், படகு-மாளிகைக்கு வந்து அங்கு வீற்றிருந்த அனைத்து ஸ்ரீகளவருக்கும் கந்தாதி உபசாரங்களை சமர்ப்பித்தனர். இரு மடங்களிலிருந்து வஸ்திர- பழ காணிக்கை சமர்ப்பிக்கப்பட்டன.

ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரை முன்னிறுத்தி, அனைவரும் ராஜாங்கண தர்பார் சபைக்கு வந்து அமர்ந்தனர். வரவேற்புகள் நடந்தன. பர்யாய முடித்த ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவர், அனைவரும் வழங்கிய உதவிகளை நினைத்து, குருகளான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் பர்யாய ஸத்வைபவம், நன்றாக நிறைவேறட்டும் என்று ஆசிர்வதித்தார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் வித்வாம்ஸர்களுக்கு மற்றும் இடத்தின் முக்கியஸ்தர்களுக்கு பரிசுகளை வழங்கி கௌரவித்தார்.

மந்திராலயத்தின் ஸ்ரீராஜா எஸ். கிரியாச்சார் அவர்களுக்கு 'பண்டித கேஸரி', அக்னிஹோத்ரி ஸீதாராமாசார்யருக்கு 'பண்டித ரத்ன', மற்றும் மைஸூரின் ஸ்ரீ எச். சுப்பராயருக்கு, 'வாதிராஜ சேவா துரந்தர' என்று விருதுகளை வழங்கினார். பிறகு, சமூகத்தின் பற்பல துறைகளில் சேவை செய்த அனேக மஹனீயர்களை பர்யாய ஸ்ரீகளவர் கௌரவித்தார். பிறகு, அரசு நிர்வாக அதிகாரிகளுக்கு கௌரவம் வழங்கப்பட்டது. பிறகு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதங்களவர், பர்யாய செய்தியினை வழங்கினார்.

அதன் சுருக்கம்: ஸ்ரீமத்வ மற்றும் பா⁴வி-மத்வ ஸ்ரீவாதிராஜ குருவரேண்யரால் நடத்தப்பட்ட இந்த பர்யாய மகோத்ஸவத்தில் தாங்கள் அனைவரும் சிரத்தா, பக்திகளுடன் பங்கு கொண்டிருக்கிறீர்கள். இந்த விழாவின் வெற்றிக்கு காரணரான உங்கள் அனைவருக்கும் பகவத் பிரஸாத ரூபமான பரம ஸ்ரேயஸ் உண்டாகுமாறு நாம் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மனிடம் இதய பூர்வகமாக வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீராஜர் இங்கு அத்ருஷ்யமாக நான்கு - மற்றும், ஸ்ரீவேதவியாஸரில் அத்ருஷ்யராக ஒன்று - என மொத்தம் ஐந்து பர்யாயம் செய்தது வரலாறு. அவர் ஏற்படுத்திக் கொடுத்த சம்பிரதாயம், இன்றைக்கும் எவ்வித மாற்றங்களும் இன்றி நடந்து வருகிறது. இந்த கிருஷ்ணன், அன்னபிரம்மன். இங்கு நடப்பதைப் போல அன்னதானம் வேறு எங்கும் இல்லை. மடங்களின் சொத்துக்கள், அரசாங்கத்தின் விதிகளால் கைவிட்டுப் போனாலும், சிஷ்ய / பக்தர்களே இன்று மட / மந்திரங்களுக்கு சரியான சொத்தாகும். நம் பர்யாய பூர்வ சஞ்சாரத்தில் உதவிகள் ஏராளமாக கிடைத்தன. இவை அனைத்தும் ஸ்ரீகுருராஜரின் பீடத்தில் நாம் இருக்கிறோம் என்னும் ஒரே காரணத்தினால் வந்தவை. இதற்கெல்லாம் ஸ்ரீராஜரே முக்கிய பாத்திரர் ஆவார். நம் பர்யாயத்தில் யாதவ கிருஷ்ணனுடன் வாசிஷ்ட கிருஷ்ணனின் (வியாஸமுஷ்டி) பூஜை, ஆசார்ய மத்வரின் ஸன்னிதானத்துடன் ஸ்ரீகுருராஜரின் சன்னிதானம், எப்போதும் நம் அனைவரின் ரக்ஷகராக இருக்கும் ஸ்ரீபூதராஜரின் பூஜாதிகள் விசேஷம் எனப்படுகின்றன. உடுப்பியின் கிருஷ்ணன் - பாலகிருஷ்ணன். இங்கு பகவந்தனை மகிழ்விப்பது மிகவும் சுலபம். ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளின் மற்றும் இங்கு வீற்றிருக்கும் இதர மடாதிபதிகளின் உதவிகளையும் நான் விரும்புகிறோம்.

கடைசியாக, விசேஷ அபிமானம் கொண்ட சிஷ்யர்களுக்கும், அனைத்து பக்தர்களுக்கும், ஸ்ரீகிருஷ்ண, பூவராக, ஹயக்ரீவ, வேதவியாஸ தேவர் மற்றும் குருஸார்வபௌமர் ஆகியோர் அனைத்து மங்களங்களையும் கொடுக்கட்டும் என்று ஸ்ரீஹரி குருகளில் நாம் மனப்பூர்வகமாக வேண்டிக் கொள்கிறோம்'.

வந்தனார்ப்பணையுடன் தர்பார் நிகழ்ச்சி முடிவடைந்தது. பர்யாய காலத்தில், ஞானயக்ஞ, சிறப்பான பூஜை, ஆண்டின் பண்டிகைகள், விசேஷமாக ஸ்ரீமத்வஜயந்தி, மத்வ நவமி, ஸ்ரீராஜரின் ஜயந்தி, ஸ்ரீராஜரின் ஆராதனை, அனைத்து உற்சவங்கள், சிறப்பாக நடந்தேறின. இந்த பர்யாய காலத்தில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்த ஸ்ரீகளவருக்கு மற்றும் மற்றவர்களுக்கு (ஸ்ரீகுருராஜ புராணிக ஆகியோருக்கு) குர்வர்த்த தீபிகா மற்றும் நியாயஸுதா, தத்வபிரகாஷிகா, தாத்பர்ய சந்திரிகா ஆகிய கிரந்தங்களின் பாடம் சொல்லி, மங்கலோத்ஸவத்தை செய்தார்.

## நான்காம் பர்யாய (1996-97)

உடுப்பி அஷ்ட மடங்களின் பரம்பரையில் நான்கு இரு-ஆண்டு பர்யாயங்களை செய்தவர்கள் மிகக்குறைவு. இன்னும் ஸோதெ மடத்து பரம்பரையில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மூன்றாமவர். (ஸ்ரீவாதிராஜர் - ஐந்து பர்யாய. ஸ்ரீவிருந்தாவனாசார்யர் மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் - நான்கு பர்யாய). நான்காம் பர்யாயத்தின் தொடக்கத்தில், புரபிரவேசம், வரவேற்பு, ஸ்வ-மட பிரவேசம் அனைத்தும் சிறப்பாக நடந்தன. ஜனவரி 17, 1996 இரவில் சபை, அபினந்தன, அபிவந்தன செயல்கள் சிறப்பாக நடந்தன. இரவில் தண்ட தீர்த்த ஸ்னான, ஜோட்கட்டெக்கு வருதல், பிறகு, கலைஞர்களின் ஊர்வலம். பர்யாய ஊர்வலம் முன்னர் நடந்தவற்றைவிட அதிக சிறப்பாக இருந்தது. தங்கமயமான பல்லக்கில் ஆராத்யதேவர், பின்னால் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர், பிறகு மற்ற அஷ்ட மடாதிபதிகள், அந்த ஊர்வலத்தில் வந்தனர். ரதவீதியில் பாதசாரிகளாக வந்து, தேவதரிசனம் செய்தனர். ஸ்ரீகிருஷ்ண மடத்தில் நுழைந்து, ஸ்ரீகிருஷ்ண, முக்யபிராண சன்னிதிகளுக்கு வந்து தரிசனம் செய்தனர்.

ஸ்ரீமத்வரின் முன்னர் நின்று, ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவரிடமிருந்து பர்யாய அதிகாரத்தை ஏற்றுக் கொண்டார். நல்ல முகூர்த்தத்தில் மத்வபீடத்தில் அமர்ந்தார். படகு-மாளிகையில் யதிகளுக்கு கௌரவங்கள் பரிமாறப்பட்டன. பிறகு, ராஜாங்கணத்தில் தர்பார் நிகழ்ச்சி பக்திபூர்வகமாக துவங்கியது. வரவேற்பு கமிட்டியின் தலைவர் கே.கே.பய் அனைவரையும் வரவேற்றார். தர்பார் மேடையில் வீற்றிருந்த ஸ்ரீபேஜாவர மடத்தின் ஸ்ரீவிஷ்வேஷ தீர்த்தர், காணியூரு மடத்தின் ஸ்ரீவித்யாவாரிதி தீர்த்தர், கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்தர், அதமாரு மடத்தின் ஸ்ரீவிஷ்வப்ரிய தீர்த்தர், ஷிரூரு மடாதீஷரான ஸ்ரீலட்சுமிவர தீர்த்தர், புத்திகெ மடத்தின் ஸ்ரீஸுகுணேந்திர தீர்த்தர், பலிமாரு மடத்தின் ஸ்ரீவித்யாதீஷ தீர்த்தர், பேஜாவர மடத்தின் ஸ்ரீவிஷ்வ பிரஸன்ன தீர்த்தர் ஆகியோருக்கு பர்யாய பீடத்தில் ஏறிய ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர், சபா மரியாதை செலுத்தி கௌரவித்தார்.

அதே சமயத்தில் நாட்டின் மரியாதைக்குரிய டாக்டர். வி.எஸ். ஆசார்ய மற்றும் மற்றவர்கள் பூஜ்ய ஸ்ரீபாதங்களவருக்கு மாலைகளை சமர்ப்பித்து வணங்கினர். பற்பல க்ஷேத்திரங்களில் சிறப்பான சாதனைகளை செய்த ஏழு அறிஞர்களுக்கு, பர்யாய ஸ்ரீபாதர், பின்வரும் விருதுகளை வழங்கி கௌரவம் செலுத்தினார்.

1. ஸ்ரீஆத்மகூரு ஆனந்ததீர்த்தாச்சார் - ஷப்தசாஸ்திரவிசக்ஷண
2. டாக்டர். ராஜாராமண்ண - விக்ஞானபானு
3. ஸ்ரீவ்யாஸராய பல்லாள - கத்யபாஸ்கர
4. டாக்டர். ராமதாஸ் எம். பய் - ஸேவாதுரீண
5. ஸ்ரீ பாவகத்து ரகுராம ஷெட்டி - ஸேவாதுரீண
6. ஸ்ரீவிஷ்ணுவர்த்தன் - நடமார்த்தண்ட
7. ஸ்ரீரேமண்ட் டிஸோஸா - வ்யயாம ப்ரவீண

இவர்களைத் தவிர, 18 வித்வாம்ஸர்களை கௌரவித்து, ஆஸ்தான வித்வாம்ஸர்கள் என்று அறிவித்தார். மேலும், அனேக அறிஞர்களுக்கு மரியாதை செலுத்தப்பட்டது. பிறகு, டாக்டர் வீரேந்திர ஹெக்கடே பேசும்போது – ஸோதெ மடம் மற்றும் தர்மஸ்தளத்திற்கு விசேஷ சம்பந்தம் உள்ளது. ஸ்ரீவாதிராஜ குருகளால் நிர்மாணமான சிஷ்ய பரம்பரையினரே தர்மஸ்தளத்தில் பூஜா கைங்கர்யங்களை செய்து வருகின்றனர் – என்று கூறினார். ஸ்ரீ. பி.எஸ். எடியூரப்பா அவர்கள், நான்காம் பர்யாயத்தை துவக்கிய ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர், ஐந்தாம் பர்யாயத்தையும் செய்வதாக ஆகட்டும் என்று தன் விருப்பத்தைக் கூறினார்.

பிறகு, அங்கு வீற்றிருந்த அனைத்து ஸ்ரீபாதங்களவரும் தம் அருளுரையில் பர்யாய காலத்தில், ஸ்ரீவாதிராஜரின் அத்யந்த அருளையும், ஸ்ரீஸோதெ மடத்தின் பர்யாய சிறப்பினையும் நினைவு கூர்ந்தனர். பீடாரோஹணம் செய்த ஸ்ரீவிஷ்வோத்தமர், பர்யாய செய்தியை வழங்கியவாறு 'ஸ்ரீகிருஷ்ணதேவரின் பூஜை, லோக கல்யாணத்திற்காக. இது வெற்றி அடைவதற்கு அனைத்து பீடாதிபதிகளின் மற்றும் அபிமானிகளின் உதவி தேவை. நமக்கு துளஸி வனம் நிர்மாணிக்கும் விருப்பம் இருக்கிறது. ஸ்ரீமடத்தின் வளர்ச்சியும் நம் நோக்கமாக உள்ளது. ஸ்ரீகிருஷ்ண முக்யபிராண ராஜர் பூதராஜர், நம் அனைவருக்கும் சன்மங்களத்தை அருளட்டும்' என்று கூறினார்.

நான்காம் பர்யாயத்தின் காலத்தில் நடந்த வளர்ச்சிப் பணிகள்:
1. பளகு மாளிகையின் இரு பக்கங்களிலும், தினப்படி பதார்த்தங்களை சேகரிப்பதற்கு ஒரு பெரிய கொட்டகை.
2 வஸந்த மகாலின் பின்புறத்தில் 'வாதிராஜ மந்திர'த்தினை கட்டுவது

இவை தவிர,
* நித்ய நைமித்திக தார்மிக உற்சவங்கள், ஞான கார்ய மற்றும் ஆண்டில் நடைபெறும் அனைத்து விழாக்கள் / ஹரிதினங்கள் / பண்டிகைகள் சிறப்பாக நடைபெறுவது.
* ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி, லட்ச தீபோத்ஸவ, ஸ்ரீமத்வ நவமி, வாதிராஜ ஆராதனாதிகள், மிகச்சிறப்புடன் செய்வது.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தம் நான்காம் பர்யாய காலத்தில் கிருஷ்ணாபுர மடாதீஷரான ஸ்ரீவித்யாஸாகர தீர்த்த ஸ்ரீபாதருக்கு மற்றும் மற்றவர்களுக்கு ஸ்ரீஸுரோத்தம தீர்த்த வியாக்யான சஹிதமான ஸ்ரீவாதிராஜரின் 'யுக்திமல்லிகா' கிருதியை பாடம் சொல்லி, மங்களம் செய்தார்.

## VI. மருத்துவத் துறையில் ஆளுமை

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் வெறும் சம்ஸ்க்ருத, கன்னட சாகித்ய மற்றும் வேதாந்தாதி சாஸ்திரங்களில் அறிஞராக இருந்தவர் அல்ல. அவருடைய ஆளுமை, மருத்துவத் துறை, சங்கீத சாஸ்திரம் ஆகியவற்றிலும் இருந்தது. நவீன மருத்துவம் (Science of Medicine), ஆயுர்வேத, ஹோமியோபதி ஆகியவற்றிலும் அவருக்கு நல்ல ஞானம் இருந்தது. ஆங்கில மருத்துவத்தின் சம்பந்தப்பட்ட சொற்கள் அனைத்தையும் ஸ்ரீகளவர் அறிந்திருந்தார். பல மருத்துவர்கள் மேற்படி விஷயத்தில் ஸ்ரீகளவரின் ஞானத்தை அறிந்து வியந்திருக்கின்றனர். ஹோமியோபதி மருத்துவத்தையும் நன்றாக அறிந்திருந்தார். மடத்து சிஷ்யர்களுக்கு உடல் நலம் குறைபாடு இருந்தால், முதலுதவி சிகிச்சை ஸ்ரீகளவருடையதே. அவரே எந்த மருந்து எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நிச்சயித்து, அதனை வரவழைத்து கொடுத்திருந்தார். பல பழங்கால ஆயுர்வேத கிரந்தங்களை ஸ்ரீகளவர் ஆழமாகப் படித்திருந்தார். அனேக பக்தர்களின் பற்பல வித நோய்களுக்கு சரியான மருந்துகளை பரிந்துரைத்த ஆளுமை ஸ்ரீகளவருடையது. குருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரிடமிருந்து தயாரான 'ஹயக்ரீவ தைல'த்தை தயார் செய்ய முன்னெடுத்தார். இன்றைக்கும் அந்த தைலம் பிரசித்தி பெற்று, உடுப்பியின் ஸ்ரீஸோதெ மடத்தில் மற்றும் ஸோதெயில் கிடைக்கிறது.

அதைப் போல, ஸ்ரீகளவருக்கு சங்கீத சாஸ்திர ஞானமும் அபாரமாக இருந்தது. ராகங்களின் குறிப்புகளை மிக கவனத்துடன் கண்டுபிடித்து சொல்பவராக இருந்தார்.

### A. மருத்துவத்துறை:

### 1. டாக்டர். விஜயீந்திர மூர்த்திகள் பாராட்டினார்:

மைசூரின் டாக்டர் விஜயீந்திரமூர்த்தி அவர்கள் ஆயுர்வேதத்தில் பிரபல மருத்துவராக இருந்தார். மைசூரு, உடுப்பி ஆகிய இடங்களில், ஆயுர்வேத மஹாவித்யாலயங்களில் தலைமை ஆசிரியராக பணிபுரிந்தவர் இவர். திரவியங்களில் இருக்கும் விஷ அம்சங்களைப் பற்றிய சிறப்பு ஆராய்ச்சி செய்தவர் இவர். அதுமட்டுமல்லாமல், மருந்துகளுக்காக, பதார்த்தங்களை எப்படி சரியான விகிதத்தில் சேர்க்க வேண்டும், அவற்றின் குணங்கள் என்ன என்பதை ஆராய்ந்து, ஒரு புதிய மருந்திற்கான வழிமுறையை உருவாக்கியவர் இவர். இவர் சம்ஸ்கிருத மொழியிலும் தேர்ச்சி பெற்றிருந்தார்.

அவர் தலைமை ஆசிரியராக இருந்தபோது, தேர்வுகளில் மேற்பார்வையாளராக இருப்பதற்கு பல முறை பௌகாவிக்கு சென்றிருக்கிறார். அப்போது நம் வீட்டிலேயே தங்கியிருந்தார். அந்த இடத்தின் முக்கிய வைத்தியரான டாக்டர். கே.ஜி. ஹிரேமட மற்றும் மற்றவர்கள் இவரை காண வருவது வழக்கமாக இருந்தது. இத்தகைய புகழ் பெற்ற மருத்துவர், நம் தந்தையிடம் பேசும்போது, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரைப் பற்றி இவ்வாறு கூறினார்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஒரு அற்புத ஞானி. ஸ்ரீவாதிராஜரின் கருணை மற்றும் அவரது விசேஷ சன்னிதானத்தினால், அனேக சாஸ்திரங்களில் ஆளுமை கொண்டிருக்கிறார். ஆயுர்வேதத்தில் அவருடைய திறன் அளவிடமுடியாதது. ஸ்ரீகளவர் உடுப்பியில் இருந்தபோது, பலமுறை நான் அங்கு சென்று அவரை பார்த்திருக்கிறேன். அவருக்கு லௌகிக விஷயங்களின் பேச்சே தேவையில்லை. எப்போதும் ஏதாவது ஒரு நோயின் லட்சணம் மற்றும் அதன் சிகிச்சையைப் பற்றி அல்லது சாஸ்திர விஷயத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பார்.

ஒரு முறை ஏலக்காய், மிளகு, ஜீரகம் ஆகியவற்றின் கலவையின் குணாம்சத்தைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தார். அலோபதி மற்றும் ஆயுர்வேதத்தின் சிறப்புகளை ஒப்பிட்டு அதனை விவரித்துக் கொண்டிருந்தார். டானிக் (திரவ மருந்து) பற்றிய அவருடையதே ஆன ஒரு கணக்கு இருந்தது. ஸ்ரீகளவரிடமிருந்து தீர்வுகளைப் பெற்று எவ்வளவோ பேர் தங்களின் நோய்களிலிருந்து விடுபட்டிருக்கிறார்கள். அவருடையது வெறும் சாஸ்திர ஞானம் அல்ல. அத்துடன் தவத்தின் சக்தியும் சேர்ந்திருந்தது. அதனால் அவர் சொல்லும் தீர்வுகள், சிறப்பாக மற்றும் பலன்களைத் தருவதாக இருந்தன. ஒரு பல்கலைக்கழகத்தின் தலைவராக இருக்கக்கூடிய தகுதிகளை அவர் பெற்றிருந்தார்.

இப்படியாக ஒரு ஆயுர்வேத அறிஞர் ஸ்ரீகளவரைக் குறித்து பேசியது மிகவும் சிறப்பான விஷயம் ஆகும். ஸ்ரீவிஜயீந்திர மூர்த்தி அவர்கள், பேசும்போது நடுவில் புத்திகெ மடத்தின் ஸ்ரீசுக்ஞானேந்திர தீர்த்தரின் ஆயுர்வேத சாஸ்திர ஞானத்தைப் பற்றியும் மிகவும் புகழ்ந்து பேசியுள்ளார். நவீன தொழில்நுட்ப அறிவைக் கண்டு வியந்தனர்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய (1996-97). தனஞ்சய குல்கர்ணி என்னும் மாணவர் மடத்திற்கு வந்திருந்தார். மங்களூரில் Mahe Manipal Academy of Higher Education நிறுவனத்தில் படித்துக் கொண்டிருந்தார். தினமும் மடத்திற்கு வருகை. பின் குருகளின் சேவை செய்து கொண்டிருந்தார். ஸ்னானத்திற்கு மத்வ ஸரோவரத்திற்கு ஸ்ரீகளவருடன் வருவது வழக்கம். தண்ட கௌபீனங்களை எடுத்துப் போய், ஸ்னானாதிகள் முடிந்தபின், அவற்றை மடத்திற்கு கொண்டு வருவார். இரவில், படுப்பதற்கு முன், கால்களை அழுத்தி விடுவது போன்ற சேவைகளையும் செய்து வந்தார். கல்லூரியில் விடுமுறை இருந்த காலத்தில், சௌகி பந்தியில் பரிமாறுவதும் அவரது வழக்கமாக இருந்தது. ஸ்ரீகளவரின் அன்பிற்கு பாத்திரர் ஆனவர். நான் உடுப்பிக்கு சென்ற சமயங்களிலெல்லாம், அவர் அதிகமாக பாட அத்யயனம் செய்ததைக் கண்டதில்லை. குரு சேவையிலேயே இருப்பதை கண்டிருக்கிறேன். அவரை கேட்டபோதெல்லாம் அவரது பதில். 'நம் ஸ்வாமிகள் இருக்கிறார். அவருடைய அருள் பலம் ஒன்று இருந்தால் போதும். எதை வேண்டுமானாலும் சாதிக்கலாம்'.

தனஞ்சய, தனது தேர்வில் முதன்மையானவராக தேர்ச்சி பெற்றிருந்தார். குருவருள் பூரணமாக கிடைத்திருந்தது. அடுத்து Phd பட்டத்துடன், மும்பை Jaslok மருத்துவமனையில் மூத்த ஆராய்ச்சியாளராக வேலையில் சேர்ந்தார். ஒவ்வொரு ஆண்டும், ஸ்ரீராஜரின் மற்றும் குருகளின் ஆராதனைக்கு தவறாமல் வந்து சேவை செய்பவரக இருக்கிறார்.

தனஞ்சயன் உடுப்பியில் மடத்தில் இருந்தபோது நடந்த ஒரு சம்பவம். ஒரு நாள், பூஜ்ய ஸ்ரீகளவர் தனஞ்சயனிடம் இவ்வாறு கேட்டார். 'டயாபிடிஸ் சிகிச்சையில், பிராணிகளின் ஜீன்களை பயன்படுத்துகிறார்களாமே, அதைப் பற்றி உனக்கு ஏதாவது விவரங்கள் தெரியுமா?'. தனஞ்சயனுக்கு வியப்பு. மிகப்பெரிய கல்லூரியில் படித்திருந்தாலும், அவருக்கு இந்த விஷயம் தெரிந்திருக்கவில்லை. தன் கல்லூரியின் தலைமை பேராசிரியரை கேட்கிறேன் என்று கூறினார்.

அதைப்போல, அடுத்த நாள் தம் தலைமை ஆசிரியரான டாக்டர். டி.வி. வாசுதேவன் (இவர் Mahe - Deemed University Vice Chancellor) அவர்களை இவ்வாறு கேட்டார். அவரும் வியப்படைந்தார். 'வெளிநாடுகளில் இத்தகைய விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி நடந்து வருகிறது. நம் நாட்டில் இன்னும் இந்த ஆராய்ச்சி நடக்கவில்லை. சரி, இதைப் பற்றி உனக்கு சொன்னது யார்?' என்று அவர் கேட்க, நம் ஸ்வாமிகள் என்று தனஞ்சயன் கூற, அந்த மருத்துவருக்கு மேலும் வியப்பு. உடனே அடுத்த நாள் அவர் உடுப்பிக்கு வந்து, பூஜ்ய ஸ்ரீபாதங்களவரைக் கண்டு வணங்கினார். அந்த ஜீன் தொழில்நுட்பத்தைப் பற்றி ஸ்வாமிகளுடன் பேசினார். ஸ்ரீகளவர் அதன் சாதக, பாதகங்களைப் பற்றி விவரித்தபோது, டாக்டர். வாசுதேவன் மேலும் ஆச்சரியமடைந்தார்.

மறுபடி அவரை வணங்கி, மந்திராட்சதை ஏற்று, மங்களூருக்கு திரும்பி வந்தார். புறப்படும்போது, தனஞ்சயனின் எதிரில் இவ்வாறு கூறினார். 'உங்கள் ஸ்வாமிகள் மிகப்பெரியவர். அவருடைய ஞானம் அபாரம். ஜீன் தொழில்நுட்பத்தைப் பற்றிய பூஜ்யரின் அறிவு ஆச்சரியமான விஷயம் ஆகும்'.

ஸோதெயிலோ, உடுப்பியிலோ யாராவது மருத்துவர்கள், ஆராய்ச்சியாளர்கள் மந்திராட்சதை நிமித்தமாக தரிசனத்திற்கு வந்தால், ஸ்ரீகளவர் அவர்களுடன் நோய் நிவாரணம், சிகிச்சை வழிமுறைகள் என நீண்ட பேச்சுவார்த்தை நடத்துவது வழக்கம். சில சமயங்களில், ஸ்ரீகளவரிடமிருந்தே அந்த மருத்துவர்களுக்கு சிறந்த மருத்துவ யோசனைகள் கிடைப்பது வழக்கமாக இருந்தது.

### B. சங்கீதம்:

ஸ்ரீகளவரின் சங்கீத சாஸ்திர ஞானம் அபாரம். அவர் சங்கீத கச்சேரி செய்யாவிட்டாலும், மற்றவர்கள் பாடும்போது ஒருமனதுடன் கேட்பது வழக்கம். பல முறை ஆராய்ச்சியாளர்களைப் போல கேள்வியும் கேட்பதுண்டு. ஸ்ரீபதி பாடிகார் மற்றும் மாதவ குடி ஆகியோர் முறையே உடுப்பி மற்றும் ஸோதெயில் சங்கீத நிகழ்ச்சி நடத்தியபோது, ஸ்ரீகளவருக்கு கர்னாடக – ஹிந்துஸ்தானி என்பது முக்கியமாக இருந்திருக்கவில்லை. மூல சாஸ்திர அம்சங்களான ஷுத்த ராக ஆலாபனை, லய, கிரம ஆகியவையே முக்கியமாக இருந்தன.

ஸ்ரீஸோதெ மடத்தில் ஸ்ரீபத்மனாப பட்டர் என்பவர் பாகவதராகி, பத பத்யங்களை சொல்லிக் கொண்டிருந்தார். பூஜை சமயத்தில் சங்கீத சேவை செய்து வந்தார். அவர் பாடும்போது அதில், ஸ்வர ராக தாளங்களில் சிறிதளவு வித்தியாசங்கள் இருந்தாலும், அவற்றை கண்டுபிடித்து சொல்பவராக இருந்தார். வார்த்தைகளை சரியாக உச்சரிக்கும்படியும், சாகித்யத்தில் எவ்வித குறைகளும் வராதவாறு பாடுமாறும் அவரை ஸ்ரீகளவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

பலமுறை ஆரோகண அவரோகணங்களை சரிப்படுத்தியிருந்தார். சாதுர்மாத சமயத்தில் சந்த்யா ஜப காலத்தில் ஸ்ரீபத்மனாப பட்டரை அழைத்து அவர் மூலமாக பதங்களை பாட வைத்து கேட்டு வந்தார். ஸ்ரீகளவருக்கு ஹரிதாசரின் பதங்களுக்கு பொருந்தக்கூடிய சங்கீதத்தில் அதிக விருப்பம் இருந்ததே தவிர, வெறும் பாடல், ஆலாபனைகளைக் கொண்ட சங்கீதத்தில் அல்ல.

ஸ்ரீ ஆர்.கே.பத்மனாப அவர்கள், சங்கீத சாஸ்திரத்த்தில் விற்பன்னர். கர்னாடக சங்கீதத்தில் வல்லுனர். ஸ்ரீவாதிராஜரின் அனேக கிருதிகளுக்கு ராகத்தை பொருத்திப் பாடியவர். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு மிகவும் பிடித்தமான்வர். குருகளைப் பற்றி அபாரமான கௌரவம் மரியாதை பக்தி கொண்டிருந்தார். ஸ்ரீகளவர் ஸ்ரீபத்மனாப அவர்களின் சங்கீத சாஸ்திரத்தின் திறனை அறிந்திருந்தார். ஸோதெயில் மற்றும் வேறு பல இடங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகளில் அவருடைய சங்கீத நிகழ்ச்சியைக் கேட்டு மிகவும் மகிழ்ந்தார் மற்றும் அவரை பாராட்டினார். ஸ்ரீராஜரைப் பற்றி மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தமரைப் பற்றி ஸ்ரீபத்மனாப அவர்களின் ஒரு கருத்து.

'ஹரிதாச சாகித்யத்தில் முன்னோடியான ஸ்ரீவாதிராஜரின் வித்யா சிஷ்யன் நான். என் பந்தனம் தீர்ந்தது. துன்பங்கள் போயின. இனி பிறரை பஜிக்க மாட்டேன். ஸ்ரீஹயவதனனே, மன்னிப்பாயாக. நான் வாதிராஜ குருவர்யரைக் கண்டதில்லை. ஆனால், என்னைப் பொறுத்தவரையில் ஸ்ரீவிஷ்வோத்தமரே ஸ்ரீ வாதிராஜ ஸ்வரூபர்'.

சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த விஷயம். உடுப்பியின் மத்வ சரோவரத்தில் ஒரு குருகள் ஸ்னானம் செய்து கொண்டிருந்தார். அவருடைய முகத்தின் தேஜஸ், தாயன்புடன் கூடிய கருணை மிக்க அவரது கண்கள் என்னை ஈர்த்தன. கல்யாணியின் ஸ்னானத்திற்கு வந்த அவருடைய முதுகிலேயே சூர்யபிரபையைக் கண்டேன். 'தன்யனாதேனோ நா தன்யனாதேனோ பஹுகால பாவிஸமீரர கண்டு' என்னும் கிருதியை (ராக: வ்ருந்தாவன. தாள: ஆதி), ராகத்துடன் பாடினேன்.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய (1996-97), பூஜை, சந்தர்ப்பணை, ஞானகார்ய, உத்ஸவாதிகளுடன் அனேக கலை, சங்கீத நிகழ்ச்சிகளும் நடந்தன. ஸ்ரீ ஆர்.கே.பத்மனாப அவர்களுடைய சங்கீத நிகழ்ச்சியும் நடந்தது. அந்த நிகழ்ச்சியன்று, அவர், தமது குழுவினருடன் உடுப்பிக்கு வந்து, காலையில் சர்வக்ஞ சிம்மாசனத்தில் விராஜமானராத ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரைக் கண்டு வணங்கினார். நலம் விசாரிப்புகளுக்குப் பின் ஸ்ரீகளவர் 'இன்று மாலை இந்த ராகத்தை (தேனுக ராகமாக இருக்கலாம்) பாடலாமே' என்றார். இதனைக் கேட்டு பத்மனாப அவர்களுக்கு மிகவும் வியப்பு. ஏனெனில், ஸ்ரீகளவர் கேட்ட ராகம் மிகவும் விசேஷமானது. பொதுவாக எங்கும் பயன்பாட்டில் இல்லை. ஏனோ, சங்கீதகாரர்கள் அந்த ராகத்தைப் பற்றி அறிந்திருக்கவில்லை.

ஸ்ரீபத்மனாப அவர்கள் 'ஆயிற்று ஸ்வாமி, தம் அருளுடன் பாடுகிறேன்' என்று பிரார்த்தித்து சென்றார். மதியத்தில் பிரசாதம் ஏற்றுக் கொண்டபிறகு, தாம் தங்கிய இடத்தில் அந்த ராகத்தைப் பாடி சிறிது பயிற்சி செய்து கொண்டார். மாலையில் ராஜாங்கணத்தின் நிகழ்ச்சியில் அந்த ராகத்தைப் பாடி அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்தினார். விசேஷமாக ஸ்ரீகளவரை.

## VII. மற்றவை

### 1. வித்வான் ஸ்ரீரகுராம ஐதாளர் கூறியது:

ஸ்ரீரகுராம ஐதாளர், ஸ்ரீவிஷ்வோத்தமருடன் கூட அத்யயனம் செய்தவர். காணியூரு மடத்தின் ஸ்ரீவித்யாஸமுத்ர தீர்த்தரிடம் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் படித்தபோது, இவரும் உடன் இருந்தார். இப்போது அவருக்கு 86 ஆண்டுகள் ஆகியிருந்தன. கோடேஷ்வரத்தின் அருகில் கோட கிராமத்தில் தங்கியிருந்தார். நோய்வாய்ப்பட்டிருந்தார். ஜூன் 2,2017 அன்று மதியம் 3.30க்கு நானும், ஸ்ரீ.ரமேஷ் ஹத்வார இருவரும், ஐதாளரை சந்திக்க சென்றுகொண்டிருந்தோம். படுக்கையில் படுத்திருந்தார். கேட்ட கேள்விகளுக்கு அப்படியே பதில் அளித்தார். அவர் கூறியதின் சாரம் இவ்வாறு:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் மிகவும் ஒழுக்கமான மாணவர். படிப்பதற்காக ஸ்ரீகாணியூரு ஸ்ரீகளவரிடம் இருந்தோம். குருகளின் பாடம் மிகவும் விசேஷம். ஸ்ரீகளவர் சொல்லிக் கொடுத்தவற்றை அற்புதமான மனனம் செய்து வந்தார். வெறும் வரிகளை மட்டும் அவர் மனனம் செய்வதரல்ல. கிரந்தங்களில் மேற்கோள் காட்டப்பட்ட விஷயங்களையும் அவர் மனனம் செய்து

வந்தார். அதற்காக ஒரே நேரத்தில் நான்கு ஐந்து கிரந்தங்களின் சிந்தனை ஆக வேண்டியிருந்தது. ஸ்ரீகளவர் கூர்மையாக கவனிக்கக்கூடியவர். அனைத்து சிந்தனைகளையும் உரைகல்லில் தேய்த்து, அதன் சிறப்பு அம்சங்களை அறிந்து கொண்டிருந்தார்.

எப்படிப்பட்ட சந்தேகங்கள் இருக்கட்டும், எப்படியாகவோ இருக்கட்டும், எவ்வளவோ இருக்கட்டும், அதன் தீர்வினை பார்க்காமல், அவர் அடுத்து படிப்பதில்லை. அவருடைய நினைவுத்திறன் அபாரம். அதனைக் கண்டு குருகளும் வியப்படைந்து கொண்டிருந்தார். பாடத்திற்கு அவர் என்றும் தாமதமாக வந்தவரே இல்லை. ஐந்து நிமிடங்கள் முன்னரே வந்து விடுவார். அவருடைய வினய பாவம் வர்ணிக்க முடியாதது. குருபக்தி மிகச் சிறந்தது. குருகளைப் போல, கையெழுத்துப் பிரதிகளை படிப்பதில் மிகவும் ஆர்வம் கொண்டவர். ஒரு கிரந்தம் முடிவதற்குள் அது மனப்பாடம் ஆகியிருக்கும். பிறகு, அதனை மந்திரத்தைப் போலவே சொல்வார்.

நம் குருகளில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், அனேக மந்திர ரகசியங்களை அறிந்தார். ஸ்ரீகளவருக்கு சர்வமூலத்தின் அனேக கிரந்தங்கள், மனப்பாடமாக இருந்தன. ஸ்ரீமன் நியாயஸுதாவில் முதல் மற்றும் மூன்றாம் அத்தியாயங்கள் மனப்பாடம். அனத்யயன நாட்களில் மற்றும் நேரங்களில், அங்கிருந்த சிறந்த வித்வாம்ஸர்களான ஆலெமூரு ஸ்ரீஸீதாராமாசார்யர், அட்டெ ஸ்ரீவேதவியாஸாச்சார்யர் மற்றும் மற்றவர்களுடன் அனேக விஷயங்களை விவாதித்து வந்தார். ஸ்ரீகளவருக்கு பாட-ஷுத்தியைப் பற்றி மிகவும் கவனம் இருந்தது. ஸ்ரீகளவர் வினோத-ப்ரியர். மிகவும் நகைச்சுவையாக பேசியவாறு, அனைவரையும் சிரிக்க வைத்துக்கொண்டிருந்தார். விஷய நிரூபணம் செய்வதில் அவருக்கு இருந்த திறன் அபாரமானது.

ஒரு முறை எங்களுக்கு யுக்திமல்லிகா மற்றும் நியாயாம்ருதா பாடம் நடந்து கொண்டிருந்தது. அந்த சமயத்தில் அத்வைத பண்டிதரான வித்வான் ஸ்ரீஅனந்தகிருஷ்ண சாஸ்திரிகள் வந்தார். குருகளுடன் குணஸௌரப மற்றும் விஷ்வஸௌரப கிரந்தங்களின் பல பங்க்திகளை சர்ச்சை செய்து 'யுக்திமல்லிகா' ஒரு பிரம்மாஸ்திரம் என்று பாராட்டினார். ஸ்ரீகளவர் வியப்படைந்தார். ஸ்ரீராமசந்திர சாஸ்திரி என்பவர் (ஐதாளருக்கு அந்த வித்வாம்ஸரின் ஊர் தெரியவில்லை. பிறகு மைசூராக இருக்கலாம் என்றார்) ஒருமுறை நம் குருகளான ஸ்ரீகாணியூரு ஸ்ரீகளவரை பார்க்க வந்து ந்யாயாம்ருதத்தைப் பற்றி விவாதித்தார். விவாதம் நடந்தது. குருகளின் அனுமதியில் நான் ஸோதெ மடத்திற்குச் சென்று, குருகளின் ஆணை என்று கூறினேன்.

ஸ்ரீகோவிந்தண்ண அவர்களுடன் ஸ்ரீகளவர் வந்து சேர்ந்தார். அது பெரிய சபை அல்ல. வித்வான். காபு ஸ்ரீஹயக்ரீவாசார்யர், குருகளை பார்க்க வந்து அமர்ந்திருந்தார். அந்த சர்ச்சையில் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பல சமாதானங்களைக் கூறியது தெரிய வந்தது. ஸ்ரீகளவருக்கு ஸ்ரீவாதிராஜரின் அனேக கன்னட கிருதிகளைப் பற்றி அபாரமான கௌரவம் இருந்தது. அவற்றை படித்துக் கொண்டிருந்தார். நேரம் கிடைக்கும்போதெல்லாம் பாடத்தின் விஷயத்தை எனக்கு கிரந்தம் கையில் இல்லாமலேயே சொல்லிக் கொடுத்திருக்கிறார். அந்த சமயத்தில் அவரிடம் கண்ட பணிவு மிகவும் அற்புதம்.

ஸ்ரீகளவர் பரம தயாளு. என் மேல் அபாரமான கனிவு கொண்டிருந்தார். ஸோதெக்குச் சென்று வரும்போதெல்லாம், வழியில் வண்டியை நிறுத்தி பிரஸாதம் அனுப்பிக் கொண்டிருந்தார். வீட்டிற்கு வந்தால், வந்தபோதெல்லாம் நாம் காணிக்கை கொடுப்போம் என்பதால், அவர் அதிகம் வரவில்லை. பிரஸாதம் மட்டும் தவறாமல் அனுப்பிக் கொண்டிருந்தார். ஆனாலும், அவரை வேண்டியபோது, இரு முறை நம் வீட்டில் சம்ஸ்தான பூஜையை செய்து அருளினார். ஒரு முறை ஸோதெக்கு சென்றிருந்தபோது, என்னையும் அழைத்துக்கொண்டு போய், ஸ்ரீராஜரின் தரிசனம் செய்வித்தார். பலமந்த்ராட்சதயைக் கொடுத்து 'வீட்டில் ஸ்ரீராஜரின் ஆராதனையை செய்யலாம்' என்று அனுமதி அளித்தார். அவருடைய ஆணைப்படி, நான் பல ஆண்டுகள் வரை ஸ்ரீராஜரின் ஆராதனையை வீட்டில் யதாசக்த் செய்தேன். நம் குருகளின் ஸ்மரணையைப் போல, ஸ்ரீராஜரின் ஸ்மரணையும் உடல் – உள்ளத்திற்கு சக்தியைக் கொடுக்கிறது.

ஸ்ரீகளவரின் சிஷ்யரான ஸ்ரீவிஷ்வவல்லப தீர்த்தரும், குருகளைப் போல கருணை உள்ளம் கொண்டவர். ஸ்ரீகளவரின் ஆராதனா சமயத்தில் என்னையும் ஸோதெக்கு அழைத்து, சன்மானம் செய்து, அருளினார்.

(வித்வான் ஐகாளர் தம் அத்யயன மற்றும் மற்றவர்களுக்கு சொல்லிக் கொடுக்கும் விஷயங்களைப் பற்றியும் பல விஷயங்களைக் கூறினார். அவற்றை இங்கு சொல்லவில்லை. வெறும் ஸ்ரீகளவருக்கு சம்பந்தப்பட்ட விஷயங்களை மட்டுமே சொல்லியிருக்கிறோம்).

## 2. ஷதமானோத்ஸவங்கள்:

### 1. ஸ்ரீமத் வ்ருந்தாவனாசார்யரின் ஆராதனா ஷதமானோத்ஸ்வ:

1965ம் தம் இரண்டாம் பர்யாய சமயத்தில், ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் (ஸ்ரீவிஷ்வப்ரிய தீர்த்தரின்) ஆராதனா ஷதமானோத்ஸவத்தை பூஜ்ய ஸ்ரீகளவர் மிகவும் சிறப்புடன் கொண்டாடினார். ஸ்ரீகிருஷ்ண சன்னிதியில் விசேஷ அலங்கார, பாராயணாதி கிரமங்கள் நடந்தன. அன்று அஷ்ட மடத்தின் அனேக யதிகள் மதியத்தில் பிரசாதத்திற்காக அழைக்கப்பட்டிருந்தது மிகவும் சிறப்பான விஷயம் ஆகும். உத்யாவரத்தின் ஸ்ரீமுக்யபிராணாசார்யரின் உறவினர்கள் சிறப்பு சேவைகளை செய்தனர்.

அது சாதுர்மாத காலம் ஆகையால், வெளியே நடக்கும் பல உற்சவங்கள் நடைபெறவில்லை. அன்று மாலையில் குரு ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் மகிமா ஸ்மரணை செய்யப்பட்டது. மாலையில் சந்த்ரஷாலையின் புராணத்திற்குப் பிறகு, ஸ்ரீகளவர் ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் மகிமைகளை கொண்டாடினார். ஸ்ரீவ்ருந்தாவனாசார்யரின் வ்ருந்தானத்திலான சன்னிதி பிரகாரத்தின் மற்றும் அதன் அனைத்து ரகசியங்களையும் கூறினார்.

அட்டே ஸ்ரீவேதவியாஸாசார்யர், ஸ்ரீகளவரின் பரம்பரை மகிமைகளை கூறினார். ஆராதனா நிமித்தமாக ஸ்ரீகளவர், வித்வத் ஸம்பாவனெ மற்றும் தக்ஷிணையைக் கொடுத்தார். அன்று பா.வெம். ஆசார்யர் நிகழ்ச்சியில் பங்கு பெற்றிருந்தார்.

### 2. ஸ்ரீவாதிராஜரின் அவதார பஞ்ச ஷதமானோத்ஸவ:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் தம் மூன்றாம் பர்யாய பீடாரோஹணத்திற்குப் (18.01.1980) பிறகு, ஸ்ரீவாதிராஜரின் அவதார பஞ்ச ஷதமானோத்ஸவத்தை அற்புதமாக கொண்டாடினார். அதனை ஒட்டி, பல நிகழ்ச்சிகள் நடந்தன.

1. ஹரிகதாமேள (போட்டி)
2. கீர்த்தன போட்டி
3. ஸ்ரீவாதிராஜரின் விக்ரஹ ஷோபா-யாத்ரெ
4. ஸ்ரீவாதிராஜரின் மகிமா-பல யாத்ரெ
5. உத்ஸ்வ உத்காடனெ
6. வித்வத்கோஷ்டி
7. விசார கோஷ்டிகள்
8. கலை, இசை நிகழ்ச்சிகள்

இவை அனைத்தும் 19.01.1980 முதல் 28.01.1980 வரை நடந்தன. 29.01.1980 அன்று (மாக ஷுத்த த்வாதசி, ஸ்ரீராஜரின் அவதாரத்தின் பர்வ காலம்) உடுப்பியில் அன்று விசேஷ பூஜை, கனகாபிஷேக, சிறப்பான சந்தர்ப்பணெ ஆகியவை நடந்தன. ஹூவினகெரெயில் உற்சவத்திற்காக நிர்மாணம் செய்யப்பட்ட ஸ்ரீவாதிராஜரின் விக்ரகத்திற்கு விசேஷ அபிஷேக அலங்காரம், சமர்ப்பணை, ஆரத்திகள் செய்யப்பட்டன. அங்கும் சந்தர்ப்பணெயில் ஏற்பாடுகள் நடந்திருந்தன. பிறகு, அங்கிருந்த அந்த ஸ்ரீராஜரின் விக்ரகத்தின் ஊர்வலம் துவங்கியது. அங்கங்கு வரவேற்பு வளையங்கள், பதாகைகள் என அற்புதமான ஏற்பாடுகள் ஆகியிருந்தன. ஊர்வலம்

நெடுஞ்சாலையில் வந்து, மாலையில் உடுப்பியை அடைந்தது. மட்டு கிராமத்திலிருந்து புறப்பட்ட ஸ்ரீவாதிராஜரின் மகிமையை விளக்கும் யாத்திரையும் உடன் வந்து சேர்ந்தது.

இரு ஷோபா யாத்திரைகளும் ஒன்றாக சேர்ந்து, ஸ்ரீகிருஷ்ண மடத்தை நோக்கி நகர்ந்தன. வழி முழுவதும் வாத்திய கோஷம், பஜனை, வேத கோஷம், நடன கலைஞர்களின் ஆட்டம் என அமர்க்களமாக இருந்தன. அதனுடன், புஷ்பவ்ருஷ்டியும் ஆனது. ஸ்ரீகிருஷ்ண மடத்தின் அருகில், அஷ்ட மடாதீஷர்களுடன், மந்திராலய மடத்தின் ஸ்ரீசுபுதேந்திர தீர்த்தர் மற்றும் ஸ்ரீபீமனகட்டெ மடத்தின் ஸ்ரீரகுமான்ய தீர்த்தர் ஆகியோர், ஸ்ரீராஜவிக்ரகங்களை பக்தியுடன் வரவேற்றனர்.

அந்த உற்சவ விக்ரகங்களை படகு- மாளிகையில் மேடையில் இறக்கி, பர்யாய ஸ்ரீபாதர் ஆரத்தி எடுத்தார். அங்கேயே, உற்சவத்தின் துவக்கத்தை, மந்திராலய ஸ்ரீகளவர், தீபம் ஏற்றி துவக்கி வைத்தார். பிறகு, ராஜாங்கணத்தின் ஸ்ரீவாதிராஜ மண்டபத்தில் உற்சவத்தின் நிகழ்ச்சிகள் நடந்தன. அங்கத்திய மேடையின் மேல், ஸ்ரீமந்திரலாய மடாதீசரும், ஸ்ரீபீமனகட்டெ மடாதீஷரும், பர்யாய பீடஸ்த ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரும், ஸ்ரீகாணியூரு, ஸ்ரீகிருஷ்ணாபுர மற்றும் ஸ்ரீஷிரூரு ஸ்ரீகளவரும் வீற்றிருந்தனர்.

ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் வந்திருந்த யதிவரேண்யர்கள் அனைவரையும் மற்றும் நிறைந்த சபையினரையும் வரவேற்று, ஸ்ரீராஜர் வழங்கிய செய்தி, செய்த லோகோபகார மற்றும் உற்சவத்தின் மகத்துவத்தை விளக்கி, அருளுரை வழங்கினார். ஸ்ரீபாதங்களவரின் அருட்செய்தி அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்தியது. 30, 31 ஜனவரி தேதிகளில் மந்திராலய மடம் சார்பாக, ஸ்ரீமத் ஸமீர ஸமய ஸம்வர்த்தினி சபையும் நடந்து, வித்வத்ஸபை, விசார கோஷ்டி, ஸ்ரீவாதிராஜரின் க்ருதி தர்ஷன, மகிமா தர்ஷன மற்றும் அனேக கலை நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடந்தேறின. நாட்டின் சிறந்த அறிஞர்கள் பலர் இவற்றில் பங்குகொண்டது குறிப்பிடத்தக்க விஷயமாகும். ஸ்ரீ.K.T.பாண்டுரங்கி, டாக்டர். B.N.K.ஷர்மா, கும்பகோணம் ஸ்ரீ R.அப்பண்ணாச்சார், டாக்டர். G.வரதராஜராவ், ஸ்ரீ H.ஸுப்பராவ், ஸ்ரீ P.M. ஆசார்ய ஆகியோர் ஸ்ரீவாதிராஜரின் கிருதிகளைப் பற்றி, மகிமைகளைப் பற்றி மேடையில் சிறப்புரையாற்றினார்கள். வித்வாம்சர்களையும் மற்றும் அனேக கலைஞர்களையும் அந்த சமயத்தில் கௌரவப்படுத்தினார்கள்.

தேதி 31.1.1980 அன்று இரவு நடந்த போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பர்யாய ஸ்ரீகளவர் தக்க பரிசுகளை வழங்கி அருளினார். 'பர்யாயோத்ஸவத்துடன் ஸ்ரீவாதிராஜரின் அவதார பஞ்சஷதமானோத்ஸவமும் சேர்ந்தது மிகவும் மகிழ்ச்சிகரமான விஷயம் ஆகும். பர்யாய, ஸ்ரீமத்வர் மற்றும் வாதிராஜர் இருவரும் நிர்ணயித்த உற்சவம். இந்த உற்சவம் அனைவருக்கும் புகழினை கொண்டு வரட்டும் – என்று பர்யாய பீடாதீஷர் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஆசி வழங்கினார்.

### III. பா⁴விஸமீர ஸ்ரீவாதிராஜ குருஸார்வபௌமரின் ஆராதனா சது:ஷதமானோத்ஸவ மற்றும் ஆக்யான மந்திர சமர்ப்பண உற்சவம்:

இந்த இரு உற்சவங்களும் ஒன்றாக 2000ம் ஆண்டு ஏப்ரல் 19,20,21 தேதிகளில் ஸ்ரீஸோதே க்ஷேத்திரத்தில் மிகவும் சிறப்பாக கொண்டாடப்பட்டது. இந்த மூன்று நாட்களில் ஸ்ரீஸோதா க்ஷேத்திரம் மிக அற்புதமாக அலங்கரிக்கப்பட்டது. அங்கத்திய அனைத்து சன்னிதிகளில் வைபவத்துடனான பூஜை, நைவேத்யாதிகள் விசேஷமாக இருந்தன. ஸந்தர்ப்பணங்களும் சிறப்பாக இருந்தன. தேதி 19,20 அன்று, ஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யான ஹோமம் ஸ்ரீத்ரிவிக்ரம தேவஸ்தானத்தின் உள்ளே நடந்தது. ராஜாங்கணத்தின் 'ஸதனுக்ரஹ மண்டப'த்தில் ஸபா கார்யகிரமங்கள் நடந்தன.

ஸ்ரீநாகராஜ அவர்கள் வரவேற்பு உரை நிகழ்த்தி, இந்த உற்சவம் நம் வாழ்க்கையின் பரம பர்வ காலம் என்று சொல்லி, கார்யகிரமத்திற்கு மிகப்பெரிய சக்தியாக இருக்கும் என்றார். கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யா ஸாகர தீர்த்த ஸ்ரீகளவருக்கு நன்றியுடன் கூடிய நமஸ்காரங்களை செலுத்தினார். இந்த உற்சவத்தில், ஸ்ரீராஜரின் ருஜு மகிமை மற்றும் கிரந்த வைபவத்தை மனனம்

செய்வது அவசியமான செயல் என்று நிப்பாணி ஆசார்யர் கூறினார். ஸ்ரீராஜர் 'ஷதானந்த' பதவாச்யராக மகிமைகளைக் கொண்டிருக்கிறார்.

தம் நான்காம் பர்யாய சமயத்தில் சங்கல்பம் செய்த இந்த உற்சவத்தை, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், இன்று மிகச் சிறப்பாக நடத்தியிருக்கிறார். மந்திர துல்யமான ஆக்யானத்தின் ஆணையை ஒரு சேவையாக எடுத்து செய்து, வாதீஷவரத மத்வேஷனுக்கு சமர்ப்பிக்க சங்கல்பம் செய்திருக்கிறார். ஸமக்ர வ்ருந்தாவனாக்யான ஷிலாலேகன செயல், அந்த கிருதியின் பிரமாணத்தை நிச்சயிக்கிறது. இந்த விஷயத்தில் குருராஜரின் அனைத்து பக்தர்களும் பூஜ்ய ஸ்ரீகளவருக்கு எப்போதும் நன்றியுடன் இருப்பது அவசியம்' என்று கூறினார்.

பூஜ்ய ஸ்ரீகளவர் குத்துவிளக்கு ஏற்றி விழாவை துவக்கினார். தம் உரையில் 'ஸ்ரீராஜர, ஆசார்ய மத்வரின், ஹயக்ரீவ தேவரின் ஆராதனை தினமும் ஒவ்வொரு நொடியும் நடக்க வேண்டியது. ஞான காரியத்திற்கு அதிகமான சமயம் வேண்டியிருப்பதால், ஆராதனைக்குப் பிறகு இதனை நடத்துகிறோம். இதன் புகழ் உங்களுக்கே; நாம் மகிழ்ச்சி அடைபவர்கள் மட்டுமே; என்று அருளினார். ஞானகாரியத்தில் பங்குபெற்ற வித்வாம்ஸர் மற்றும் உபன்யாஸத்தின் விவரம் இவ்வாறு:

**தேதி 19.04.2000**

1. வித்வான் ஸ்ரீ.B.P. நாகபூஷணராயர் – ஸ்வாப்ன வ்ருந்தாவனாக்யான
2. வித்வான் ஸ்ரீ ஸஞ்சீவமூர்த்தி தாஸர் – சிந்தாகண்டன ஸ்தோத்திர மற்றும் தீஷுத்தி ஸ்தோத்திரம்
3. வித்வான் ஸ்ரீ ஆனந்த தீர்த்தாசார் ஆத்மகூரு – ஸ்ரீராஜரின் ருஜுத்வ ஸமர்த்தனெ
4. வித்வான். பாடனி ஸ்ரீராமசந்திராசார் – ஸ்ரீராஜரின் கிரந்தங்களின் அற்புதம்
5. வித்வான் ஸ்ரீஹனுமந்தராவ் ஹைதராபாத் – ஸோதா க்ஷேத்திர சன்னிதி மகிமை மற்றும் ஆக்யான ஹோமத்தின் சிறப்பு
6. வித்வான் கேட ஸ்ரீவேதவியாஸாச்சார் – ருக்மிணீஷ விஜய, சரஸ்வபாரதி விலாஸ, தீர்த்த பிரபந்த.

இரவில் பூஜைகள் முடிந்தபின், சங்கீத வித்வான் R.K.பத்மனாப மற்றும் D.V. நாகராஜன் அவர்களால் ஸ்ரீராஜரின் கன்னட கிருதிகளின் பாடல் நிகழ்ச்சி நடைபெற்றது. இருவரையும் ஸ்ரீகளவர் கௌரவித்தார்.

**தேதி 20.04.2000**

காலையில் பூஜைக்குப் பிறகு, ஸ்ரீகளவரின் திவ்ய சன்னிதியில் ஆக்யான ஹோமத்தின் பூர்ணாஹுதி நடந்தது. பிறகு பூஜாதி விதானங்களுடன் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதர், ஆக்யான மந்திரத்தை ஸ்ரீமத்வ வாதிராஜ குர்வந்தர்கத ஸ்ரீஹயவதன தேவருக்கு சமர்ப்பித்தார். ஸ்ரீஹரி குருகளுக்கு சமர்ப்பித்த பவள, முத்துக்களால், ஸ்ரீ நாகபூஷண ராயர், பூஜ்ய ஸ்ரீகளவருக்கு ரத்னாபிஷேகம் செய்து தன்யர் ஆனார். மதியம் தீர்த்தபிரசாதத்திற்குப் பிறகு, பெங்களூரு ஸ்ரீஹெஜமாடி ரமேஷராயர், விமானம் மூலம் புஷ்ப வ்ருஷ்டி சேவையை செய்வித்தார். அந்த சமயத்தில் அலங்கரிக்கப்பட்ட வெள்ளி பல்லக்கில் சர்வமூல ஆக்யானாதி கிரந்தங்களை வைத்து, பிராகாரோத்ஸவ செய்யப்பட்டது. இது ஒரு மறக்கமுடியாத காட்சியாக இருந்தது.

பிறகு, ஸ்ரீகளவர் தம் அருளுரையில் 'ஆக்யான ஷிலாலேகனாதிகள் இவ்வளவு சுலபமாக முடிந்தது, தெய்வ அனுக்கிரகமே. பாட ஷோதனாதி காரியங்களில் ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் மிகவும் சிரமப்பட்டிருக்கிறார். மற்றவர்களின் உதவியும் அபாரமானவை. இந்த உற்சவத்தின் சமயத்தில், ஸ்ரீராஜரின் ருஜுத்வ சமர்த்தக அனேக பிரமாணங்கள் கிடைத்தது மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. நிகழ்ச்சி மலருக்கு பலர் உதவி செய்திருக்கின்றனர். அனைவருக்கும் ஸ்ரீஹரி குருகள் விசேஷமாக அருளட்டும்' என்று கூறினார்.

தேதி 20.04.2000 (பிரவசன விவரம்)

1. டாக்டர். H.G.லோகூர - ஸ்ரீராஜரின் கன்னட கிருதிகள் (ஸ்ரீகிருஷ்ண பாலலீலெ மற்றும் அவதார த்ரய சுவ்வாலி)
2. வித்வான் K.ஹரிதாஸ உபாத்யாய - ஆக்யான பிராமாண்ய விஷயத்தில் ஸ்வப்ன ஸத்யத்வ
3. வித்வான் ஸ்ரீராமாசார்ய மாளகி - தத்வபிரகாஷிகா குர்வர்த்த தீபிகா
4. வித்வான். C.R.ஸ்ரீரகுனந்தனாசார் (இப்போது இவர் ஸ்ரீவிஷ்வ நந்தன தீர்த்தர்) - ஸ்ரீராஜரின் தலவகார உபநிஷத் பாஷ்ய டீகா
5. வித்வான் வி.ஸ்ரீரமேஷாச்சார் - ஆக்யானத்தின் ஸ்லோக விவரணை

மாலையில், கர்த்திகெரெ ஸ்ரீராகவேந்திர ராவ் அவர் ஸ்ரீவாதிராஜரின் கீர்த்தனைகளை பாடினார். அவரை ஸ்ரீகளவர் கௌரவித்தார்.

**21.4.2000**

காலையில் ஸ்ரீ.K.ஸ்ரீதர ஹத்வார அவருடைய ஸ்ரீராம மந்திர லேகன உத்யாபனா ஹோம. சம்ஸ்தான பூஜாதிகள், சிறப்புடன் நடைபெற்றன

பிரவசன விவரங்கள்

1. மானகரி ஸ்ரீனிவாஸாசார் - லட்சுமி ஷோபானெ மற்றும் பாகவத அஷ்டம ஸ்கந்தம் ஒரு ஒப்பீடு
2. டாக்டர். குருராஜ நிப்பாணி - ஆக்யானத்தின் இரண்டாம் ஸ்லோகத்தின் விவரணை மற்றும் யுக்திமல்லிகா பல ஸௌரபா ஸங்க்ரஹ ஸ்லோகம்
3. வித்வான் ஸ்ரீராகவேந்திர புராணிக - வ்ருந்தாவனாக்யான பிரமாண்ய போதினி
4. வித்வான் K.L. ஸ்ரீபுஷ்கராசார் - (பிறகு இவரே ஸ்ரீவித்யாவிஜய தீர்த்தர்) - ஆக்யானோக்த வைபவ - வேத ரிக்குகளின் விவரணை

உடுப்பியின் ஸ்ரீவியாஸாசார்யர் ஞானஸத்ர உற்சவ சமிதியினர் - ஸ்ரீகளவருக்கு வஸ்த்ர பல புஷ்ப காணிக்கைகளை சமர்ப்பித்தனர்.
பூஜ்ய ஸ்ரீகளவரால் லோகார்ப்பணை கொண்ட கிருதிகள்:

1. தத்வமல்லிகா - உற்சவ நிகழ்ச்சி மலர்
2. வ்ருத்த ரத்ன ஸங்க்ரஹ - ஸ்ரீரகுநாதாசார்யர்
3. ஸுக்ஞான - ஸ்ரீமதி ஸத்யவதி ஹரிகிருஷ்ண
4. அணுவ்ருந்தாவனாக்யான - பா[4]விஸமீர பிரகாஷன, பெங்களூரு

ஸ்ரீகளவர் தமது அருளுரையில், ஸ்ரீவாதிராஜரின் வாங்மய சேவையை விசேஷமாக செய்து கொண்டிருக்கும் பக்தர்களையும், ஸ்ரீமடத்தின் அதிகாரி வர்க்கத்தினரையும் ஆசிர்வதித்து பிறகு பல மந்திராட்சதை வழங்கினார்.

## 3. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் கொள்கை முடிவுகள்:

** வெளிநாட்டு பயணம்:
-- வெளிநாட்டு பயணம் கூடாது. வேறு வழியின்றி பயணம் செய்த கிருஹஸ்தர்கள், அதனை சரி என்று விளக்கக்கூடாது. அது தர்மத்தின்படி ஒரு குறையே. அந்த குறைக்காக, ஸ்ரீஹரி குருகளில் நித்ய ப்ரார்த்தனை இருக்கட்டும். யதிகளோ, எந்த காரணத்தைக் கொண்டும் வெளிநாட்டுப் பயணம் செய்யவே கூடாது.

** ஸ்ரீராஜரின் ருஜுத்வ:

-- ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வத்திற்கு தத்வம். பிரமாணங்கள் ஏராளமாக உள்ளன. 'ஸம்ஸர்க்கஜா தோஷகுணா பவந்தி' என்பது வசனம். ஆகையால், ருஜுத்வத்தை விரோதம் செய்பவர்கள் இருக்கட்டும். அவர்களிடமிருந்து ஸ்ரீராஜரின் பக்தர்கள் சிறிது விலகி இருப்பதே நலம்.

** ஸ்ரீவாதிராஜரின் கிருதியின் சிறப்பு:
--ஸ்ரீவாதிராஜர் ருஜுதேவதை ஆகையால், வ்யாப்தோபாஸகர். அவருடைய தீர்த்த பிரபந்த – சரஸ பாரதி விலாஸ, ஸ்தோத்திராதி ஸ்துதி கிருதிகள் ஏராளமாக உள்ளன. மந்திரத்தைப் போல ஸத்வயுத.

** தெய்வ அனுக்ரக:
-- தெய்வ அனுக்கிரக லௌகிக வியாபார விஷயம் அல்ல. இது சேவா காணிக்கை சமர்ப்பணத்தால் மட்டுமே சம்பாதிக்கக்கூடிய செயல் அல்ல. இது தெய்வ சங்கல்பத்தால் வரக்கூடியது இது உடனேயோ, தாமதமாகவோ வரலாம்.

** ஸ்வரூப மஹிமா ஞானம்
-- ஸ்வரூப மஹிமா ஞானத்திற்காக, ஸ்ரீஹரி குருகளை ஆராதிப்பது விசேஷ அருள் மற்றும் பலன்களைத் தரும். ஸ்ரீவாதிராஜ குருகளின் ஸ்வரூப (ருஜுத்வ) மஹிமா ஞானத்தினால் அவரை ஆராதித்து அருளைப் பெற்றவரே அவருடைய ஆளுமை, திறன், ஆகியவை புரிந்து, யதாசக்தி, யதாமதி, ஞானம் கிடைக்கிறது.

** ஸங்கீதம்
-- ஸாகித்யத்திற்கு, அதில் கூறப்பட்டுள்ள விஷயங்களை வெளிப்படுத்துவதற்கு பங்கம் வராதவாறு ராகம் பாடப்பட வேண்டும்.

** ஹரிதாச சாகித்ய
-- தேவதைகள், ரிஷிகள், முனிகள் ஆகியோர் அவதரித்து பண்டிதருக்கும் பாமரர்களுக்கும் பயன்படும் விதத்தில், தக்க பிரமேயங்களை பேசுமொழியில், பத்ய பத சுளாதி உகாபோகங்களின் மூலம் உபதேசம் செய்திருக்கிறார்கள். ஹரிதாசர்கள் ஹரியைக் கண்டவர்கள். ஸ்ரீஹரியின் தாஸ்ய யோகம் கொண்டவர்கள். ஆகையால், ஹரிதாச சாகித்ய அனைவருக்கும் அனைத்து விதங்களிலும் பயன்படுகிறது.

** வைஷ்ணவ ஜென்மம் அரிதானது. அந்த ஜென்மம் பெற்ற பிறகு, அவைஷ்ணவ (அமாத்வ) வரிசையில் போய் சரணடையக்கூடாது.

** ஆயுர்வேத:
-- ஆயுர்வேதத்திற்கு மூலம் – ஸ்ரீதன்வந்திரி ஸ்வாமி. ஆயுர்வேதத்தின் சிகிச்சை, அந்த ஸ்வாமியின் ஸ்மரணைக்கு காரணம் ஆகும். ஆகையால் மிகவும் சிறப்பு வாய்ந்தது.

** பாண்டித்யம்:
-- உபாசனைக்கு தக்கதான பிரமேயங்களை பாண்டித்யம் கொடுக்க வேண்டும். அப்போது மட்டுமே அது ஸார்த்தகம்.

** அதீன திளியுவதக்கிந்த அன்யஸாதன காணே |
ஒதகி பாலிஸோ வேணுகோபாலவிட்டல ||

இது பாகவதத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீபிரகலாதராஜரின் தாஸ்ய யோகத்தின் குறிப்பு. இதுவே அனைத்து சாஸ்திர சாரம் ஆகும்.

## 5. அபூர்வ ஸ்லோக குறிப்புகள்:

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் சிந்தனையின் பிரவாகம் பன்முகங்களைக் கொண்டவை. அவற்றில், ஸ்ரீஹரி, குரு, மகிமையை விளக்கும் ஸ்லோகங்களை இயற்றுவதும் ஒன்று. அவர் இவற்றை ஒரு இடத்தில் அமர்ந்து இயற்றினார் என்று சொல்லமுடியாது. தானாகவே, ஆசுகவி என்பதைப் போல, அவர் இவற்றை இயற்றும் சக்தியைப் பெற்றிருந்ததால், ஒரு சிலதை மட்டும் இங்கு கொடுத்திருக்கிறோம்.

1. ஸ்ருஜத்யவத்யத்தி ஸலீலமேதத்
விரிஞ்சிவைரிஞ்சிமுகம் ஸதா ஜகத் |
பராஸ்ய ஷக்திர் விவிதேதி ஷ்ருத்யா
ஸமீடித: ஸ்வாத்மகுணோ ரமேஷ: ||

2. க்ருஷ்ணேதி த்வ்யக்ஷரம் நாம
ஜன்மகோட்யகனஷானம் |
கிம் புன: க்ருஷ்ணபூஜா து
முக்திதேவி ந கிம் ஷ்ருதம் ||

3. அல்பக்ஞத்வாத் க்ருதக்னத்வாத்
விஸ்ம்ருதிர்மயி யுஜ்யதே |
ஸர்வக்ஞத்வாத் தயாலுத்வாத்
விஸ்ம்ருதிஸ்தே ந ஷோபதே ||

4. நமாம்யமதினம் விஷ்ணும்
ஸர்வலோகைக ரக்ஷகம் |
அனாத்யனந்த காலேஷு
விஷ்ணுர்மே பரம: ஸுஹ்ருத் |

5. ஸ்ரீவாதிராஜோ யதிராஜஹம்ஸோ
மன்மானஸே வாஸமுஷைது நித்யம் |
யத்த்யானமாத்ரேண ஸமூலகாதம்
நஷ்யந்தி பாபானி புரார்ஜிதானி ||

## 6. தத்வ நிஷ்ட சிஷ்ய
## ஸ்ரீவித்யா ஸாகர தீர்த்தர்

ஸ்ரீகிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யாஸாகர தீர்த்த ஸ்ரீகளவர், சன்யாஸ தர்மத்தின் மிகச்சிறப்பாக பின்பற்றும் முனி. குருகளைப் போலவே சிஷ்யருக்குக்ம்கூட லௌகிகமே வேண்டாம். ஆசாரங்களை (நித்ய கர்மானுஷ்டானங்கள்) பின்பற்றியவாறு உடுப்பியிலேயே இருப்பார். சஞ்சாரம் மிகக்குறைவு. இவரும் ஏகாந்த ப்ரியரே. அத்யயன அத்யாபனத்தில் கடுமையான ஒழுக்கம் கட்டுப்பாடு. சிந்தனை, மனனம் தொடர்ச்சியாக செய்து வந்தார். பாடம் எடுக்கும் சமயத்தில் ஒரு மனதுடன் சொல்லும் ஆளுமை. வேதாந்த சாகித்ய வியாகரணங்களில் அபாரமான பாண்டித்யம். தேவதா ஆராதனையில் கெடுபிடி இல்லை. அனைத்தும் விதிப்படியே நடக்க வேண்டும். ஆனாலும் நேரத்தை கடைப்பிடிப்பதில் கண்டிப்பு. முக்காலங்களிலும் ஜபம். அப்படியே, மந்திர ஸ்தோத்திரங்களின் படனம். சுருக்கமாக விரைவாக செய்வதில் ஈடுபாடு இல்லை. சம்பிரதாயப்படி நடக்க வேண்டியவை அனைத்தும் சிறப்புடன் செய்வதில் கவனம். ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரின் குருபக்தி அபாரம். குருகளின் பர்யாய காலத்தில் பூஜைகளுக்கு விசேஷமாக உதவி புரிந்தார். மற்ற உற்சவாதிகளிலும் தவறாமல் பங்கு கொண்டார். பூஜ்யரின் ஸித்தாந்த தீக்ஷை, தத்வ நிஷ்டை ஒப்பிட முடியாததாகும். குரு ஸ்ரீவிஷ்வோத்தம் தீர்த்தர் அருளிய பக்தர்கள் மேல் விசேஷ அபிமானம் மற்றும் தயாத்ருஷ்டி. குருகள் ஏற்பாடு செய்த

உற்சவங்களில் மற்றும் பக்தர்கள் நடத்திய குரு வந்தனாதி காரியகிரமங்களில் மிகவும் சிரத்தையுடன் பங்கு பெற்றுவந்தார்.

உடுப்பி, ஸோதெ, பள்ளாரி, கோடேஷ்வர ஆகிய இடங்களில் நடந்த பற்பல உற்சவங்களில் பக்தி சிரத்தையுடன் பங்கு பெற்று வந்தார். ஸ்ரீகளவரின் ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வ தத்வதீக்ஷை மீதான நம்பிக்கை அசைக்க முடியாதது மற்றும் அபூர்வமானது. இதனை எதிர்ப்பவர்களிடமிருந்து முடிந்த அளவு, தூரமாக இருந்தார். சபைகளில் ஸ்ரீராஜரின் ருஜு மகிமைகளை, மிகவும் சிரத்தையுடன் கொண்டாடி வந்தார். குரு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரில் ஸ்ரீமன் நியாய ஸுதா, நியாயாம்ருத, தாத்பர்ய சந்திரிகா, யுக்தி மல்லிகாதி கிரந்தங்களை அத்யயனம் செய்தார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் நான்காம் பர்யாய காலத்தில் நடந்து வந்த யுக்தி மல்லிக பாட சமயத்தில், நேரம் கிடைக்கும்போதெல்லாம் நானும் அங்கு ஆஜர் ஆனேன். அந்த சமயத்தில், ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் அனைத்து வரிகளையும் அப்போதே மனப்பாடம் செய்து வந்தார். அப்போதும் அவருடைய நேரத்தை கடைபிடித்தல் அபாரமாக இருந்தது. ஸ்ரீகளவர் 2022-24ல் நான்காம் பர்யாயத்தை மிகச் சிறப்பாக துவக்க இருக்கிறார்.

ஸ்ரீகிருஷ்ணாபுர மடத்தில் அனேக ஜீர்ணோத்தார காரியங்களை நிறைவேற்றியிருக்கிறார். தம் மூன்றாம் பர்யாயத்தில் ஸ்ரீவாதிராஜ குருசார்வபௌமர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீமுக்யபிராண தேவருக்கு, வெள்ளி கவசம் சமர்ப்பித்து தன்யர் ஆனார். ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸ்ரீமத்வாசார்யரின் 'திதி நிர்ணய'த்தின் படி, பஞ்சாங்கத்தை தயாரிக்க வந்தபோது, ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் அந்த முயற்சிக்கு உறுதுணையாக நின்று, உதவிகளை செய்து வந்தார். குருகளைப் போல அதற்கேற்ப அதனை பின்பற்றவும் முன்வந்தார். இன்றைக்கும் பூஜ்யரின் வழிகாட்டுதலில் 'திதி நிர்ணய' பஞ்சாங்கம் ஒவ்வொரு ஆண்டும் வெளிவந்து கொண்டிருக்கிறது.

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரின் விஷயத்தில் அபாரமான வாத்ஸல்யம் மற்றும் அபிமானம். விஷயம் எதுவாக இருந்தாலும் (நிர்வாக, தாத்விக அல்லது சாஸ்திர சம்பந்தமான), ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரிடம் சொல்ல வேண்டும் என்று சொல்லி வந்தார். குருகளுக்கு தம் வித்யாசிஷ்யரின் ருஜுத்வ தீக்ஷையைப் பற்றி அபாரமான அபிமானம். தம்மைவிட அவரே ஒரு கை மேல் என்று அனேக முறை சொல்லியிருக்கிறார்.

ஒரு முறை ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவருக்கு துஷ்டபிரயோகம் நடந்தபோது, அதனை உடனே அறிந்து, குருகள் அவருக்கு தெரிவித்தார். பிறகு அதன் பரிகார உபாயங்களும் நடந்தன. ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரின் அபாரமான அனுஷ்டான ஸித்தி, ஸ்ரீராஜரின் ஸ்ரீசரணத்தை அடைந்த பக்தர்களுக்கு எப்போதும் அருளட்டும்.

## 6. ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர்

குரு ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதங்களவருக்குப் பிறகு, இந்த பரம்பரையின் பீடாதிபதிகள், ஸ்ரீவிஷ்வவல்லப தீர்த்த ஸ்ரீபாதங்களவர்.

இவருடைய பூர்வாசிரம பெயர் ராகவ. உடுப்பியின் அருகில் உள்ள பாடிகார் கிராமத்தின் ஸ்ரீ ஸ்ரீனிவாஸ தந்த்ரி மற்றும் ஸ்ரீமதி வேதவதி தம்பதிகளின் இரண்டாம் புத்திரர். சிறு வயதிலிருந்தே ராகவன், சாத்விகமாகவே இருந்தார். ஏகாந்த ப்ரியர். வெளியே சென்று விளையாடுவது, கலாட்டாகள் ஆகியவை குறைவு. இவருடைய தாத்தாவான ஸ்ரீகுருராஜ தந்த்ரிகள், உடுப்பி பகுதியிலேயே சாஸ்திர ஞான சம்பன்னர் என பெயர் பெற்றவர். புகழ்பெற்ற ஜோதிடர். அக்கம்பக்கத்தின் அனேக ஆலயங்களின் தார்மிக காரியங்களை தலைமை வகித்து நடத்தி வந்தார். அவருடைய ஏகாதசி விரத அனுஷ்டானம் அற்புதமாக இருந்தது. அவர் ஏகாதசி தந்த்ரி என்றே பெயர் பெற்றிருந்தார். குழந்தை ராகவ பிறந்தபோது, எதிர்காலத்தில் அவருடைய இடம், செய்யப்போகும் அற்புத செயல்களைப் பற்றி அன்றே கணித்து சொன்னார்.

சிறுவன் ராகவன், பள்ளியிலும் தனிமை விரும்பி. அத்யயனத்தைத் தவிர வேறு எதிலும் அவனுக்கு விருப்பம் இல்லை. வீட்டில் இருக்கும்போது, அதிக நேரம் தாயுடன் இருந்து

அவர்களுக்கு உதவி செய்திருந்தான். அக்ஷராப்யாசம் ஆனபிறகு, மந்திர ஸ்தோத்திரங்களை கற்பதில் அதிக விருப்பம். உபநயனம் ஆனபிறகோ, ஜப தப அனுஷ்டான மற்றும் அதிகமான மந்திர ஸ்தோத்திரங்களை கற்பதில் கவனம் செலுத்தினான். ஸாத்விக ஸ்வபாவத்தைக் கொண்டவன் ஆகையால், பொறுமை அதிகம். யாருடைய மனதையும் புண்படுத்தாதவன். பேர், புகழ், பெருமை ஆகியவற்றில் ஈடுபாடு இல்லை. இந்த வம்சம் (வீட்டினர்) முதலிலிருந்தே ஸ்ரீவாதிராஜரின் சன்னிதி மற்றும் அவருடைய ருஜுத்வ மகிமா விசேஷங்களில் அபாரமான சிரத்தை பக்திகளைக் கொண்டிருந்தது.

2005ம் ஆண்டு வாக்கில், அப்போதைய ஸ்ரீஸோதெ மடத்தின் பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், தமது உத்தராதிகாரிகளை தேந்தெடுக்கும் யோசனையில் இருந்தார். அனேக ஜாதகங்களை பரிசீலனை செய்து வந்தார். ஆனால், ஸ்ரீபூதராஜரின், குறிப்பு, பிரஸாதம் ஆகவில்லை. சிறுவன் ராகவனின் ஜாதகத்தை ஆராய்ந்து பார்த்து பிரார்த்தனை செய்தபோது, ஸ்ரீபூதராஜரின் குறிப்பு, பிரஸாதம் கிடைத்தது. இந்த விஷயத்தை ராகவனின் பெற்றோர்களுக்கு கூறியபோது, அவர்கள் இதற்கு ஒப்பவில்லை. குருகள் அமைதியாகி, ஸ்ரீஹரிகுருகளில் பிரார்த்தனையை தொடர்ந்தார்.

இப்படியே நாட்கள் சென்றதில், ராகவனின் தாய்க்கு ஸ்ரீஹயமொகதேவனின் ஸ்வப்ன குறிப்பு வந்தது. அதற்கு அவர் கவனம் கொடுக்கவில்லை. அந்த கனவு திரும்பத்திரும்ப வந்தது. கணவரிடம் கூறினார். அவர்கள் இது 'ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் சித்த' என்று சிந்தித்து, ஸ்ரீராஜரின் ஆராதனா சமயத்தில், (பால்குண சுக்ல சதுர்தசி 2006), ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்திற்கு வந்தனர். க்ஷேத்திர மூர்த்தி ஸ்ரீரமா த்ரிவிக்ரம தேவரின், ஸ்ரீராஜரின் மற்றும் ஸ்ரீபூதராஜரின் தரிசனம் பெற்று, குருகளான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் சன்னிதிக்கு சாஷ்டாங்கமாக வணங்கி, தமது அனுமதியை அளித்தனர். குருகளுக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. ஸ்ரீராஜரின், ஸ்ரீபூதராஜரின் கருணை இது என்று மகிழ்ந்தார். பிறகு, ஆசிரம பிரதானத்திற்கான தயாரிப்புகள் துவங்கி, 13.6.2006 அன்று, ஸ்ரீராஜரின் சன்னிதானத்தின் ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்தில் ராகவ வடுவிற்கு, விதிப்படி, துர்யாசிரமம் வழங்கப்பட்டது. நிறைந்த பக்தர்களின் நடுவில், ஸ்ரீவிஷ்வவல்லப தீர்த்தர் என்று நாமகரணம் செய்து அருளினார். அந்த நாளிலேயே, ஸ்ரீராஜரின் பஞ்சவ்ருந்தாவன சன்னிதியில் பிரணவாதி மந்திர உபதேசமும் ஆயிற்று. சிறுவன் ராகவன், ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர் ஆனார்.

ஆசிரமத்திற்கு தக்க தர்ம பரிபாலனம், அன்றிலிருந்து ஆரம்பம் ஆயிற்று. குருகளிடமிருந்து பரம்பரையின் சம்பிரதாய ரகசியங்களை அறிந்தார்.

முதல் சாதுர்மாதத்திற்குப் பிறகு, ஆராத்ய தெய்வத்தின் மற்றும் ஸ்ரீராஜரின் வ்ருந்தாவன சன்னிதிகளை பூஜிக்கத் துவங்கினார். பிறகு, உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண தேவரை தொட்டுப் பூஜிக்கும் அந்த சுப சந்தர்ப்பமும் வந்தது. குருகளின் விஷ்யாசிஷ்யரான கிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீவித்யா ஸாகர தீர்த்த ஸ்ரீபாதங்களவரில் அத்யயனத்தை தொடங்கினார். 2007ல் குருகளான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் ஸோதெயில் வ்ருந்தாவன பிரவேசம் செய்தார். மடத்தின் நிர்வாகம், ஸ்ரீவிஷ்வவல்லப தீர்த்தரிடம் முழுமையாக வந்தது. ஸ்ரீஹரிகுரு கருணையால் அனைத்தையும் சிறப்பாக செய்யத் துவங்கினார்.

உடுப்பியில் ஸோதெ மடம் நவீனமயம் ஆக்கப்பட்டது. ஸ்ரீஸோதா க்ஷேத்திரத்திலும் தூய்மைக்கு அதிக கவனம் கொடுக்கப்பட்டது. வித்யா குருகளான ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவருடன் ஸோதெயிலேயே சாதுர்மாத விரத்தை அனுசரித்து, அத்யயனங்களை தொடர்ச்சியாக நடத்தினார். எத்தகைய அதிகாரி, மந்திரிகளே ஆகட்டும், பாட சமயத்தில் யாரையும் அவர் சந்திப்பதாக இல்லை. குருகளைப் போலவே சிஷ்யரும் நேரத்தை மதித்தல், பின்பற்றுதல் ஆகியவற்றில் குறியாக இருந்தார். ஸ்ரீத்ரிவிக்ரம உத்ஸவம், ஸ்ரீராஜரின் ஆராதனை, குருகளின் மஹாஸமாராதனைகள் என அனைத்தையும் ஸ்ரீகளவரின் வழிகாட்டுதலின் பேரில் மிகவும் சிறப்பாக செய்யத் தொடங்கினார்.

குருகளின் காலத்தில் துவங்கிய 'பா⁴விஸமீர தத்வபிரஸாரண ப்ரதிஷ்டான' மற்றும் அதற்குக்கீழ் நடக்கும் 'பா⁴விவிஸவீர குருகுல' ஆகியவற்றிற்கு உத்வேகம் கொடுக்கத் துவங்கினார் ஸ்ரீகளவர். கிரந்த பிரகாஷனத்திற்கு ஊக்கம் கொடுப்பதற்கு 'ஸ்ரீமத் வ்ருந்தாவனாசார்யர் சம்ஷோதன மற்றும் பிரகாஷன கேந்திர'த்தை துவக்கினார். அப்படியே, ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ மகிமா ஞானத்தை பரப்பும் வித்வாம்ஸர்களை போற்றும் விதமாக 'ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த மாஸிக வித்வத் ஸம்பாவனா' என்னும் திட்டத்தை துவக்கி, பல வித்வாம்சர்களுக்கு மாதாந்திர சம்பாவனையை கொடுத்து வருகிறார்.

தத்வமல்லிகா – பூஜ்யரின் வழிகாட்டுதலின் பேரில் அச்சாகி வந்து கொண்டிருக்கிறது. ஸோதா க்ஷேத்திரத்திற்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கை தினப்படி அதிகமாகிக் கொண்டெ இருப்பதைக் கண்டு, மிகப்பெரிய போஜனசாலை ஒன்றை ஏற்படுத்தி, அதற்கு 'ராஜதாம' என்று பெயரிட்டு சமர்ப்பித்தார்.

பூஜ்யரின் ஆளுமை பன்முகமானவை. வாமனனாகி, செயல்களை துவக்கினாலும், த்ரிவிக்ரம சாதனை அவருடையது. பர்யாயத்திற்கு முன்னாக, இந்த பாரதத்தை முழுமையாக சஞ்சரித்து, ஸ்ரீரங்காதி க்ஷேத்திரங்களையும் மற்றும் ஸ்ரீகங்காதி தீர்த்தங்களையும் வணங்கினார். ஸ்ரீபத்மனாப தீர்த்தாதி யதி வரேண்யரின் மற்றும் ஸ்ரீபுரந்தர தாசர்யாதி ஹரிதாச வரேண்யரின் சன்னிதி தரிசனம் செய்து தன்யர் ஆனார். குருகளான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரைப் போலவே பூஜ்யருக்கு அனைத்து ஸ்வோத்தமர்களிடம் மிக்க மரியாதை இருந்தது. சன்னிதிகளுக்கு சென்றபோதெல்லாம், அங்கத்திய மகிமைகளை அறிவதில் ஆர்வம் காட்டினார்.

சாஸ்திர உலகில் விருப்பம் காட்டியதைப் போல, நவீன கல்வியிலும் பூஜ்ய ஸ்ரீகளவர் காட்டும் விருப்பம் அபாரம். பூஜ்யரின் பரமகுருகளான ஸ்ரீவிஷ்வேந்திர தீர்த்தரால் நிறுவப்பட்ட, ஸ்ரீஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரால் வளர்ச்சி கண்ட, இன்னஞ்செயில் இருக்கும் கல்லூரியின் வளர்ச்சியில் ஸ்ரீகளவரின் கவனம் அபாரம். ஆங்கில மீடியம் வகுப்புகளும் அதில் உள்ளன.

இன்னும் பூஜ்யரின் பர்யாய வைபவம் மிகச்சிறப்பாக நடந்திருக்கிறது. அனைத்திலும் புதிய விஷயத்தை பார்த்தாற்போல இருந்தது. சிறப்பான பூஜைகள், நித்ய அன்னதானம், பாராயண பிரவசனாதி ஞானயக்ஞ, கிரந்த பிரகாஷன, ஞான வரேண்யரின் ஆராதன ஆசரணை செய்யும் விதம், விசேஷ அலங்காரம், ரதோத்ஸவம், அதிக எண்ணிக்கையில் ஸப்தோத்ஸவம், பல க்ஷேத்திரங்களில் இருக்கும் ஸாதக ஸ்ரேஷ்டர்களுக்கு பரிசு/ சன்மானம், நாட்டிய, சங்கீத முதலான கலை நிகழ்ச்சிகளுக்கு நிரந்தரமான வாய்ப்பு மற்றும் ஊக்கம். பிரம்ம ரதத்தின் புனர் நிர்மாணம் ஒரு சரித்திர நிகழ்ச்சியே ஆகும். சுமார் 220 ஆண்டுகளுக்குப் பின், ஸ்ரீகிருஷ்ணாபுர மடத்தின் ஸ்ரீஸ்ரீவித்யா ஸமுத்ர தீர்த்தர் நிர்மாணித்த, மிகப்பெரிய ரதம், இப்போது சிதிலமடைந்திருந்ததை அறிந்த ஸ்ரீகளவர், அதனுடைய புனர் நிர்மாணத்தை ஸ்ரீஹரி குருகளின் அருளால், மிக விரைவில் செய்து, அதனை ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பித்தார். இந்த நூற்றாண்டின் மிகப்பெரிய சேவை இதுவே என்றாலும் அதில் தவறு இல்லை. இது ஒரு நிரந்தர சேவை. சுமார் 1.60 கோடிகள் வரை இதற்கு செலவு ஆகியுள்ளது. செலவை விட, கால நேரமே முக்கியமானது.

ஸ்ரீகளவரில் இருக்கும் தெய்வ அருளுக்கு இது ஒரு சிறந்த சாட்சியாகும். திட்டங்களை முதலிலேயே தீர்மானம் செய்து, முதலிலேயே அவற்றை பிரசாரம் செய்யாமல் இருந்தாலும், அனேக இப்படியான திட்டங்கள் எவ்வித தடைகளும் இன்றி சரியாக முடிந்திருப்பது, பூஜ்யரின் கர்த்ருத்வ சக்திக்கு சரியான உதாரணமாக இருக்கிறது.

ஸ்ரீகளவரின் ஆசிரம ஒழுக்கம் மிகவும் போற்றத்தக்கது. இதுவே அனைத்திற்கும் காரணமாக இருக்கிறது என்றால் தவறு அல்ல. ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தரின் பர்யாய காலத்தில் 'பாரதிய சாகித்ய மற்றும் தத்வ சாஸ்திரத்தில் ஸ்ரீவாதிராஜரின் பங்கு' என்னும் தலைப்பில் நடத்தப்பட்ட சம்மேளனம் மிகச்சிறப்பாக நடந்தது. ஸ்ரீகளவர், அத்யயன, அத்யாபன, கிரந்த பிரகாஷன, குருகுல போஷண ஆகியவற்றிற்கு அதிக முக்கியத்துவத்தைக் கொடுத்தார்.

பர்யாயத்திற்குப் பிறகு 2015ம் ஆண்டின் சாதுர்மாத காலத்தில், ஸ்ரீமத் வ்ருந்தாவனாசார்யரின் 150ம் ஆராதனை மகோத்ஸவத்தை மிகச்சிறப்பாக வைபவத்துடன் நடத்தி தன்யர் ஆனார். அப்படியே, 2016ம் ஆண்டில், பூஜ்யரின் தலைமையில் ஸ்ரீவேதவேத்ய தீர்த்தரின் 400வது ஆராதனா வைபவத்துடன் நடந்தது. ஸோதெயில் ஸ்ரீத்ரிவிக்ரம ஆலயம், ஸ்ரீராஜரின் சன்னிதிகளுக்கு ஜீர்ணோத்தாரத்தை சங்கல்பம் செய்து, ஸ்ரீஹரி குருகளின் அருளால் அவற்றை துவக்கினார்.

குருகளான ஸ்ரீவிஷ்வ வல்லப தீர்த்தர், விஷ்வகுருகளான ஸ்ரீமத்வ வாதிராஜவரத விஷ்வத்திற்கே வல்லப (தலைவ)னான விஷ்வேஷ த்ரிவிக்ரமாத்மக ஸ்ரீஹயவதனனை விஷ்வமே மெச்சுமாறு பல விதங்களில் ஆராதனை செய்தவாறு நிரந்தர பக்தி ஸம்பன்னராகி, நம் அனைவரையும் அருளட்டும்.

## 7. பூஜ்யரின் தலைமையில் நடந்த விழாக்கள்

அ). ஸ்ரீவாதிராஜரின் **440**வது ஆராதனை (பெங்களூரு)

பா[4]விஸமீர ஸ்ரீவாதிராஜ குருஸார்வபௌமரின் 400வது ஆராதனா நிகழ்ச்சி, மாநிலத்தின் தலைநகரான பெங்களூரில் நடந்தது. பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் மற்றும் ஸ்ரீபாதராஜ மடத்தில் அன்றைய ஸ்ரீவிக்ஞான நிதி தீர்த்தரின் முன்னிலையில் ஸ்ரீராமராய கல்யாண மண்டபத்தில் சிறப்பாக நடந்தது. ஆயிரக்கணக்கான பக்தர்கள் சேர்ந்து பஜனை, ஜயஜயகாரங்களை செய்தனர். வாத்திய வைபவங்கள் நடந்தன. மேடையில் நடந்த நிகழ்ச்சியில், பூஜ்ய ஸ்ரீகளவருடன், நாட்டின் முக்கிய வித்வாம்ஸர்களும் வீற்றிருந்தனர். மூத்த அறிஞரான ஸ்ரீ.K.T.பாண்டுரங்கி அவர்கள், ஸ்ரீராஜரின் கிரந்த சேவையைப் பற்றி அற்புதமாக உரையாற்றினார். சம்ஸ்கிருத, கன்னட என இரண்டு மொழிகளிலும் அவருடைய சேவையை விளக்கினார். யுக்தி என்பதற்கு ஒரு அபூர்வ விவரணையை வழங்கியவர் ஸ்ரீவாதிராஜர் என்றார். அது வெறும் தர்க்கம் அல்ல. அதையெல்லாம் மீறியது. அவருடைய ஸ்தோத்திர ஸாஹித்ய, கன்னடத்திலும் வாத கிரந்த ரசனை, என அனைத்தும் அபூர்வமானவை. யுக்திமல்லிகா ஒரு அற்புத கிருதி. அது வேதாந்த பிரமேயங்களின் அகராதி ஆகும் என்றார்.

ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் 'ஸ்ரீராஜரை ஸ்வரூப மஹிமா ஞானத்துடன் ஆராதனை செய்து, அவருடைய அருளால் அவருடைய கிரந்த மகிமா அர்த்தத்தை நன்றாக அறிய வேண்டும். அப்போது மட்டுமே அவருடைய சேவையினை புரிந்து கொள்ள முடியும். அவருடைய ஸ்வரூப மகிமையை அறியாமல், வெறும் கிரந்த அத்யயனம் செய்தால், அது பலன்களைக் கொடுக்காது. லாதவ்ய ருஜு தேவதையான ஸ்ரீராஜர் எப்படி நிர்தோஷ ஸ்வரூபரோ, அப்படியே அவருடைய கிருதிகளும் ஆகும். குருகளின் முன்னிலையில் நடந்த இந்த உற்சவத்தில் பங்கு பெற்றதற்கு மகிழ்கிறோம்' என்று கூறி அருளினார்.

ஸ்ரீவிக்ஞானநிதி தீர்த்தர் தமது செய்தியில் 'நம் யதி பரம்பரைகளின் மூவர் புகழ் பெற்றவர்கள். ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர். மூவரும் அலௌகிக மஹிமா ஸம்பன்னர் ஆவர். சிறந்த கிரந்தகாரர்கள். ஸ்ரீராஜர் 100கும் மேற்பட்ட கிரந்தங்களை அருளியவர். சம்ஸ்கிருத, ப்ராக்ருத கிருதிகள் அனைத்தும் ஸத்வாத்மகம் ஆனவை. ஷாஸ்திர விஷயங்களில் அவர் ஒரு கோஷ (அகராதி). அவருடைய பஞ்ச வ்ருந்தாவன சன்னிதி அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றக்கூடியதாக இருக்கிறது. ஸ்ரீராஜரின் இந்த உற்சவத்தில் பங்கேற்று தன்யர் ஆகியிருக்கிறோம்' என்று உரையாற்றினார்.

பிறகு, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர், தமது அருளுரையில் 'இத்தகைய உற்சவ ஆசரணைகள் முந்தைய ஞானிகளின் ஞான சம்பத் மற்றும் மகிமா சம்பத்தினை பறைசாற்றுகின்றன. யோக்யதையில் ஸ்ரீமத்வ-ஸமரான ஸ்ரீவாதிராஜர், இந்த இரு வித செல்வத்தின் மூலம் முமுக்ஷு பிரபஞ்சத்தை அருளியிருக்கிறார். இந்த இரண்டில் மகிமா சம்பத்தினை நாம் முதலில் அடைய வேண்டும். ஆகையால், பிரஸன்னராகும் குருகள், ஞான ஸம்பத்தினை நமக்கு அருள்கிறார். ஸ்ரீராஜர் கருணாமயி. அவருடைய பிரஸன்னதைக்கு மகிமா ஞானத்துடனான சரணாகதி ஒன்றே

போதும். வித்வாம்சர்கள் மூலமாக இன்னும் அதிகமான ஞான சேவை ஆகட்டும். அனைவரையும் ஸ்ரீஹரி வாயு குருகள் விசேஷமாக அருளட்டும்' என்று அருளினார்.

**ஆ) ஸ்ரீஜம்புகண்டி வாதிராஜாசார்யரின் ஆராதனா ஷதமானோத்ஸவ**

ஸ்ரீமன் மத்வாசார்யரின் சித்தாந்த சேவை செய்த மகனீயர்களில் யதிகளும், ஹரிதாசர்களும் மற்றும் பிறரும் இருக்கின்றனர். வேதாந்தாதி அனேக சாஸ்திர கிரந்தங்களை படிப்பவர்களுக்காக டிப்பணி முதலானவற்றை இயற்றுவதன் மூலம் சம்ஸ்கிருத மற்றும் கன்னட கிரந்த சேவையையும் செய்தவர்களில் முக்கியமான பங்கு வகித்தவர் ஜம்புகண்டி ஸ்ரீவாதிராஜாசார்யர். பூஜ்ய ஆசார்யர் மகா மேதாவி. வ்யாஸ தாஸ சாகித்யங்களில் தேர்ந்த பண்டிதர்.

வியாஸ ஸாகித்யத்தின் விக்ஞானி என்றால், தாஸ ஸாகித்யத்தின் அறிஞர். சித்தாந்த மண்டனெயில் தக்க தீக்ஷை கொண்ட பண்டிதர். பரவாதிகளை வெல்வதில் சிறந்தவர். ஸ்ரீராஜரின் ருஜுத்வ சமர்த்தனையில் அவர் ஒரு சாம்ராட். ருஜுத்வ அனுசந்தான மற்றும் ஆசரணையில் சிறந்தவர். பிரமேய ஷோதனை மற்றும் விவரணைக்கு பிரமாண சாகரத்தையே கொடுக்கத்தக்கவர். இப்படியாக பூஜ்ய ஆசார்யரின் பெருமை அபாரமானது.

ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் புண்ய தினம் ஒவ்வொரு ஆண்டும் 'குருபர்வ' என்று பள்ளாரியில் கொண்டாடப்படுகிறது. ஞானகார்ய மற்றும் ஸந்தர்ப்பணம் ஆகியவை சிறப்புடன் அங்கு நடக்கிறது. ப்ருஹதி சஹஸ்ர, அணுபாஷ்யாதிகளுக்கு டிப்பணி, ஸ்ரீஹரிகதாம்ருத சாரத்திற்கு சிறந்த வியாக்யானம், சுளாதிகளுக்கு டிப்பணி, ஸ்ரீராஜரின் ருஜுத்வ விரோதி தர்ஷன க்ருதி, ஸர்வஸ்வ தான, அவதூதராக வாழ்தல் ஆகிய குணங்களை கொண்டிருந்த பூஜ்யர் செய்த உபகாரங்கள் ஏராளம். அவருடைய மறைவு 1896ல் ஆனது. அவருடைய ஷதமானோத்ஸவத்தை 1996ம் ஆண்டில் சிறப்பாக கொண்டாட பக்தர்கள் தீர்மானித்தனர்.

இந்த உற்சவத்திற்கு ஸ்ரீஸோதெ மடாதீசரான ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை மற்றும் கிருஷ்ணாபுர மடாதீச ஸ்ரீவித்யாஸாகர தீர்த்தரை அழைத்திருந்தனர். இருவரும் அதற்கு ஒப்புக்கொண்டு, நவம்பர் 23, 1995 அன்று ஹம்பியில் ஸ்ரீ ஆசார்யரின் சன்னிதியில் (ஸ்ரீரகுநந்தன தீர்த்தரின் வ்ருந்தாவனத்தின் அருகில்) உற்சவத்தை துவக்கி வைத்தனர். மாலையில் பள்ளாரியில் இரு ஸ்ரீகளவரின் முன்னிலையில் பல்வேறு நிகழ்ச்சிகள் துவங்கின. 24,25,26 நாட்களில் சம்ஸ்தான தேவரின் பூஜை, ஆக்யான ஹோமம், அனேக வித்வத் மணிகளின் பிரவசனம் மற்றும் சிறப்பான சந்தர்ப்பணை மற்றும் இரு ஸ்ரீகளவருக்கு துலாபாரம் ஆகியவை நடந்தன. மொத்தம் 14,000க்கும் அதிகமான பிராமண சுமங்கலிகளின் சந்தர்ப்பணம் நடந்தது.

இரு ஸ்ரீகளவரும் தமது அருளுரையில் 'ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் அபூர்வ ஆளுமை, ஸித்தாந்த ஸேவை, நிர்வ்யாஜ்ய குரு பக்தி, ஸ்ரீராஜரின் ருஜுத்வ சமர்ப்பணை, தாச சாகித்ய சேவை ஆகிய மகிமா அம்சங்களை நினைவு கூர்ந்தனர். அவருடைய சன்னிதி, பக்தர்களுக்கு கஷ்டங்களை போக்கி இஷ்டங்களை நிறைவேற்றுகிறது என்றனர். பிறகு, ஆசார்யரின் வம்சத்தவர்கள் மற்றும் பக்தர்கள் சேர்ந்து பூஜ்யர் அதிக சம்பந்தம் வைத்திருந்த இடங்களுக்குச் சென்று அவருடைய ப்ரீதிக்காக சமர்ப்பணாதிகளை நிறைவேற்றினர்.

பிப்ரவரி 17,18, 1996 அன்று ஸ்ரீபீமஸேது முனிவ்ருந்த மடாதீசரான ஸ்ரீரகுமான்ய தீர்த்த ஸ்ரீபாதங்களவர் ஷதமானோத்ஸவ நிமித்தமாக பள்ளாரி ஷிரகுப்பாவில் ஸ்ரீஜம்புகண்டி ஆசார்ய கரார்ச்சித / நிறுவிய சன்னிதிக்கு திக்விஜயம் செய்து அனைவரையும் அருளினார். பூஜ்யர் வழங்கிய அருளுரையின் சாரம் இவ்வாறு: 'ஆசார்யரின் உலகப்புகழ் பெற்ற ஆளுமை, ஒப்புமையற்ற திறமை, இடைவிடாத குருபக்தி மற்றும் சேவை, தத்வ தீக்ஷை மற்றும் ஸ்ரீராஜரின் ருஜுமஹிமா சமர்த்தனம் ஆகிய அனைத்தும் நம்மை அருளட்டும். அவருடைய ஸாத்விக வாழ்க்கை மற்றும் சித்தாந்த சேவை நமக்கெல்லாம் வழிகாட்டி ஆகட்டும். நம் பரமேஷ்டி குருகளான ஸ்ரீரகுப்ரவீர தீர்த்தரில், ஆசார்யர் காட்டிய குருபக்தி மற்றும் செய்த சேவை அபாரமானதாகும்'.

இந்த உற்சவத்தின் முடிவு நிகழ்ச்சி மே 21,22 - 1996 அன்று உடுப்பியில் பர்யாய பீடாதிபதி ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் தலைமையில் மற்றும் ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவரின் திவ்ய தலைமையில் ஸ்ரீகிருஷ்ண மடத்தில் சிறப்பாக நடைபெற்றது. அந்த இரு நாட்களில் வ்ருந்தாவனாக்யான ஹோம, பிரவசன, விசேஷ சந்தர்ப்பண, ஸ்ரீமத்வ வாதிராஜரின் கிரந்தங்களின் ஊர்வலம் / ரதோத்ஸவம் ஆகிய நிகழ்ச்சிகள், பூஜ்ய ஸ்ரீகளவரின் வழிகாட்டுதலின்படி மிகவும் சிறப்புடன் நடந்தேறின. முடிவுரை நிகழ்ச்சியில் ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் வழங்கிய செய்தியின் சாரம் இவ்வாறு:

ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யர் நம் பரமேஷ்டி குருகளான ஸ்ரீவித்யாதீஷ தீர்த்தரின் ப்ரியமான சிஷ்யராகி, பரம குருபக்தியை செய்திருக்கிறார். திருப்பதியில் குருகளுக்கு ஸ்ரீனிவாஸ தேவரின் தரிசனம் செய்வித்தது, தென்னிந்திய சஞ்சாரத்தில் குரு சன்னிதிக்கு தங்க நாணயங்களை சமர்ப்பித்தது, காஷ்மீர ராஜன் கொடுத்த பெரிய பல்லக்கியை சமர்ப்பித்தது நம் மடத்தின் வரலாற்றில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யரின் ஸ்ரீராஜரின் ருஜுத்வ தீக்ஷை மற்றும் தாச சாகித்ய சேவையும் அபாரமானது.

நிகழ்ச்சிக்கு தலைமை தாங்கிய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் அருளிய அருளுரையின் சாரம் இவ்வாறு:

ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யர் காட்டிய தாத்விக ஆளுமை, நைத்திக பலம், குருபக்தி மிகவும் போற்றத்தக்கதும், நம் யோக்யதைக்கு தக்கவாறு பின்பற்றத்தக்கதும் ஆகும். ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ சமர்த்தனையின் பாகமாக, அவர் செய்த உதவி அபாரமானது. ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ சமர்த்தனைக்காக அவர் செய்த உதவிகள் அபாரம். அதுவே நமக்கெல்லாம் இன்று தாத்விக ஆகாரம். பிரம்மதேவரை கௌரவித்து, பிரம்மபதவிக்கு தகுதி உள்ள வாயுதேவரை நிந்திப்பது எப்படி தவறோ மற்றும் பாபகரமோ, அதன்படியே வாயுதேவரை கௌரவித்து, வாயு பதவிக்கு தகுதி உள்ள ஸ்ரீவாதிராஜரின் யதார்த்த ருஜு மகிமையை புறக்கணிப்பதும் சரியல்ல. அது மகா பாவத்திற்கு வழி ஆகிறது.

பஞ்சவ்ருந்தாவன சன்னிதி, ஸமபூஜா பரம்பரை, த்வஜஸ்தபஸ்த ஹம்ஸாரூடாக்ருதி, ஷ்ருதி ஸ்ம்ருதி புராணாதி பிரமாணோக்தி மற்றும் நூற்றுக்கணக்கான அபரோக்ஷிகளின் அனுபவ பிரமாணோக்தி இவை அனைத்தும் ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை சந்தேகம் இல்லாமல் நிறுவுகிறது. ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் மொத்த வாழ்க்கையும் இவை அனைத்தின் நிரூபணத்திற்கு ஒரு கைவிளக்காக இருக்கிறது. அவருடைய ஹரிதாச சாகித்ய சேவையும் அமோகமானதாகும்.

**இ) ஸ்ரீஷட்புராசார்யாதி மஹனீயரின்**
**ஆராதனா மஹோத்ஸவம்**

ஸ்ரீஷட்புராசார்யர் (நிப்பாணி ஸ்ரீவாசுதேவாசார்யர்) ஸ்ரீகலகலி ஆசார்யரிடம் வேதாந்தாதி சாஸ்திர அத்யயன செய்தவர். பீமனகட்டெ மடத்தின் ஸ்ரீரகுப்ரவீர தீர்த்தரிடமிருந்து ஸ்ரீராஜரின் ருஜுத்வ தத்வத்தை அறிந்தவர். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரை சரணடைந்து உபாசனா ரகசியத்தை அறிந்து அபரோக்ஷம் அடைந்தவர். ஸ்ரீவாதிராஜ குணரத்னமாலா ஆகிய அனேக கிருதிகளை இயற்றியவர். ஸ்ரீஷ ப்ராணேஷ விட்டல அங்கிதத்தைக் கொண்ட லிங்கசுகூர் ஸ்ரீராமதாசரிடமிருந்து ‘ஸ்ரீபிராணபதி விட்டலா’ என்னும் அங்கிதத்தைப் பெற்று, பத பத்யங்களை இயற்றியவர். ஸ்ரீஹயக்ரீவதேவர், அவதார த்ரய ஸ்ரீமுக்யபிராண தேவர், ஸ்ரீவாதிராஜரின் பஞ்சவ்ருந்தாவன மற்றும் ஸ்ரீபூதராஜரை நிறுவி (ஷஹாபூர – பௌகாவி) ஆராதித்தவர்.

ஆசார்யர் இவ்வுலகை நீத்தது 1902ம் ஆண்டில். அதைப்போல, வாளவேகர் வீட்டின் ஸ்ரீபீமாசார்யரும் 1902ம் ஆண்டில் இவ்வுலகை நீத்திருந்தார். பூஜ்யர் ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரிடமிருந்தும், ஸ்ரீபுட்டுராசார்யரிடமிருந்தும் உபதேசம் பெற்றி சிறந்த அறிஞர்

ஆகியிருந்தார். ஸ்ரீபாகவதாதிகளில் சிறந்தவராக இருந்த ஸ்ரீபீமாசார்யரின், ஸ்ரீராஜரின் ருஜுத்வ தீக்ஷை அபாரம். ருஜுத்வ விரோதிகளின் முன் ஸ்ரீபாகவதாதிகளின் அனுவாத, விஷ்ணுப்ரீதிகரம் அல்ல என்று நிறுத்தியிருந்தார். 2002ம் ஆண்டில் வந்த இந்த இருவரின் ஆராதனா ஷதமானோத்ஸவ மற்றும் வாளவேகர் ஸ்ரீவெங்கண்ணாசார்யர் அருளிய ஹளெஹுப்புள்ளியின் ஸ்ரீஸத்யபோதகுரு மற்றும் ஸ்ரீராகவேந்திரகுரு ஸ்ரீசரணங்களை அடைந்த ஸ்ரீவிஜயீந்திராசார்யரின் (நம் முன்னோர்), ஆராதனா ரஜதோத்ஸவத்தில் பூஜ்ய ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் பங்குபெற்றார். அந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீராஜரின் சன்னிதானத்தில் (ஷஹாபுர – பௌகாவி) உத்ஸவம் விசேஷமாக சிறப்புடன் நடைபெற்றது. சிறப்பான சம்ஸ்தான பூஜை, ஸ்ரீவியாஸமுஷ்டிக்கு மற்றும் ஸ்ரீராஜரின் பாதுகா சன்னிதிக்கு கனகாபிஷேகம் நடந்தது. பிறகு, அங்கத்திய ஸ்ரீஹயக்ரீவாதி பிரதிமா சன்னிதிக்கும் சுவர்ணாபிஷேகம் நடைபெற்றது. அதன்பிறகு, ஸ்ரீகளவருக்கு கனகாபிஷேக, துலாபார, ஸன்மான பத்ர சமர்ப்பணம் ஆயிற்று. இவை அனைத்தையும் வம்ஷிகரான ஸ்ரீஹயவதனாசார்யர், ஸ்ரீ வாதிராஜாசார்யர், ஸ்ரீராகவேந்திராசார்யரின் உறவினர்கள் சமர்ப்பித்து தன்யர் ஆயினர்.

ஸ்ரீபுட்டுராஜார்யரின் சரித்திரம் – புத்தகம் வெளிவந்தது. அனேக வித்வாம்ஸர்கள் அதில் பங்கு பெற்றனர். அவர்கள் அனைவரின் பிரவசனத்திற்குப் பிறகு பூஜ்ய ஸ்ரீகளவர் தம் உரையில் ‘ஸ்ரீபுட்டுராஜார்யரின் ஸ்ரீவாதிராஜ மஹிமாவிஷயக கிரந்த சேவை, ஸ்ரீபீமாசார்யரின் உயர்ந்த தத்வதீக்ஷை மற்றும் ஸ்ரீவிஜயீந்திராசார்யரின் சம்பிரதாய நிஷ்டை அபாரம். ஸ்ரீராஜரின் பக்தர்கள் இத்தகையவரின் ஆசார விசாரங்களை பின்பற்றி அவர்களின் அருளைப் பெறவேண்டும். ஸ்ரீஜம்புகண்டி ஆசார்யரின் அருளைப் பெற்ற வம்சத்தவராக இருந்ததால் இந்த தத்வதீக்ஷை உங்களுக்கு அப்படியே வந்திருக்கிறது’ என்று கூறினார்.

இதே சமயத்தில் பௌகாவியின் ஸ்ரீவீணாபாணி மந்திரத்தில் ஸ்ரீராமாசார்ய குடும்பத்தவர்கள், ஸ்ரீமடத்தின் சம்ஸ்தான பூஜையை நிறைவேற்றி அருளைப் பெற்றார்கள். அன்று மாலையில், நகரின் சாலைகளில், யானை மேல் சர்வமூல கிரந்தங்கள் மற்றும் ஸ்ரீராஜரின் கிரந்தங்களின் ஊர்வலம் மற்றும் ஸ்ரீகளவரின் ஷோபாயாத்ரெ ஆகியவை விசேஷமாக நடந்தன. அடுத்த நாள் வாள்வேகர் ஸ்ரீவாசுதேவாசார்ய குடும்பத்தவர்கள் சம்ஸ்தான பூஜை, சந்தர்ப்பணை முதலான விசேஷ சேவைகளை செய்து, தன்யர் ஆயினர்.

**ஈ. ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை –**
**அகில பாரத ஹரிதாஸ சம்மேளன**

மைசூரின் ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர், ஸ்ரீவேணுகோபால விட்டலரின் பரம்பரையை சேர்ந்தவர். அவர் குருகோவிந்த விட்டலா என்னும் அங்கிதத்தில் நூற்றுக்கணக்கான பத பத்யங்களை, உபநிஷத்களின் அனுவாத கிருதிகளை இயற்றியிருக்கிறார். அனேக யதிகளின் மற்றும் ஹரிதாசர்களின் சரித்திரத்தின் கிருதிகளை வெளியிட்டிருக்கிறார். தாசருக்கு ஸ்ரீராஜரின் ருஜுத்வ மற்றும் ஆக்யானத்தைப் பற்றி விசேஷ கௌரவம் இருக்கிறது. அதனை விளக்கும் கிருதி ரசனை மற்றும் ஆக்யானத்தின் அனுவாத புத்தகம் மற்றும் அதன் வெளியீடு ஆகியவை நடந்தன. தாசர் ஒவ்வொரு ஆண்டும் ‘ஸ்ரீபுரந்தரதாசரின் உற்சவம் மற்றும் அகில பாரத ஹரிதாஸ சம்மேளனத்தை’ துவங்கி நடத்தி வந்தார். இந்த சம்மேளனம் மற்றும் தாசரின் ஆராதனை ஸோதெயிலும் நடந்திருக்கிறது. 1996-97ம் ஆண்டில் ஸ்ரீஸோதெ மடத்தின் பர்யாய காலத்தில் உடுப்பியிலும் நடந்திருக்கிறது. ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் இந்த ஆராதனா சம்மேளனத்தில் தானே பங்குபெற்று, நிகழ்ச்சியின் வெற்றிக்கு காரணமாக இருந்தார். உடுப்பியில் நடந்த சம்மேளனத்தில் தலைமை பொறுபை வகித்து அருளுரையை வழங்கியவாறு ‘சாமான்யருக்கும் தத்வோபதேசம் செய்யும் விசேஷ வழியே தாச சாகித்யம். ஸ்ரீபுரந்தரதாசரில் துவங்கி, அனைத்து ஹரிதாசர்களும் அதன் சேவையை செய்திருக்கின்றனர். ஆகையாலேயே, ஹரிதாச பரம்பரை ஸ்ரீராஜரின் ருஜுத்வத்தை தத்வம் என்று நம்பிக் கொண்டிருக்கிறது. உடுப்பியின் நாயகன் ஸ்ரீகிருஷ்ணன் அனைத்து ஹரிதாசர்களுக்கு இஷ்ட தெய்வம். ஸ்ரீஹரிதாசர்களால், ஸ்ரீமத்வரின் தத்வமான பாகவத தர்ம ரூபத்தினால் அனைவரின் வீடுகளையும் அடைந்திருக்கிறது. ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர் ஹரிதாச பரம்பரையை

அபாரமாக வளர்த்திருக்கிறார். அவருடைய நோக்கம், இந்த ஆராதனா, சம்மேளனங்களால் நிறைவேறட்டும். ஸ்ரீகிருஷ்ண முக்யபிராண மத்வ வாதிராஜர் ஆகியோர் அனைவருக்கும் ஆசிர்வதிக்கட்டும் – என்று நிறைந்த பக்தர்களுக்கிடையே அருளுரை ஆற்றினார்.

**உ. ஸ்ரீகளவரின் ஷட்ஷ்யப்த உற்சவ (கோடேஷ்வர)**

ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் வேதாந்த சாம்ராஜ்ய பீடாரோஹண சுவர்ண மகோத்ஸவ மற்றும் 60ம் வார்தந்தி உற்சவம் கோடேஷ்வரத்தில் 12, 13, ஜனவரி 1993 அன்று மிகவும் விமரிசையுடன் நடைபெற்றது. கோடேஷ்வர பகுதியின் பக்தர்கள், ஆயிரக்கணக்கில் இந்த நிகழ்ச்சிக்கு வந்து பங்கேற்றனர்.

12ம் தேதி அன்று ஹூவினகெரெ முக்ய த்வாரத்திடம் அனைவரும் சேர்ந்தபின், மாலை 5மணிக்கு பூஜ்ய ஸ்ரீகளவரின் ஷோபா யாத்திரை துவங்கியது. பல வித வாத்ய வைபவம், ஆட்டங்கள், பதாகைகள், பஜனா கோஷ்டிகள், வேத கோஷ ஆகியவை அபூர்வமாக இருந்தன. அந்த சம்பிரமம், உடுப்பியின் பர்யாய ஊர்வலத்தை நினைவுபடுத்துவதாக இருந்தது. கோடேஷ்வர வழி முழுவதும் பேனர்கள், தோரணங்கள் படபடத்துக் கொண்டிருந்தன. கோடேஷ்வரத்தின் ரத வீதியிலும் விசேஷ அலங்காரங்கள் செய்யபட்டிருந்தன. ஊர்வலம், ஹயவதன மண்டபத்திற்கு வந்தபோது, அங்கிருந்த அறிஞர்கள் ஸ்ரீகளவரை பக்தி மரியாதையுடன் வரவேற்றனர்.

ஸ்ரீராம மந்திரத்தில் இரவு விசேஷ பூஜை (ஸ்ரீபூதராஜரின் பிரஸன்ன பூஜையுடன்) நடந்தது. அடுத்த நாள் வார்தந்தியின் அங்கமாக அனேக ஹோம, ஹவனங்கள் நடைபெற்றன. அன்று நைவேத்தியத்திற்கு 60 பக்ஷ்ய போஜ்யங்களை சமர்ப்பணம் செய்தனர். பிராமண ஸந்தர்ப்பணத்திற்குப் பிறகு, மதியம் 3 மணிக்கு ஹயவதன மண்டபத்தில் ஸ்ரீபேஜாவர மடாதீசரான ஸ்ரீவிஷ்வேத தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் தலைமையில் சபா நிகழ்ச்சிகள் துவங்கின. மேடையில் ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் மற்றும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தர் வீற்றிருந்தனர். வேதகோஷம், வரவேற்பு, மாலை அர்ப்பணம் ஆகியவை ஆனபிறகு, கோடேஷ்வர பகுதியின் முக்கியஸ்தர்கள் அனைவரும் சேர்ந்து, ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தருக்கு கனகாபிஷேகம், துலாபாரம் சமர்ப்பித்தனர். வார்தந்தி நினைவாக 60,000 ரூபாய் நிதியை சமர்ப்பித்தனர். சன்மான பத்திரத்தை படித்து, வஸ்திர, பல தாம்பூலங்களுடன் கௌரவித்தனர். ஸ்ரீ B.P. நாகபூஷண ராயர் எழுதிய ‘ஸ்ரீஸ்வாப்ன வ்ருந்தானாக்யான’ கிரந்தம் லோகார்ப்பணம் ஆயிற்று. இதனுடன் பல இதர புத்தகங்களும் வெளியாயின. ‘விஷ்வஸௌரப’ நினைவு மலரை, ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் வெளியிட்டார்.

நிகழ்ச்சியில் ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் ‘ஸ்ரீராஜரால் அருளப்பட்ட கோடேஷ்வர பகுதியின் சிஷ்ய, பக்தர்களின், சிரத்தை, பக்தி அபாரமானது. ஸ்ரீகுருராஜரிடமிருந்து தப்த முத்திரையை ஏற்று, வைஷ்ணவ தீக்ஷையைப் பெற்று உங்களுடைய முன்னோர், வம்சத்தவர் மற்றும் நீங்கள் அனைவரும் ஸ்ரீஹரிகுரு ஸன்னிதிக்கு விசேஷ சேவை செய்திருக்கிறீர்கள். ஸ்ரீவாதிராஜரால் அருளப்பட்ட செல்வத்தினை அவருடைய அந்தர்யாமிக்கு சமர்ப்பித்து தன்யர் ஆகியிருக்கிறீர்கள். ஸ்ரீ நாகபூஷண ராயர் வ்ருந்தாவனாக்யானத்தை அனுவாதம் செய்து, ஸ்ரீராஜரின் பக்தர்கள் அனைவருக்கும் உதவி செய்திருக்கிறார். ஸ்ரீராஜரின் ஸ்வரூப மகிமை மற்றும் வ்ருந்தாவன மகிமையை ஸ்ரீகிரந்தத்தின் மூலமாக அறிந்து அனைவரும் மேம்பட வேண்டும். ஸித்தாந்த சேவை சமாஜ சேவையை அற்புதமாக செய்து வரும் பூஜ்ய ஸ்ரீபேஜாவர ஸ்ரீகளவரின் திவ்ய சன்னிதி நம் அனைவருக்கும் மிக்க மகிழ்ச்சியை கொடுக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர் ஞான வைராக்ய பூஷிதர், ஸ்ரீராஜரின் ஸ்ரீபூதராஜரின் ஸ்வரூப மகிமாஞான சம்பன்னரும் ஆகியிருக்கிறார். பர்யாயாதிகளை வைபவத்துடன் நடத்தியிருக்கிறார். அவருடைய வருகையும் நமக்கு மகிழ்ச்சி கொடுக்கிறது. தாம் சமர்ப்பித்த சன்மானாதிகள் அனைத்தும் ஸ்வாமிக்கே சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீஹரி வாயுகுருகள் விசேஷமாக அருளட்டும் – என்று கூறினார்.

பிறகு, ஸ்ரீகிருஷ்ணாபுர ஸ்ரீகளவர், 'குரு சிஷ்ய சம்பந்தத்தின் சிறப்பினை நாம் இங்கு காண்கிறோம். ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவரின் மற்றும் கோடேஷ்வர பக்தர்களின் சம்பந்தம் சிறப்பாக இருக்கிறது. நம் வித்யா குருகளான ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் நம் பர்யாயத்தில் மற்றும் மற்ற ஸமயத்திலும் நமக்கு தக்க வழிகாட்டியாகி பேருதவி புரிந்திருக்கிறார். பூஜ்யரின் வர்தந்தி உற்சவத்தில் பங்கு பெற்று தன்யர் ஆகியிருக்கிறோம்' என்று உரையாற்றினார். ஸ்ரீஹரிகிருஷ்ண புனரூரு அவர்கள் குருவந்தன நுடிகளை வழங்கினார்.

நிகழ்ச்சியின் தலைமை வகித்த ஸ்ரீபேஜாவர ஸ்ரீகளவர் 'இந்த வர்த்தந்தி உற்சவம் விசேஷமானது. நீங்கள் அனைவரும் ஸ்ரீவாதிராஜரின் பக்தர்கள். ஸ்ரீவாதிராஜரின் விசேஷ சன்னிதானம் இருக்கும் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரை கௌரவித்து குருகளின் விசேஷ அருளை பெற்றிருக்கிறீர்கள். ஸ்ரீஸோதெ ஸ்ரீகளவர் வைராக்ய, தபஸ், வித்யைகளின் உருவமாக இருக்கிறார். அவருடைய இந்த வர்தந்தி உற்சவத்தின் சம்பிரமம் அற்புதமாக இருக்கிறது. உங்களின் குருபக்தி ஒப்பிடமுடியாததாக இருக்கிறது. ஸ்வபாவத்தினாலும், ஸமர்ப்பித்த சேவைகளாலும் 'கோடேஷ்வர' என்னும் பெயரை அர்த்தமுள்ளதாக ஆக்கியிருக்கிறீர்கள். ஸ்ரீஹரி வாயு குருகளின் ஸ்ரீவிஷ்வோத்தம தீர்த்தரின் அருள் சிஷ்யோத்தமர்களான உங்கள் மேல் நிரந்தரமாக இருக்கட்டும்'.

இதன்பிறகு, வந்தன அர்ப்பணத்துடன் நிகழ்ச்சி முடிவடைந்தது.

***

### ஊ. ஸ்துதிகளின் தொகுப்பு:

ஸ்ரீவிஷ்வோத்தம தேஷிகேந்திர வரதப்ரோத்பாஸி பாதத்வய
ஸ்ரீமன் மத்வமுனீந்திர பாவிமருதஸ்ரீவாதிராட் ஸேவிதம் ।
முக்தாமுக்த நியாமகம் ஷ்ருதினுதம் ஷங்காக்ஷ முத்ரோஜ்வல
வித்யாபோதக புஸ்தகேன மஹிதம் வந்தே ஹயாஸ்யம் முதா ।।

விஷ்வஸ்யோதய ரக்ஷணாதி மஹிமா விஷ்வாத்ம கோ஽னன்யக:
விஷ்வேஷம் ஸமுபாஸதே விதிமுகா விஷ்வாத்மபுத்யா ஸதா ।
விஷ்வம் ஸத்யமிதம் சராசரமிதம் விஷ்வேஷதா தர்ஷிதா
விஷ்வம் தம் கலு பூஜயன் விஜயதே விஷ்வோத்தமாக்யோ குரு:।

காம: கம்பித ஏவ நிக்ரஹபலாத் க்ரோதஸ்தஸ்த்வதஸ்தாத் க்ருதோ
லோபோ லுப்தகதிஷ்ச துஷ்டஹ்ருதயான் மோஹோ஽பி தூரிக்ருத:।
கர்த்ருத்வாதி ஸுசிச்ந்தனேன ச மதோ நஷ்டஸ்ததா மத்ஸர:
ஷட்வைரீன் ஸுவிஜித்ய ஸோ விஜயதே விஷ்வோத்தமாக்யோ குரு: ।।

வித்யா சேத் பிரம்மவித்யா ஷ்ருதிஸ்ம்ருதிஸுபகா வ்யாஸதேவ ப்ரணீதா
தத்வம் சேத் பிரம்மதத்வம் நிகிலகுணகணைர் மண்டிதம் சாப்யனாதி ।
ஷாஸ்திரம் சேன்மோக்ஷ சாஸ்திரம் சுகமுனி குருராட் ஸத்ருதம் சேதி நித்யம்
பக்தாட்யான் ப்ரதி போதயன் விஜயதே விஷ்வோத்தமாக்யோ குரு: ।।
ஸ்ரீவிஷ்வோத்தம யோகிவர்ய கருணாபீயூஷ தாராம் கலு
த்வத்வாதாப்ஜ நிஷேவிபக்த ஸுஜனஸ்தோமே ஸதா வர்ஷய ।
தேன த்வத் ஹ்ருதயாப்ஜ மந்திரகதோ வாதீஷவந்த்யோ ஹரி:
மத்வேஷோ பவது ப்ரியோ குணமணி: ஷிஷ்டேஷ்ட தோ஽ நிஷ்டஹ்ருத் ।।

யத்தர்ஷனம் ஸகலதீர்த்த நிஷேவணம் ஹி
யத்பாரதீ ஸகலமங்கல வர்ஷணீ ச ।
யத்ஸன்னிதி: பரம பூருஷ ஸன்னிதானம்
தம் நௌம்யஹம் ப்ரணத பக்தஸுகல்ப வ்ருக்ஷம் ।।

ஸ்ரீவிஷ்வவல்லப கராப்ஜ ஸுபூஜிதாங்க்ரே
ஸ்ரீவிஷ்வ வல்லப பதார்ச்சன திவ்யகீர்த்தே
ஸ்ரீவிஷ்வவல்லப ஸமீர பதார்ஹஸக்த
ஸ்ரீவிஷ்வஸத்தம குரோ பகவன் நமஸ்தே ||

கதா ஷ்ரத்தாபக்த்யா குருசரண பங்கேருஹவரம்
ஸதா பூஜ்யை: பூஜ்யம் விமலமதிபிர் வர்ண்ய விபவம் |
ஹ்ருதா த்யேயம் கேயம் பஜகபவனாஷம் விததம்
முதா மான்யம் ஸேவே ஸகலஷுபமூலம் ஸுககரம் ||

பாவகூபபதிதம் குணஹீனம்
ஷாஸ்திர பாவவிமுகம் மதயுக்தம் |
ஆர்யமான ரஹிதம் ஷடதுல்யம்
த்வத்ஸ்ம்ருதி ஸ்த்வது மாம் பவஷோகாத் ||

வாதீஷரசிதம் கங்காஸ்தோத்திரம் ஸத்தர்ம ஸன்னிதௌ |
படதோ குருவர்ணஸ்ய கங்கா ப்ரத்யக்ஷதாம் கதா ||

ஸ்ரீவாதிராஜ குருராஜ முகாரவிந்தாத்
ஸ்வப்னே த்வஜஸ்ய விஹிதம் ஷுபதம் ப்ரமாணம் |
ஆக்யானமத்புததமம் ஷ்ருதி ஸம்மதம் ச
சக்ரே ஷிலாஸ்தமசிராத் குருபிந்ததுஷ்ட்யை ||

ஸோதாபுரே ஸித்தஜனாஸ்பதே ஹி
வாதீஷ வந்த்யஸ்ய புரஸ்த்வ மேவம் |
வ்ருண்டஹவனே பாஸி புத்தை: ஸமீடிதோ
ஆராதயன் பாவி ஸமீரதேவம் ||

ஸமீர வாதீஷ ஸமர்ச்சிதாங்க்ரி:
ரமாரமேஷோ ரமதே ஹி நித்யம் |
ஸுபோதராஜாதி குரூத்தமானாம்
ஸுஸன்னிதிஸ்தத்ர பரா சகாஸ்தி ||

மன்யேऽஹம் பஹுஜன்ம புண்யஜபலம்
விஷ்வோத்தமாக்யஸ்ய ஹி
மான்யேऽஸ்மின் குருவாதிராஜ முனிராட் ஸத்யன்னிதாவத்ய ச |
தன்யோऽஹம் வரதுங்க பத்ர பலதம் வ்ருந்தாவனம் ஸத்குரோ:
மான்யம் மானித தர்ஷனம் புதனுதம் த்ருஷ்ட்வா ச ஹ்ருஷ்டோऽபவம் ||

த்வம் ந: பிதா ச ஜனனி குருஸத்தமஸ்த்வம்
த்வம் சாபி நோ குலகுரு: ஸகலேஷ்டதாமே |
த்வம் ந ஸகா ஸகலக்லேஷ விதூரகாரீ
த்வம் பாக்யதெய்வமிதி நோ ஹிதபாக்யதாயி ||

அந்திமக்லேஷ தூரஸ்து ஹ்யந்திமாகம போதிதம் |
ஸ்வாந்தர் நிதாய லக்ஷ்மீஷம் அந்தே ஸ்ம்ருத்வா யயௌ முதா|

ராமராமேதி ராமேதி ராமதார மந்த்ரயுக் |
ராமஸ்ய பாதமூலே ஹி ரமஸே த்வம் ந சம்ஷய: ||

ஷுபேன கர்மணாऽனேன ப்ரீணாது ஸ்ரீபதி:ஸதா |
வாதீஷ புஜகோ மத்வஹ்ருத்கோ யஸ்துரகானன: ||

**ஏ. ஸ்துதி பத:**

ராகம்: கானட. தாள; ஆதி

ஸ்ரீ விஷ்வோத்தம யதிவர நிம்மய
பாதத்வயகளிகெ நமிஸுவெனு ||ப

ஸ்ரீவிஷ்வம்பரன பூஜிஸுவாயதி
ஸ்ரீவிஷ்வேந்திரர குவர நிம்மடிகளிகெ ||அப

மந்தரதர மத்வேஷன தயதலி
ஸுந்தர க்ராம உத்யாவரதலி
தந்தெ க்ருஷ்ணார்யர திவ்ய ஸதனதலி
பந்திரீ தரெகெ ஸ்ரீமாதவன நாமதலி ||1

வருஷ எண்டரலி உபநீதராகி நீவு
ஹருஷதி காயத்ரி ஜபிஸுதரெ
குருவர விஷ்வேந்திர தீர்த்தரு கருணதி
கரெது பீடதி விஷ்வோத்தமனெந்தருஹிதரு ||2

வத்ஸரகளைவத்து பீடதி பருதிரலு
உத்ஸவகெ கரெதந்து ஸத்யதர்மரலி
பக்தரு ஸுவர்ண அபிஷேக மாடுதிரலு
பக்தவத்ஸல உடுப்பி கிருஷ்ணபதிய தோரிஸித ||3

இயற்றியவர்: ஸ்ரீ S.R. பிரகலாதாச்சார்

***